# கல்கி

# பொருளடக்கம்

மலர் 12
இதழ் 23 | 1953 ஜனவரி 4 | நந்தன ௵ மார்கழி 21


பொங்கல்
வெளியீடு




மலர் 12 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார். | இதழ் 23

# தமிழருக்குச் சோதனை வருஷம்

புதிய 1953-ம் ஆண்டு பிறந்திருக்கிறது. பிறக்கும்போதே தமிழர்களுக்கு ஒரு 'சவால்' விட்டுக்கொண்டு பிறந்திருக்கிறது. "தாரா சிங், கிங்-காங் ஆகியோர் ஒருவருக்கு ஒருவர் விடுத்த சவால்களைக் கேட்டுக் கைகொட்டி ஆர்ப்பரித்தீர்களே? அப்படி வேடிக்கை பார்ப்பதுடன் நின்றுவிடப் போகிறீர்களா? அல்லது உங்கள் சொந்தக் காரியத்திலும் கொஞ்சம் உற்சாகம் காட்டப் போகிறீர்களா?" என்று புதிய 1953-ம் ஆண்டு தமிழர்களைக் கேட்கிறது. "எங்கே, உங்கள் சாமர்த்தியத்தைப் பார்த்து விடலாம். சென்னை நகரத்தையும் சித்தூர் ஜில்லாவிலுள்ள தமிழ்ப் பிரதேசங்களையும் பாதுகாத்துக் கொள்ளப் போகிறீர்களா? அல்லது அவற்றைப் பறிகொடுத்து விட்டு வாயிலே விரலை வைத்துக் கொண்டு நிற்கப் போகிறீர்களா?" என்று தமிழர்களைப் பார்த்து 1953-ம் ஆண்டு 'சவால்' விடுகிறது!

* * * *

ஆந்திர மாகாணப் பிரிவினை என்பது இப்போது நிச்சயமாகி விட்டது. அதைப் பற்றி நமக்குச் சிறிதும் ஆட்சேபம் இல்லை; எப்போதும் ஆட்சேபம் இருந்ததில்லை. நாளது 1953-ம் வருஷத்திற்குள் ஆந்திரர்கள் தங்கள் மாகாணத்தைப் பிரித்துக் கொண்டு போய்ச் சேர்ந்தார்களானால், நாம் மிக்க மகிழ்ச்சி அடைவோம். மாலை போட்டு மேள தாளங்களுடன் அனுப்பி வைப்போம். ஆனால் அப்படிச் சுமுகமாக அவர்கள் பிரிந்து போவார்கள் என்று தோன்றவில்லை.

நியாயமாக இரண்டு மூன்று வருஷங்களுக்கு முன்னாலேயே ஆந்திரப் பிரிவினை நடந்திருக்க வேண்டியது; நடந்திருக்கவும் கூடும். ஆனால் ஆந்திரத் தலைவர்களின் ஒற்றுமைக் குறைவினாலும் அவர்களில் பலர் சென்னை நகர்மீது அதிக்கிரம பாத்தியதை கொண்டாடியதனாலுமே தடைப்பட்டு நின்றது. ஆந்திரத் தலைவர்கள் பலருக்குத் தனி மாகாணம் வரக்கூடாது என்பது மனத்திற்குள் எண்ணம். உதாரணம் வேண்டுமானால், ஸ்ரீ டி. பிரகாசம் சென்னையின் முதன் மந்திரியா யிருந்த ஒன்பது மாத காலத்தில் என்ன நடந்தது என்று நினைத்துப் பாருங்கள். ஆந்திர மாகாணப் பிரச்னையைப் பற்றி ஆந்திரர் ஒருவரும் அப்போது வாயைத் திறக்கவில்லை. ஆந்திரத் தலைவர்களில் மிகப் பெரும்பாலோர் அரசியலில் ஆதிக்கம் பெறுவதற்குச் சாதனமாகவே ஆந்திர மாகாணக் கிளர்ச்சியைக் கைக்கொண்டிருக்கிறார்கள். பாவம்! பொட்டி ஸ்ரீராமுலுவின் பரிதாப மரணத்தினால் ஆந்திர மாகாணம் ஏற்பட்டே தீரும் என்ற நெருக்கடி இப்போது ஏற்பட்டு விட்டது. ஆகவே, ஆந்திரத் தலைவர்கள் சங்கடப்படுகிறார்கள். விஷயம் சுலபமாக முடிந்துவிடப் போகிறதே என்று அஞ்சுகிறார்கள். எந்தெந்த விதத்தில் தகராறுகளைக் கிளப்பலாம் என்று மூளையைக் குழப்பிக் கொண்டு யோசிக்கிறார்கள். அதற்கு முயற்சியும் செய்து வருகிறார்கள்.

முக்கியமாக, ஆந்திரத் தலைவர்கள் தகராறு கிளப்பும் விஷயம் சென்னை நகரைப் பற்றியது. நடுநிலைமை நோக்குடன் இந்த விஷயத்தைக் கவனித்தவர்கள் அனைவரும் சென்னை நகர்மீது ஆந்திரர்கள் உரிமை கொண்டாடுவது நியாயமில்லை என்று சொல்லி யிருக்கிறார்கள். ஆனால் நியாயத்தைப் பற்றி ஆந்திரத் தலைவர்கள் கவலைப்படவில்லை. தடலடிப் பிரசாரத்தினாலும் ஆர்ப்பாட்டக் கிளர்ச்சிகளினாலும் காரியத்தைச் சாதித்துக் கொள்ள எண்ணுகிறார்கள். பொட்டி ஸ்ரீராமுலுவின் மரணம் சம்பந்தமாக விஜயவாடா முதலிய இடங்களில் நிகழ்ந்த காரியங்கள் அவர்களுக்குச் சற்று அதிக தைரியத்தை ஊட்டி யிருக்கிறது. "கலவரம் செய்து தனி மாகாணம் அடைந்தோம்; கலவரம் செய்தே சென்னையையும் பிடிப்போம்" என்ற ஆசையும் நம்பிக்கையும் அவர்களில் பெரும்பாலோருக்கு உண்டாகி யிருக்கிறது. நியாயமாக நடந்து கொள்வார்கள் என்று நாம் இத்தனை காலமும் எதிர்பார்த்த தலைவர்கள் கூட வெறி கொண்டவர்கள் போல் பேசுகிறார்கள்; தீர்மானமும் போடுகிறார்கள்.

சென்னை நகர்மீது அதிக்கிரமப் பாத்தியதை கொண்டாடும் ஆந்திரத் தலைவர்களின் கோரிக்கைகளை நாலு விதமாகப் பிரிக்கலாம்.

"சென்னை நகரம் ஆந்திரர்களின் தனிச் சொத்து" என்று கூறும் பகாசுரக் கோரிக்கை.

"சென்னை நகர் ஆந்திரருக்கும் தமிழருக்கும் பொதுச் சொத்து. ஆகையால் சென்னை நகரை இரண்டாகத் துண்டித்து விடவேண்டும்" என்று சொல்லும் கம்ஸ ராட்சஸக் கோரிக்கை.

"சென்னை நகர் ஆந்திரருக்கு இல்லை யென்றால், தமிழருக்கும் இருக்கக் கூடாது. ஆகையால் அதைப் புது டில்லியின் நேராட்சிக்குட்பட்ட கமிஷனர் மாகாண மாக்கவேண்டும்" என்று சொல்லும் கபந்தக் கோரிக்கை.

"சென்னை நகர் உரிமை விஷயத்தைப் பிற்பாடு தீர்த்துக் கொள்ளலாம். இப்போதைக்குப் புதிய ஆந்திர மாகாணத்தின் தலைநகரை வைத்துக் கொள்ளச் சென்னையில் இடங் கொடுங்கள் !" என்று கேட்கும் மாரீசக் கோரிக்கை.

ஆந்திரத் தலைவர்களுக்குள்ளே காங்கிரஸ் வாதிகள் நியாயமாகவும் நேர்மையாகவும் நடந்து கொள்ளக் கூடும் என்று நாம எதிர்பார்த்தோ மல்லவா ! அதுவும் பொய்யாகி விட்டது. நேரு அறிக்கைக்குப் பிறகு ஆந்திர மாகாண காங்கிரஸ் கமிட்டி செய்திருக்கும் தீர்மானம் ஸ்ரீ பிரகாசம் கோஷ்டியின் பேராசை வெறியையும் தூக்கி அடிப்பதாக இருக்கிறது. ஏககாலத்தில் அவர்கள் கபந்தர்களாகவும் மாரீசர்களாகவும் விளங்க முயன்றிருக்கிறார்கள். "சென்னை நகரைத் தனி மாகாண மாக்கவேண்டும். சென்னைப் பிரச்னை முடியும் வரையில் ஆந்திர மாகாணத்தின் தலை நகரம் தாற்காலிகமாகச் சென்னையில் இருக்க வேண்டும்" என்று கேட்டிருக்கிறார்கள்.

*　　　*　　　*

ஆந்திரத் தலைவர்களின் நாலு வகைக் கோரிக்கைகளில் எதையும் தமிழர்கள் ஒப்புக் கொள்ள இயலாது. ஒப்புக் கொள்வது பேரபாய மாக முடியும்; பின்னும் பெரிய விபரீதங்கள் ஏற்படுவதற்கு இடமாகும்.

ஆந்திரத் தலைவர்கள் சும்மா இருக்கப் போவ தில்லை என்பது நிச்சயம். அவர்களுக்குள்ளே பல கட்சிகள் இருக்கின்றன. புதிய மாகாணம் ஏற்படும் தறுவாயில் ஒவ்வொரு கட்சியினரும் ஆந்திர மக்களிடையே அதிக செல்வாக்குப் பெறப் பிரயத்தனம் செய்வார்கள். அதற்கு வேறு வழி ஒன்றுமில்லை. ஆதலின் "சென்னை நகரைப் பிடிக்கப் போகிறோம்" என்ற கூக்குரலைக் கிளப்பி ஆந்திர மக்களிடையே செல்வாக்குப் பெற முயற்சிப் பார்கள். ஒருவரைக் காட்டிலும் ஒருவர் அதிக வெறியை மூட்டப் பார்ப்பார்கள். இவ்வளவும் 1953-ம் வருஷத்தில் நடக்கப் போகிறது.

இந்த நிலையில் தமிழர்கள் என்ன செய்யப் போகிறார்கள் என்பது கேள்வி. "தூங்கிய கன்று கடாக் கன்று" என்ற பழமொழியைத் தமிழர் களுக்கு நினைவூட்ட விரும்புகிறோம். "நியாயம் நம் பக்கம் இருக்கிறது. நாம் எதற்குக் கவலைப் படவேண்டும் !" என்று சும்மா இருத்தல் பெரும் கஷ்ட நஷ்டத்தில் முடியும். இந்த நாளில் ஒருவ ருடைய கட்சியில் நியாயம் இருந்தால் மட்டும் போதாது. அந்த நியாயத்துக்காகப் போராடவும் சித்தமா யிருக்க வேண்டும். அப்போதுதான் நியா யத்தை நிலை நாட்ட முடியும்.

ஆகையால் இந்த 1953-ம் வருஷத்தில் தமிழ் மக்கள் அனைவரும் ஒன்றுபட்டுப் போராடத் தயாரா யிருக்கவேண்டும். எல்லாக் கட்சியினரும் இந்த ஒரு விஷயத்திலாவது ஒன்றுபட்டு நிற்பது உசிதமும் அவசியமும் ஆகும். காங்கிரஸ் வாதிகள், தமிழரசுக் கழகத்தினர், திராவிடக் கழகத்தினர், உழைப்பாளிக் கட்சியினர், காமன்வீல் கட்சி யினர், கம்யூனிஸ்டுகள், ஜஸ்டிஸ் கட்சியினர், அரசியலில் சிரத்தையில்லாத சமூகப் பிரமுகர்கள் எல்லாரும் சென்னை நகரின் விஷயத்தில் போராட முன் வரவேண்டும். அனைவரும் இந்த ஒரு விஷ யத்திலாவது ஒன்றுபட்டுப் போராட்டம் நடத்தி னால் நல்லது; அது முடியாவிட்டால், தனித் தனியாகவேனும் போராட்டத்திற்குப் பலம் திரட்டிக் கொடுக்க வேண்டும்.

1953-ம் வருஷம் தமிழர்களுக்கு ஒரு சோதனை வருஷம் என்பதில் சந்தேகமில்லை. அந்தச் சோதனை யில் தமிழர்கள் வெற்றியுடன் தேறி வெளியில் வரவேண்டுமென்று விரும்புகிறோம்.

# சென்னை ஒரு சின்ன காஷ்மீர் ஆகுமா?

புதிய ஆந்திர மாகாணத்துக்குச் சென்னையி லேயே தாற்காலிகத் தலைநகர் வைத்துக் கொள்ள அநுமதிக்க வேண்டும் என்று ஆந்திரத் தலைவர்கள் கோருகிறார்கள். சிலர் ஆங்காரத்துடன் கேட் கிறார்கள்; வேறு சிலர் நயமாகக் கோருகிறார்கள்.

"திடீரென்று ஒரு மாகாணத்தின் தலைநகரைச் சிருஷ்டிக்க முடியுமா ! மூட்டை முடிச்சுகளுடன் உடனே புறப்பட்டுப் போ என்றால், என்ன செய் வது ! எங்கே போய், எப்படிக் குடித்தனம் நடத்துவது !" என்று ஓலமிடுகிறார்கள் சிலர்.

ஆங்காரத்துக்கு அஞ்சியோ, பரிதாபத்துக்கு இரங்கியோ சென்னையில் தற்காலிகமாக ஆந்திர மாகாணத் தலை நகரை வைத்துக் கொள்ள அநுமதிப்பது பெருந் தவறாக முடியும்.

அதன் பயனாகச் சென்னை நகரம் ஒரு சின்ன காஷ்மீர் ஆகிவிடும்.

சென்னையைப் பற்றிய தகராறு நீண்டு வளர்ந்து கொண்டே இருக்கும்; எப்போதும் தீரவே தீராது. அதனால் ஆந்திரர்களுக்கும் நன்மை இல்லை; தமிழர்களுக்கும் நன்மை யில்லை. இரு சாராரும் மற்ற சமூக முன்னேற்ற முயற்சிகளில் ஈடுபட முடியாது; அதற்குத் தகுந்த சூழ்நிலை இராது. சென்னை நகரைப் பற்றியே சண்டை போட்டுக் கொண்டிருப்பார்கள்; வேறு முக்கியமான காரி யங்களில் கவனம் செலுத்தவே முடியாது.

*　　　*　　　*

காஷ்மீர் விஷயத்தில் இந்திய சர்க்கார் ஆரம் பத்தில் கையாண்ட முறை தவறானது என்பதை இப்போது எல்லாரும் ஒப்புக் கொள்கிறார்கள்.

பாகிஸ்தானிகள் காஷ்மீரில் புகுவதற்கு முதலில் இடங் கொடுத்தாகி விட்டது. அது பெருந் தவறு. பாதி தூரம் புகுந்த பிறகு இந்திய சைன்யங்கள் தலையிட்டன; தீரத்துடன் போராடின. ஆனால் பாகிஸ்தானிகளை முழுதும் காஷ்மீரிலிருந்து அப் புறப் படுத்துவதற்கு முன்னால், ஐ. என். ஓ. சபை யில் இந்தியா காஷ்மீர் பிரச்னையைக் கொண்டு போயிற்று. அந்தச் சபைக்காரர்கள் என்ன சொன்னார்கள் ! "சண்டையை இத்துடன் நிறுத்

# சுயம்வரம்!



ஆந்திர மாகாணக் கன்னிகைக்கு நேருஜி சுயம்வரம் ஏற்படுத்தி விட்டார். அவள் கையில் உள்ள மாலை யார் கழுத்தில் விழும் என்பது பற்றி ஆந்திரத் தலைவர்களிடையில் பெரிய பரபரப்பு ஏற்பட்டிருக்கிறது.

---

ளுங்கள்; நாங்கள் நியாயமான மத்தியஸ்தம் செய்து வைக்கிறோம்" என்றார்கள்.

மத்தியஸ்தம் செய்கிற அழகைத்தான் பார்த்துக் கொண்டிருக்கிறோமே! வெளியிலிருந்து கொள்ளைக்காரர்களைப்போல் வந்து புகுந்தவர்கள் தாங்கள் பிடித்துக் கொண்ட இடத்தில் அழுத்தமாக உட்கார்ந்து கொண்டிருக்கிறார்கள். அந்தக் கொள்ளைக்காரர்களை "வெளியில் போ!" என்று சொல்ல யு. என். ஓ. சபைக்குத் தைரியம் வரவில்லை; மனமும் வரவில்லை. அவர்களுக்கு என்ன வந்தது? அமெரிக்காவுக்கும் பிரிட்டனுக்கும் பாகிஸ்தானின் சிநேகமும் வேண்டும்; இந்தியாவின் கூட்டுறவும் வேண்டும். ஆகையினால் குரங்கு நியாயம் வழங்கப் பார்க்கிறார்கள். வீட்டுக்காரனுக்கும் கொள்ளைக்காரனுக்கும் ஒரே நியாயம் என்கிறார்கள்.

இந்த மாதிரி காரியங்களில் ஒரு பிரச்னை ஏற்பட்டு விட்டால், அதை நியாயத்தை ஒட்டித் தீர்த்து வைப்பது சுலபமல்ல. ஏன், அநேகமாக முடியாத காரியம் என்றே சொல்லலாம்.

சென்னை நகரில் ஆந்திர மாகாணத்தின் தலைநகரம் தாற்காலிகமாக வைத்துக்கொள்ள அநுமதித்தால், அப்புறம் அவர்களைக் கிளப்புவது சுலபமான காரியமாயிராது. "போக மாட்டேன்" என்றால் என்ன செய்ய முடியும்! இரு மாகாண சர்க்கார்களும் சம பலமுள்ள சர்க்கார்களாக இருக்கும். ஒருவரோடொருவர் யுத்தம் செய்ய முடியுமா! இந்திய சர்க்கார் அப்போது தலையிட முன் வந்தால், யு. என். ஓ. சபை காஷ்மீர் விஷயத்தில் நடந்து கொள்வது போலத்தான் நடந்து கொள்வார்கள். நியாயம் பறிபோய் விடும். "எதற்கு வீண் சண்டை! தலைக்குப் பாதியாக வைத்துக் கொள்ளுங்கள். அல்லது இரண்டு பேரும் விட்டு விட்டுப் போங்கள்" என்ற முறையிலேதான் 'சமரச'த் தீர்ப்பு அளிப்பார்கள்.

* * *

இது சம்பந்தமாக ஆந்திரத் தலைவர்களின் நோக்கம் தூய்மையாக இல்லை என்பதையும் கவனிக்க வேண்டும்.

"தாற்காலிகமாகச் சென்னையில் தலை நகரம் வேண்டும்" என்று கேட்பவர்கள், உண்மை உள்ளத்துடன் அப்படிக் கேட்கிறார்களா!— இதைப் பற்றிச் சந்தேகிக்க வேண்டியிருக்கிறது.

ஏனென்றால், இப்படிக் கேட்பவர்கள் சென்னை நகரின்மீது தங்கள் பாத்தியதையை விட்டுக் கொடுத்து விடவில்லை.

ஸ்ரீ பிரகாசம் கோஷ்டியார் எப்போதுமே கோணல் புத்தியுள்ளவர்கள் என்று வைத்துக் கொள்வோம். ஆனால் ஸ்ரீ சஞ்சீவி ரெட்டி கோஷ்டியார்—அதாவது ஸ்ரீ கோபால் ரெட்டி, ஸ்ரீ சந்திரமௌளி, ஸ்ரீ காளா வெங்கட்ராவ் உள்ளிட்ட ஆந்திர மாகாண காங்கிரஸ் கோஷ்டியாராவது சரியாகப் பேசுகிறார்களா! அதுவும் இல்லை.

நேருவின் முடிவான அறிக்கையைக் கூட அவர்கள் திட்டமாக ஒப்புக்கொள்ளவில்லை.

"சென்னை நகரைத் தனிக் கமிஷனர் மாகாணமாக்க வேண்டும்" என்று கோரிவிட்டு, அதே மூச்சில், "சென்னையைத் தாற்காலிகத் தலைநகராக வைத்துக் கொள்ளும்" உரிமையும் கேட்கிறார்கள்.

ஆகவே, தாற்காலிகத் தலைநகரைச் சென்னையில் ஏற்படுத்திக் கொண்டால், பிறகு அதை விடாமல் அடம் பிடிக்கும் உத்தேசம் அவர்களுக்கு இருக்கிறது என்று நாம் ஊகிப்பது தவறாகாது.

இப்படிப்பட்ட துர் நோக்கமும் துராசையும் உள்ளவர்களைச் சென்னையில் தாற்காலிகமாக வைத்துக் கொள்ளத்தான் எப்படித் தமிழர்கள் ஒப்புக்கொள்ள முடியும்.

ஒப்புக் கொள்வது சென்னையைப் பறிகொடுப்பதாகவே ஆகும். அதுமட்டுமல்ல. ஆந்திரர்களுக்கும் தமிழர்களுக்கும் நீடித்த துவேஷத்தை வளர்ப்பதாகவும் முடியும்.

தமிழகத்தில் ஆந்திரர்களும் தமிழர்களும் எவ்வித வேற்றுமையுமின்றிச் சகோதர பாவத்துடன் இதுவரையில் வாழ்ந்து வந்திருக்கிறார்கள். சென்னை நகர் சம்பந்தமான நீடித்த தகராறு வளர்ந்து கொண்டிருந்தால் தமிழகத்திலும் தமிழர்—ஆந்திரர் என்ற வேற்றுமை உண்டாகி வளர்வதற்கு ஏதுவாகும்.

இத்தகைய துரதிர்ஷ்டம் தமிழகத்துக்கும் சென்னைக்கும் ஏற்படக் கூடாது. சென்னை ஒரு சின்ன காஷ்மீர் ஆகிவிடாமல் பார்த்துக்கொள்வது தமிழகத்தில் வாழும் ஆந்திரர் — தமிழர் அனைவருடைய கடமையும் ஆகும்.

# சத்தியம் எங்கே இருக்கிறது?

ஆந்திர மாகாணப் பிரிவினை சம்பந்தமான கிளர்ச்சிகளிலும் நிகழ்ச்சிகளிலும் ஒரு விசித்திரமான விஷயம் எல்லாருடைய மனத்தையும் கவர்ந்திருக்கும். அதைச் சொல்லுவதற்குச் சிலர் தயங்கக் கூடும். ஆனால் உண்மையைச் சொல்லுவதற்கு எதற்காகத் தயங்க வேண்டும்!

ஆந்திர கம்யூனிஸ்டு கட்சித் தலைவர்கள் ஆந்திர மாகாணப் பிரிவினை சம்பந்தமாக இது வரையில் கடைப்பிடித்து வரும் நேர்மையான கொள்கைகளையும் முறைகளையுந்தான் குறிப்பிடுகிறோம்.

ஆந்திரர்கள் சென்னை நகர்மீது உரிமை கொண்டாடுவது சிறிதும் நியாயமற்றது என்று ஆரம்பத்திலேயே இவர்கள் ஒப்புக்கொண்டு விட்டார்கள். "ஆந்திரர்களுக்கு இல்லை என்றால், தமிழர்களும் இருக்கக் கூடாது. ஆகையால் சென்னை நகரைத் தனிக் கமிஷனர் மாகாணமாக்க வேண்டும்" என்ற கோரிக்கையையும் இவர்கள் ஒத்துக் கொள்ளவில்லை. இந்தமாதிரி கேட்பது அருமைக்கும் அற்ப புத்திக்கும் அறிகுறி என்று எடுத்துக் காட்டினார்கள். அது மட்டுமல்ல; இரண்டு கோரிக்கைகளையும் பிணைப்பதின் தீங்கையும் எடுத்துச் சொன்னார்கள். பொட்டி ஸ்ரீராமுலு பரிதாப மரணமடைவதற்கு நாலு நாள் முன்னதாக நடந்த கூட்டத்தில், "சென்னைக் கோரிக்கையை விட்டுவிடுங்கள்; ஸ்ரீராமுலுவின் உயிரைக் காப்பாற்றுங்கள்!" என்று கம்யூனிஸ்ட் தலைவர் அலறினர்; கதறினர். ஆனால் கல் நெஞ்சம் படைத்த ஆந்திரத் தலைவர்கள் அதற்கு இணங்கவில்லை. ஸ்ரீராமுலுவின் உயிரும் போய்விட்டது.

ஸ்ரீராமுலுவின் மரணத்தறுவாயிலும் பின்னரும் ஆந்திர நாட்டில் நடந்த சுயநாச கலவரங்களின்போது அறிவுத் தெளிவுடன் பேசியவர் ஸ்ரீ நாகி ரெட்டி ஒருவர்தான். "நம்முடைய சொத்துக்களை நாமே அழித்துக் கொள்ளுவதில் யாருக்கு என்ன லாபம்! வேண்டாம் இந்த வெறி!" என்று எச்சரிக்கை விடுத்தார்.

நேருஜியின் அறிக்கைக்குப் பிற்பாடும் மாகாண அமைப்பு ஏற்பாடுகளைப் பற்றி நேர்மையாகப் பேசி வருகிறவர்கள் ஆந்திர கம்யூனிஸ்டுகள்தான் என்பதைக் கவனிக்க, நமக்கு வியப்புடன் மகிழ்ச்சியும் உண்டாகிறது. சென்னையில் தற்காலிகத் தலைநகர் அமைப்பதைக் கூட அவர்கள் ஒப்புக் கொள்ளவில்லை. "புதிய மாகாணத்தின் தலைநகரம் மாகாணத்திற்குள்ளேதான் இருக்க வேண்டும். விஜயவாடாவில் தலைநகரை அமையுங்கள்!" என்று கோருகிறார்கள்.

அதுமட்டுமல்ல. "சென்னையில் தற்காலத் தலைநகரை அமைக்க வேண்டுமென்று சொல்லும் காங்கிரஸ் வாதிகள் பின்னால் சென்னை நகரை விட மாட்டோம் என்று அடம் பிடிக்கும் துர்நோக்கத்துடன் அவ்விதம் சொல்கிறார்கள். இது அரசியல் நேர்மை அல்ல!" என்றும் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

காந்தி மகாத்மா உயிரைக் கொடுத்து வளர்த்த புனிதமான காங்கிரஸ் ஸ்தாபனத்தைச் சேர்ந்தவர்களுக்குக் கம்யூனிஸ்டுகள் நேர்மையைப் போதிக்கும்படியான நிலைமை ஏற்பட்டு விட்டதே என்பதை நினைக்கும்போது நமக்கு ஏமாற்றமாய்த்தானிருக்கிறது.

பொட்டி ஸ்ரீராமுலுவை ஸ்ரீ டி. பிரகாசம் பார்க்கப் போனபோது, அந்த ஆத்மத் தியாகி, "இந்த உலகில் இன்னும் சத்தியம் இருக்கிறதா!" என்று கேட்டாராம். சரியான கேள்விதான். ஸ்ரீ பிரகாசம் கோஷ்டியையும் ஆந்திர காங்கிரஸ் கோஷ்டியையும் மனத்தில் வைத்துக் கொண்டுதான் அவர் அப்படிக் கேட்டிருக்க வேண்டும்.

ஸ்ரீ ராமுலுவின் ஆத்மா இப்போது மேல் உலகிலிருந்து கீழே நடப்பதைக் கவனிக்குமானால், "ஆந்திர நாட்டில் சத்தியம் இருக்கிறது; அது இப்போது ஆந்திர கம்யூனிஸ்டுகளிடம் சரண் புகுந்திருக்கிறது" என்று அறிந்து திருப்தி அடையும் என்பதில் சந்தேகமில்லை.

ஆந்திர மாகாணம் தனியாகப் பிரிந்தால் அங்கே கம்யூனிஸ்ட் ராஜாங்கம் ஏற்பட்டு விடுமே என்று கவலைப் பட்டவர்கள் நம்மில் பலர் உண்டு. அந்தக் கவலை இப்போது அநேகமாக நீங்கி விட்டது. ஆந்திர மாகாணத்தில் கம்யூனிஸ்ட் ஆட்சி ஏற்பட்டால்தான் என்ன! மாகாணப் பிரிவினை விஷயத்தில் அவர்கள் கடைப் பிடிக்கும் நேர்மையான முறையை அரசாங்க நிர்வாகத்திலும் கடைப்பிடிப்பார்களானால், கம்யூனிஸ்ட் ஆட்சியைப் பற்றி எதற்காகக் கவலைப்பட வேண்டும்!

# நவாப் ராஜ்யம் நடக்கிறது!

சென்னை நகரம் தமிழருக்கா அல்லது ஆந்திருக்கா என்ற பிரச்னை அடிபட்டுக் கொண்டிருக்கும் சமயத்தில், 'சந்தடி சாக்கில் கந்தகப் பொடி தூவுகிறது' போல, தாற்காலிகமாக இங்கே நவாப் ராஜ்யம் ஏற்பட்டு நடந்து வருகிறது! நவாப் ராஜமாணிக்கம் அவர்களின் நாடகக் கம்பெனியார் பல ஆண்டுகளுக்குப் பிறகு சென்னைக்கு வந்து தேனாம்பேட்டை கண் காட்சி

மைதானத்தில் நாடகம் நடத்தி வருகிறார்கள். நாடகப் பிரியர்களின் உள்ளங்களில் அன்பின் ஆட்சியை ஸ்தாபித்து வருகிறார்கள்.

எந்த நாடகத்தின் மூலமாக ஸ்ரீ ராஜமாணிக்கம் புகழும் பிரபலமும் அடைந்து 'நவாப்' என்ற பட்டமும் பெற்றாரோ, அந்த பக்த ராமதாஸ் நாடகத்தையே முதன் முதலாக ஆரம்பித்து நடத்துகிறார்கள்.

'கடவுளைச் சந்திக்கு இழுத்து, வெறு வெறு என்று வெறுத்து, நாஸ்திகப் பிரசாரத்தைக் காரசாரமாக நடத்தினால்தான், நாடகங்களுக்கும் ஸினிமாக்களுக்கும் கூட்டம் சேரும், — பண வசூல் ஆகும்' என்று சொல்லப்படும் இந்தக் காலத்தில் ஆஸ்திக புத்தியையும் ஆண்டவன் பக்தியையும் வளர்க்கும் அருமையான நாடகங்களைப் பிடிவாதமாக நவாப் ராஜமாணிக்கம் நடத்தி வருகிறார். அவருடைய கலை அன்பையும் கடவுள் பக்தியையும் திட நம்பிக்கையையும் விடாமுயற்சியையும் பாராட்டி மகிழ்கிறோம்.



நவாப் ராஜமாணிக்கம்

"கடவுள் ஒருவர் இருந்தால் உலகில் பக்தர்களுக்குக் கஷ்டங்கள் ஏன் ஏற்படுகின்றன!" என்று கேட்பவர்கள் இந்த நாளில் மட்டும் இல்லை; முற் காலத்திலும் இருந்திருக்கிறார்கள்.

இவர்களுக்கெல்லாம் பதில் சொல்லும் முறையில் பக்த ராமதாஸின் சரித்திரமும் நாடகமும் அற்புதமாக அமைந்திருக்கிறது.

அத்துடன் நாடகக் கலையின் சிறப்பான அம்சங்களையெல்லாம் சிகரமான முறையில் வெளிப்படுத்தும் முறையிலும் அந்த பக்த ராமதாஸின் நாடகம் அமைந்திருக்கிறது.

"பக்த ராமதாஸ்" நாடகத்துடன் ஆரம்பித்திருக்கும் நவாப் ராஜமாணிக்கம் கம்பெனியார் சென்னையில் சுமார் இரண்டு வருஷங்கள் பல நாடகங்களை நடத்துவார்கள் என்று அறிந்து மகிழ்கிறோம்.

சென்னை நகரின் நாடகக் கலை ரஸிகர்கள் நவாப் ராஜமாணிக்கம் கம்பெனிக்கு அமோகமான ஆதரவு அளிப்பார்கள் என்று நம்புகிறோம்.

★ ★ ★ ★ ★ ★

# பொன்னியின் செல்வன்

கல்கி

## அத்தியாயம் 28

## பாதாளப் பாதை

**நா**ற் புறமும் நன்றாகப் பார்த்துவிட்டு ரவிதாஸன் திறந்திருந்த நிலவறைக் கதவைச் சுட்டிக் காட்டிச் சோமன் சாம்பவன் அதன் உள்ளே போகச் சொன்னான்.

"முதலில் இருட்டில் கண் தெரியாது. அதற்காகக் கதவின் அருகிலேயே நின்று விடாதே! உள்ளே கொஞ்சம் தூரமாகவே போய் நின்று கொள்!" என்றான்.

சோமன் சாம்பவன் நிலவறைக்குள் புகுந்ததும் அவனை இருள் விழுங்கி விட்டது போலிருந்தது.

பிறகு, ரவிதாஸன் நடைபாதை வழியாகத் திரும்பி நந்தினிதேவியின் வஸந்த மண்டபம் வரையில் சென்றான். அங்கிருந்து பழுவேட்டரையரின் அரண்மனையைப் பார்த்துக் கொண்டிருந்தான். தாதிப் பெண்ணைத் தவிர வேறு யாராவது வந்துவிட்டால் அவனும் நிலவறைக்குள் அவசரமாகச் சென்று கதவைச் சாத்திக் கொள்வது அவசியமாயிருக்கலாம் அல்லவா?

ரவிதாஸன் அவ்விதம் வஸந்த மண்டபத்தில் நின்று கொண்டு அரண்மனை வாசலையே பார்த்துக் கொண்டிருந்த சமயத்தில், மந்தாகினி சிறிதும் சத்தமின்றி நடந்து வந்து திறந்திருந்த நிலவறைக்குள் பிரவேசித்தாள். அடர்ந்த காடுகளில் நள்ளிரவில் எத்தனையோ நாள் இருந்து பழக்கப்பட்டவளுக்கு அந்த நிலவறையின் இருட்டு ஒரு பிரமாதமா என்ன? சில வினாடி நேரத்தில் கண் தெரிய ஆரம்பித்தது. ரவிதாஸனுடன் வந்தவன் சற்றுத் தூரத்தில் ஒரு தூணுடன் முட்டிக் கொண்டு தவித்ததைப் பார்த்தாள். இவள் அதற்கு நேர்மாறான திசையில் சென்றாள். அங்கே ஒரு படிக்கட்டு காணப்பட்டது. நிலவறைப் பாதை அங்கே கீழே இறங்கிச் சென்றது. படிகளின் வழியாக இறங்கிக் கீழே நின்று கொண்டாள்.

சோமன் சாம்பவனுக்கு ஏதோ சிறிது சத்தம் கேட்டிருக்க வேண்டும். "யார் அது? யார் அது?" என்று குரல் கொடுத்தான். அது திறந்திருந்த வாசல் வழியாகப் போய் ரவிதாஸனுடைய காதில் இலேசாக விழுந்தது.

அதே சமயத்தில் அரண்மனை வாசல் வழியாகத் தாதிப் பெண் கையில் தீவர்த்தியுடன் வந்து கொண்டிருந்ததை ரவிதாஸன் பார்த்தான். தான் முன்னால் சென்று சோமன் சாம்பவனுக்கு எச்சரிக்கை செய்வதற்காக விரைந்து நடந்தான். நிலவறை வாசற்படிக்குள் புகுந்ததும், "சாம்பவா! எங்கே இருக்கிறாய்? என்னைக் கூப்பிட்டாயா?" என்றான்.

"ஆமாம்; கூப்பிட்டேன்!"

"அதற்குள்ளே அவசரமா? உன் குரல் வெளியிலே யாருக்காவது கேட்டால் என்ன செய்கிறது? உன்னை இங்கே இப்படியே விட்டுவிட்டுப் போய் விடுவேன் என்று நினைத்தாயா?"

"இல்லை; இல்லை! ஒரு விஷயம் கேட்பதற்காகக் கூப்பிட்டேன்!" என்று

சொல்லிக் கொண்டே சோமன் சாம்பவன் ரவிதாஸனை அணுகி வந்தான்.

இச்சமயத்தில் நிலவறையின் வாசலில் பிரகாசமான வெளிச்சம் தெரிந்தது. "ஓகோ! அந்தப் பெண் தீவர்த்தியுடன் வந்து விட்டாள். உன்னைப் பார்த்து விடப் போகிறாள். போ! போ! தூரமாகச் சென்று தூண் மறைவில் நில்! சீக்கிரம்!" என்றான் ரவிதாஸன்.

சோமன் சாம்பவன் அவசரமாகப் பின் வாங்கிச் சென்றான்.

அடுத்த விநாடி நிலவறையின் வாசலில் தாதிப் பெண் கையில் தீவர்த்தியுடன் வந்து நின்றாள். "மந்திரவாதி! மந்திரவாதி! எங்கே போனாய்?" என்றாள்.

"எங்கேயும் போகவில்லை. உனக்காகத்தான் காத்துக் கொண்டிருந்தேன்" என்று கூறிக்கொண்டே ரவிதாஸன் அவளை அணுகித் தீவர்த்தியைக் கையில் வாங்கிக் கொண்டான்.

"பெண்ணே! வெளியில் கதவைப் பூட்டிக் கொள். இன்னும் ஒரு நாழிகைக் கெல்லாம் சாவியுடன் திரும்பி வா! கதவைத் தட்டிப் பார்! நான் குரல் கொடுத்தால் திறந்து விடு! ஒருவரும் இல்லாத சமயமாகப் பார்த்துத் திற!" என்றான் ரவிதாஸன்.

"ஆகட்டும், மந்திரவாதி! ஆனாலும் உனக்கு எச்சரிக்கை செய்கிறேன். சின்னப் பழுவேட்டரையருக்கு ஏதோ சந்தேகம் ஏற்பட்டிருக்கிறது. நீ அகப்பட்டுக் கொண்டால் என்னைக் காட்டிக் கொடுத்து விடாதே!" என்று கேட்டுக் கொண்டாள் தாதிப் பெண்.

"பெண்ணே! வீணாகக் கலவரப்படாதே! நான்தான் சொன்னேனே! காலாந்தக கண்டனுக்கே இறுதிக் காலம் நெருங்கி விட்டது!"

"என்னை ஏன் மறுபடி வந்து கதவைத் திறக்கச் சொல்லுகிறாய்? நிலவறையிலிருந்து வெளியில் போவதற்குத்தான் வேறு வழி இருக்கிறதே!"

"அந்த வழி இன்றைக்கு உபயோகப்படாது. வெட்டாற்றில் வெள்ளம் கரை புரண்டு ஓடுகிறது. நீ போ! சரியாக ஒரு நாழிகைக் கெல்லாம் திரும்பி விடு!"

தாதிப் பெண் வெளியில் சென்று கதவைச் சாத்தினாள். அவள் வெளியில் கதவைப் பூட்டிய அந்த சமயத்தில் ரவிதாஸன் உட்புறத்தில் தாளிட்டான். பின்னர், கையில் தீவர்த்தியைத் தூக்கிப் பிடித்துக்கொண்டு சோமன் சாம்பவன் இருக்குமிடம் நோக்கி விரைந்துவந்தான்.

"சாம்பவா! என்னை என்னமோ கேட்க வேண்டுமென்று சொன்னாயே? இப்போது கேள்" என்றான்.

"நீ இதற்கு முன் ஒரு தடவை இங்கு வந்தாயா?" என்று சோமன் சாம்பவன் கேட்டான்.

"ஒரு தடவை என்ன? பல தடவை வந்திருக்கிறேன். நாம் சேர்த்து வைத்திருக்கும் பொருளெல்லாம் வேறு எங்கிருந்து வந்ததென்று நினைத்தாய்?" என்றான் ரவிதாஸன்.

"நான் அதைக் கேட்கவில்லை. நீ சற்று முன் என்னை இங்கு விட்டு விட்டு வெளியில் போனாய் அல்லவா? மறுபடியும்..."

"இப்போதுதான் வந்திருக்கிறேனே?"

"நடுவில் ஒரு தடவை வந்தாயா?"

"நடுவிலும் வரவில்லை; ஓரத்திலும் வரவில்லை. எதற்காகக் கேட்கிறாய்?"

"நீ போன சிறிது நேரத்துக்கெல்லாம் வாசற் படியின் வெளிச்சம் சட்டென்று மறைந்தது. நான் தூணில் முட்டிக் கொண்டேன்."

"ஒரு வேளை கதவு தானாகச் சாத்தித் திறந்து கொண்டிருக்கும்."

"ஏதோ ஒரு உருவம் உள்ளே வந்தது போலத் தெரிந்தது. காலடிச் சத்தமும் நன்றாகக் கேட்டது."

"உன்னுடைய சித்தப் பிரமையாயிருக்கும். இந்த நிலவறையே அப்படித்தான். இருட்டிலே நிழல் போலத் தெரியும். திடீரென்று வெளிச்சம் தோன்றி மறையும். விசித்திரமான ஓசைகள் எல்லாம் கேட்கும். இங்கு நுழைந்தவர்கள் சிலர் பயப் பிராந்தியினாலேயே செத்துப் போயிருக்கிறார்கள். அவர்களுடைய எலும்புக் கூடுகள் அங்கங்கே கிடக்கின்றன. பழுவேட்டரையன் வேண்டுமென்றே அந்த எலும்புக் கூடுகளை எடுக்காமல் விட்டு வைத்திருக்கிறான். ஒருவரும் அறியாமல் இந்த நிலவறைக்குள் நுழைகிறவர்கள் எலும்புக் கூடுகளைப் பார்த்துப் பயந்து சாகட்டும் என்று......"

"அப்படி யாருக்கும் தெரியாமல் இந்த நிலவறையில் பிரவேசிக்க முடியுமா என்ன?"

"சாதாரணமாக யாரும் நுழைய முடியாது. என்னைத் தவிர அப்படி யாரும் நுழைந்திருப்பார்கள் என்று தோன்றவில்லை. நானும் இளைய ராணி அல்லது அவளுடைய தோழியின் உதவியினால்தான் இங்கு வந்திருக்கிறேன்......"

"பின்னே மனிதர்களின் எலும்புக் கூடுகளைப் பற்றிச் சொன்னாயே?"



"அதுவா? பழுவேட்டரையன் யாரையாவது பயங்கரமாகத் தண்டிக்க விரும்பினால், நிலவறைக் கதவை இலேசாகத் திறந்து வைத்து விடுவான். பொக்கிஷ நிலவறையைப் பற்றிக் கேட்டிருப்பவர்கள் பொருளாசையினால் இதில் நுழைவார்கள். அப்புறம் இதை விட்டு வெளியில் போவதில்லை."

"நீ ஒருவனைத் தவிர இங்கு வந்தவன் யாரும் வெளியில் போனதில்லையென்று சொல்லுகிறாய்?"

"முன்னே யெல்லாம் அப்படித்தான். இப்போது இரண்டு பேரைப் பற்றி எனக்குச் சந்தேகமாயிருக்கிறது......"

"யாரைச் சொல்லுகிறாய் என்று எனக்குத் தெரியும். வல்லவரையனையும் கந்தமாறனையும் சொல்லுகிறாய்."

"ஆமாம்."

"அவர்களை நாம் இன்றும் உயிரோடு விட்டு வைத்திருக்கிறோமே?"

"எத்தனை தடவை உனக்குச் சொல்வது? வல்லவரையனை ஒரு முக்கியமான காரியத்துக்காகத்தான் இளைய ராணி விட்டு வைத்திருக்கிறாள். சுந்தர சோழனுடைய குலம் நசிக்கும்போது வந்தியத்தேவனும் சாவான். அதற்குக் காலம் நெருங்கி விட்டது. வா! வா! இந்த நிலவறையிலுள்ள சுரங்கப் பாதைகளையெல்லாம் உனக்குக் காட்டுகிறேன்...... ஒரு காரியத்தில் மட்டும் ஜாக்கிரதையாயிரு! இங்கே நவரத்தினக் குவியல் வைத்திருக்கும் மண்டபம் ஒன்றிருக்கிறது. அதில் நூறு வருஷங்களாகச் சோழர்கள் சேர்த்து வைத்த நவரத்தினங்களைக் குப்பல் குப்பலாகப் போட்டு வைத்திருக்கிறார்கள். அங்கே போய் மட்டும் அகப்பட்டுக் கொள்ளாதே. அந்த நவரத்தினங்களின் மோகத்தில் மனத்தைப் பறிகொடுத்து விட்டால், நீ வந்த காரியத்தையே மறந்து போனாலும் போய் விடுவாய்!"

"ரவிதாஸா! யாரைப் பார்த்து இந்த வார்த்தை சொல்கிறாய்? உன்னைப் போல் நானும் வீர பாண்டியனுடைய தலை

யற்ற உடலின் மீது சத்தியம் செய்து கொடுத்தவன் அல்லவா?"

"யார் இல்லை என்றார்கள்? அந்த நவரத்தினக் குவியல்களைப் பார்த்தபோது என் மனதுகூடச் சிறிது சலித்துப் போய் விட்டது; அதனாலேதான் எச்சரிக்கை செய்தேன். இருக்கட்டும், வா, போகலாம். முதலில் சோழன் அரண்மனைக்குப் போகும் வழியை உனக்குக் காட்டுகிறேன். அதைக் காட்டிவிட்டு நான் போனபிறகு நீயே சாவகாசமாக இந்த நிலவறை முழுவதையும் சுற்றிப் பார்த்துக்கொள். பின்னொரு காலத்தில் உபயோகமா யிருக்கலாம்."

ரவிதாஸன் தீவர்த்தியைப் பிடித்துக் கொண்டு மேலே நடந்தான். சோமன் சாம்பவன் பக்கத்திலேயே சென்றான்.

முன்னொரு சமயம் பெரிய பழுவேட்டரையரும் இளைய ராணி நந்தினியும் சென்ற அதே பாதையில் அவர்கள் சென்றார்கள்.

தீவர்த்தியின் புகை சூழ்ந்த வெளிச்சத்தில் நிலவறையின் தூண்களும் அவற்றின் நிழல்களும் கரிய பெரிய பூதங்களைப் போல் தோன்றின. இருளில் வாழும் வௌவால்கள் பயங்கரமான குட்டிப் பேய்களின் தோற்றம் கொண்டிருந்தன. ஆங்காங்கு பிரம்மாண்டமான சிலந்திக் கூடுகளும் அவற்றின் மத்தியில் ராட்சஸ சிலந்திப் பூச்சிகளும் காணப்பட்டன. தரையிலோ விசித்திர வடிவங்கள் கொண்ட ஜீவராசிகள் சில அதி வேகமாகவும் சில மிகவும் மெதுவாகவும் ஊர்ந்து சென்றன. ரவிதாஸன் கூறியதுபோலவே இனந் தெரியாத பலவிதச் சத்தங்கள் கேட்டன. வெளியே இன்னமும் அடித்துக் கொண்டிருந்த புயலின் சத்தமும் எப்படியோ எங்கிருந்தோ அந்தச் சுரங்க நிலவறைக்குள் வந்து எதிரொலி செய்தது.

சோமன் சாம்பவன் திடீரென்று திடுக்கிட்டு நின்று, "ரவிதாஸா! ஏதோ காலடிச் சத்தம் போல் கேட்கவில்லை?" என்று கேட்டான்.

"கேட்காமல் என்ன? நம்முடைய காலடிச் சத்தம் கேட்கத்தான் கேட்கிறது. வீணாக மிரண்டு விடாதே! இப்போது நானும் இருக்கும்போதே இப்படிப் பயப்பட்டாயானால், இங்கே இரண்டு மூன்று தினங்கள் எப்படியிருப்பாய்?" என்றான் ரவிதாஸன்.

"நான் ஒன்றும் பயப்படவில்லை. நீ போன பிறகு வீண் பிராந்திக்கு உள்ளாவதைக் காட்டிலும் நீ இருக்கும்போதே கேட்டுத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். இந்த நிலவறைக்குள் புகுந்தவர்கள் சிலர் இங்கேயே செத்துப் போனார்கள் என்று சொன்னாயல்லவா?" என்றான் சோமன் சாம்பவன்.

"ஆமாம்; அவர்களுடைய ஆவிகள் இங்கே உலாவிக் கொண்டுதானிருக்கும். அதனால் என்ன? பேய்கள் தான் நம்மைக் கண்டு பயந்து அலறுமே? அந்தச் சிறு பையன் வந்தியத்தேவன் இந்த நிலவறையில் பயப்படாமல் இருந்து எப்படியோ தப்பி வெளியேறி யிருக்கிறான். எத்தனையோ பேய் பிசாசுகளைப் பார்த்த நானும் நீயும் ஏன் பயப்பட வேண்டும்?"

"பேயும் பிசாசும் இருக்கட்டும். அதற்கெல்லாம் யார் பயப்படுகிறார்கள்? வேறு பிராணிகள், விஷ ஜந்துக்கள் இங்கே இருக்கலாம் அல்லவா?"

"பாம்புக்கும் தேளுக்கும் பயப்படப் போகிறாயா? நம்மைக் கண்டாலே அவைகள் வளைகளில் போய் ஒளிந்து கொள்ளும்......"

"இருந்தாலும் இரண்டு மூன்று நாட்கள் இங்கேயே இருக்கிறது என்றால் யோசனையாகத்தான் இருக்கிறது! ரவிதாஸா! அதற்கு முன்னாலேயே ஒரு வேளை சந்தர்ப்பம் கிடைத்தால்......?"

"வேண்டாம், வேண்டாம்! அந்தத் தவறு மட்டும் செய்து விடாதே! இன்றைக்குச் செவ்வாய்க் கிழமை. புதன் வியாழன் இரண்டு நாளும் நீ காத்திருக்க வேண்டும். சுந்தர சோழன் தனிமையாக



இருக்கும் நேரம் எது என்பதைப் பார்த்து வைத்துக் கொள். சுந்தர சோழனுடைய பட்ட மகிஷி எப்போதும் அவன் அருகிலேயே இருப்பாள். வெள்ளிக் கிழமை இரவு நிச்சயமாகத் துர்க்கா பரமேசுவரியின் கோயிலுக்குப்போவாள். அன்று இரவுதான் நீயும் உன் காரியத்தை முடிக்க வேண்டும். சுந்தர சோழனுடைய குலம் நிர்மூலமாகும் நாள் வெள்ளிக் கிழமைதான். முன் பின்னாக ஏதாவது நடந்தால் காரியம் கெட்டுப் போகலாம்!'' என்றான் ரவிதாஸன்.

இப்படிப் பேசிக் கொண்டே இருவரும் விரைவாக நடந்தார்கள். சோமன் சாம்பவன் மட்டும் சுற்று முற்றும் பார்த்துக் கொண்டே போனான். ஆயினும் அவர்கள் அறியாமல் தூண்களின் மறைவிலே ஒளிந்தும் சிறிதும் சத்தமின்றிப் பாய்ந்தும் அவர்களைத் தொடர்ந்து வந்து கொண்டிருந்த ஊமை ராணி அவர்கள் கண்ணில் படவில்லை.

நிலவறைச் சுரங்கத்தின் ஒரு பக்கத்திலிருந்து இன்னொரு பக்கத்துக்கு அவர்கள் வந்து சேர்ந்தார்கள். அவர்களுக்கெதிரே நெடுஞ் சுவர் நின்றது. அதில் எங்கும் வாசல் இருப்பதாகவே தெரியவில்லை. ஆனால் சுவரின் உச்சியில் ஒரு சிறுபலகணி வழியாகக் கொஞ்சம் வெளிச்சம் வந்தது.

ரவிதாஸன் தீவர்த்தியைச் சாம்பவன் கையில் கொடுத்து விட்டு அந்தச் செங்குத்தான சுவரில் ஆங்காங்கு நீட்டிக் கொண்டிருந்த முண்டு முரடுகளைப் பிடித்துக் கொண்டு ஏறினான். பலகணி வழியாகச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்து விட்டுக் கீழே சர சர வென்று இறங்கினான்.

"அந்தப் பலகணி வழியாக வெளியில் குதிக்க வேண்டுமா? அதுதான் வழியா?'' என்று சாம்பவன் கேட்டான்.

"இல்லை; இல்லை. அந்தப் பலகணி வழியாக, எலிதான் நுழைந்து செல்லலாம். ஆனால் அது வழியாகப் பார்த்தால் சோழன் அரண்மனை தெரியும். அந்த அரண்மனையிலும் முக்கியமான இடம் தெரியும்'' என்றான் ரவிதாஸன்.

"சுந்தர சோழன் படுத்திருக்கும் இடமா?'' என்றான் சாம்பவன்.

"ஆமாம், அங்கே ஜன நடமாட்டம் எப்படியிருக்கிறது என்பதை இந்தப் பலகணியின் மூலமாகப் பார்த்து நீ தெரிந்து கொள்ளலாம். இப்போது என்னுடன் வா! நான் செய்கிறதை நன்றாய்ப் பார்த்துக் கொள்!''

இவ்விதம் கூறி விட்டு ரவிதாஸன் கீழே குனிந்தான். உற்றுப் பார்த்து வட்ட வடிவமான ஒரு கல்லின் மீது காலை வைத்து அமுக்கிக் கொண்டு இரண்டு கையினாலும் ஒரு சதுர வடிவமான கல்லைப் பிடித்துத் தள்ளினான். கீழே ஒரு வழி காணப்பட்டது.

"கடவுளே! நிலவறைக்குள்ளே ஒரு பாதாளப் பாதையா?'' என்று வியந்தான் சோமன் சாம்பவன்.

"ஆமாம்; இந்தப் பாதை இருப்பது பெரிய பழுவேட்டரையனையும் இளைய ராணியையும் தவிர வேறு யாருக்கும் தெரியாது. மூன்றாவதாக எனக்குத் தெரியும்; இப்போது உனக்கும் தெரியும்! பாதையைத் திறப்பது எப்படி என்று தெரிந்து கொண்டாய் அல்லவா?''

இருவரும் அப் பாதையில் இறங்கிச் சென்றார்கள். தீவர்த்தியின் வெளிச்சம் சிறிது நேரத்திற்கெல்லாம் மறைந்தது.

ஊமை ராணி தான் மறைந்து நின்ற இடத்திலிருந்து ஒரே பாய்ச்சலாக அங்கு வந்தாள். திறந்திருந்த வழியை உற்றுப் பார்த்தாள். அதில் இறங்குவதற்கு ஓர் அடி வைத்தாள். பிறகு புனராலோசனை செய்தவளாய்ச் சட்டென்று காலை வெளியில் எடுத்தாள்.

சிறிது நேரம் யோசனை செய்து கொண்டிருந்து விட்டு, முன்னம் ரவிதாஸன் சுவரின்மீது ஏறிய இடத்தை நோக்கினாள். அங்கே ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து சென்று அவன் ஏறியது போலவே தானும் சுவர் மீது ஏறினாள். பலகணியை அடைந்ததும் அதில் ஏறி உட்கார்ந்து கொண்டு அப்பால் பார்த்தாள். சுவரை ஒட்டினாற் போல் தோட்டமும் அதற்கப்பால் அழகிய மாடமாளிகையும் தென்பட்டன. அந்த மாளிகையைப் பார்த்ததும் அவளுக்கு உடம்பு சிலிர்த்தது. அதற்குள்ளே தனக்கு உயிரினும் இனியவர்கள் இருக்கிறார்கள் என்பதை அவள் உள்ளுணர்ச்சி கூறியது. இரகசிய வழியாகப் போகிறவர்கள் தனக்குப் பிரியமானவர்களுக்குத் தீங்கு செய்யும் நோக்கங் கொண்டவர்கள் என்பதையும் உணர்ந்தாள். அவர்களுடைய தீய நோக்கத்தைத் தடுக்கும் ஆற்றலைத் தனக்குக் கொடுத்து அருள வேண்டுமென்று அவள் அந்தராத்மாவில் குடி கொண்டிருந்த தெய்வத்தைப் பிரார்த்தனை செய்து கொண்டாள்.

கீழே இறங்கிவிடலாமா என்று அவள் எண்ணிய சமயத்தில், சற்றுத் தூரத்தில்

தெரிந்த மாளிகையின் மேன் மாடத்தில் ஓர் அதிசயக் காட்சி தெரிந்தது. சற்று முன் அந்த இருளடர்ந்த நிலவறையிலிருந்த ரவிதாஸனும் சோமன் சாம்பவனும் அதில் ஏறித் தூண்களின் மறைவில் ஒளிந்து நின்றார்கள். அரண்மனையின் உட் பக்கமாக உற்று உற்றுப் பார்த்தார்கள். அப்போது பகல் நேரமாதலால் அந்த மாளிகையின் மேன் மாடம் நன்றாய்த் தெரிந்தது. ரவிதாஸன் கையில் தீவர்த்தி இல்லை. சாம்பவன் கையில் வேல் மட்டும் இருந்தது. ரவிதாஸன் அந்த வேலை வாங்கிக் கொண்டு மாளிகையின் உட்புறத்தை நோக்கி அதை எறிவதற்காகக் குறிபார்த்தான். ஊமை ராணியின் நெஞ்சு அச்சமயம் நின்று விட்டது போலிருந்தது. நல்லவேளையாக, ரவிதாஸன் வேலை எறியவில்லை. எறிவது போல் பாவனை செய்து விட்டுச் சோமன் சாம்பவனிடம் திரும்பக் கொடுத்து விட்டான். மறு கணம் அவர்கள் இருவரும் அங்கிருந்து மறைந்து விட்டார்கள்.

**ஊ**மை ராணியும் பலகணியிலிருந்து சுவர் வழியாகக் கீழே இறங்கினாள். சுரங்கப் பாதை தென்பட்ட இடத்தையே பார்த்துக் கொண்டு மறைந்து நின்றாள். இன்னும் சிறிது நேரத்துக்கெல்லாம் அந்தப் பாதையில் மறுபடி தீவர்த்தி வெளிச்சம் தெரிந்தது. இருவரும் வெளியில் வந்தார்கள். சுரங்கப் பாதையை மூடினார்கள்.

"இதைத் திறக்கும் வழியை நன்றாய்த் தெரிந்து கொண்டாயல்லவா?" என்று ரவிதாஸன் கேட்டான்.

"தெரிந்து கொண்டேன். இனி உனக்குக் கவலை வேண்டாம். ஒப்புக் கொண்ட காரியத்தை நிச்சயமாகச் செய்து முடிப்பேன்! சுந்தர சோழனுடைய வாழ்க்கை வெள்ளிக் கிழமையோடு முடிவடையும். இம் மாதிரியே நீங்களும் உங்கள் காரியத்தைச் செய்யுங்கள்!" என்றான் சாம்பவன்.

"இளைய ராணி கரிகாலனைப் பார்த்துக் கொள்வாள். அதைப் பற்றிக் கவலையில்லை. அந்தக் குட்டிப் புலி கடலிலிருந்து தப்பி வந்து நாகைப்பட்டினத்தில் இருப்பதாகக் காண்கிறது. ஆனால் இந்தத் தடவை அவன் தப்ப முடியாது. அவனைக் காப்பாற்றி வந்த இரண்டு பெண் பேய்களும் இப்போது இத் தஞ்சையில் இருக்கின்றன. ஓடக்காரப் பெண்ணையும் ஊமைச்சியையும் கூட்டத்தில் பார்த்தேன். அந்த வீர வைஷ்ணவத் துரோகிகூட இங்கேதான் இருக்கிறான். ஆகையால் குட்டிப் புலியும் இனித் தப்ப முடியாது. நாகைப்பட்டினத்துக்குக் கிரமவித்தனை அனுப்பப் போகிறேன். சுந்தர சோழனுடைய குலம் இந்த வெள்ளிக்கிழமை நசித்து விடும்..."

"அப்புறம் மதுராந்தகத்தேவன் இருப்பானே?"

"அவன் இருந்தால் இருக்கட்டும். அப்படிப் பட்ட ஒரு பேதை இன்னும் சில காலத்துக்குச் சோழ நாட்டுச் சிங்காதனத்தில் இருந்து வருவதுதான் நல்லது. பாண்டிய சக்கரவர்த்திக்கும் வயது வர வேண்டும் அல்லவா?"

இவ்வாறு பேசிக் கொண்டே ரவிதாஸனும் சோமன் சாம்பவனும் வந்த வழியோடு விரைந்து சென்றார்கள்.

## அத்தியாயம் 29

# இராஜ தரிசனம்

**அ**வர்கள் மறைந்த பிறகு ஊமை ராணி சுரங்கப் பாதை தென்பட்ட இடத்துக்கு வந்தாள். உற்று உற்றுப் பார்த்துப் பாதையைத் திறப்பதற்கு முயன்றாள். முடியவில்லை. ரவிதாஸன் அப் பாதையைத் திறந்த போது அவள் தூரத்தில் நின்றபடியால் திறக்கும் வழியை அவள் கவனித்துப் பார்த்துக் கொள்ள முடியவில்லை.

இரண்டு பேரில் ஒருவனாவது அங்கே கட்டாயம் திரும்பி வருவான் என்று அவள் மனத்தில் நிச்சயமாகப் பட்டிருந்தது. ஆகையால், அவ்விடத்திலேயே காத்திருக்கத் தீர்மானித்தாள்.

அவள் எதிர்பார்த்தது வீண் போகவில்லை. ரவிதாஸனை வெளியில் அனுப்பி விட்டுச் சோமன் சாம்பவன் அங்கே திரும்பி வந்தான். அவன் கையில் தீவர்த்தி இருந்தது. ஆனால் முன்னைக் காட்டிலும் மங்கலாக எரிந்தது. ரவிதாஸனிடம் அவன் எவ்வளவோ தைரியமாகத்தான் பேசினான். ஆயினும் அவன் மனத்தில் பீதி போகவில்லை யென்பது சுற்று முற்றும் மிரண்டு பார்த்துக் கொண்டு வந்ததிலிருந்து தெரிந்தது.

சுரங்கப் பாதை திறந்த இடத்தின் அருகில் வந்து அவன் பீதியுடன் உட்கார்ந்து கொண்டான்.

சற்று நேரத்துக் கெல்லாம் நிவர்த்தி அணைந்து விட்டது.

பிறகு அவன் சுவரின் உச்சியின் மீதிருந்த பலகணியை அடிக்கடி அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்தான்.

அதன் வழியாக உள்ளே வந்த வெளிச்சம் சிறிது சிறிதாக மங்கி மறைந்து கொண்டிருந்தது.

நன்ருக வெளிச்சம் மங்கிச் சூரியன் அஸ்தமித்து விட்டது என்று அறிந்த பிறகு அவன் சுரங்கப் பாதையை மறுபடியும் திறக்கத் தொடங்கினன். இப்போது மந்தாகினி அதன் சமீபமாக வந்து நின்று கொண்டாள்.

பாதை திறந்தது. சோமன் சாம்பவன் அதனுள் இறங்கப் போனன்.

அப்போது அந்த நிலவறையில், அவனுக்கு வெகு சமீபத்தில், 'கிறீச்' என்ற நீடித்த ஓலக் குரல் ஒன்று கேட்டது. சோமன்சாம்பவன் தன் வாழ்நாளில் எத்தனையோ பயங்கரங்களைப் பார்த்தவன் தான். ஆயினும் அந்தமாதிரி அமானுஷிகமான ஒரு சத்தத்தை அவன் கேட்டதில்லை. பேய் என்பதாக ஒன்று இருந்து அதற்குக் குரலும் இருந்தால், அது இப்படித்தான் இருக்க வேண்டும் என்று தோன்றியது. முதல் தடவை அக்குரல் கேட்டதும் சாம்பவன் தயங்கி நின்ருன். அதன் எதிரொலி நிற்கும் வரையில் காத்திருந்தான். இரண்டாந் தடவை அந்த ஓலக் குரலைக் கேட்டதும் அவன் உடம்பின் ரோமமெல்லாம் குத்திட்டு நிற்கத் தொடங்கியது. மூன்ருந் தடவை இன்னும் சமீபத்தில் கேட்ட பிறகு அவனுடைய உறுதி குலைந்து விட்டது. அந்த இருண்டர்ந்த நிலவறையில் வழி துறை கவனியாமல் குருட்டாம் போக்காக ஓடத் தொடங்கினன்.

அவன் மறைந்ததும் ஊமை ராணி அந்தப் பாதையில் இறங்கினள். சில படிகள் இறங்கிய பிறகு சமதரையாக இருந்தது. அதில் விடுவிடு என்று நடந்து போனள். சோமன் சாம்பவன் அவள் இறங்குவதைப் பார்த்திருந்து திரும்பி வந்தாலும் அவளைப் பிடித்திருக்க முடியாது. அவ்வளவு விரைவாக நடந்தாள். நரகத்துக்குப் போகும் தொலைவில்லாத இருண்ட வழியைப் போல் தோன்றியது. ஆயினும் அதற்கும் ஒரு முடிவு இருந்தது. செங்குத்தான சுவரில் முடிந்த இடத்தில் மேலே இடைவெளி சிறிது தெரிந்தது. சில படிகளும் கைக்குத் தென்பட்டன. அவற்றின் வழியாக ஏறியபோது தலையில் நிலைஒன்று முட்டியது. பாதாளப் பாதையின் படிகளுக்கும் மேலே தலை முட்டிய இடத்துக்கும் நடுவில் சிறிய சிறிய இடைவெளிகள் காணப்பட்டன. அவற்றின் ஒன்றில் நுழைந்து வெளியில் வந்தாள். சுற்றிலும் பெரிய பெரிய பூத வடிவங்கள் தென்பட்டன. ஈழத் தீவில் பிரம்மாண்டமான சிலை வடிவங்களைப் பார்த்தவளானபடியால் அந்தக் காட்சி அவளுக்குத் திகைப்பை உண்டு பண்ணவில்லை. தான் வெளிவந்த பாதை எங்கே முடிகிறது என்பதை நன்ருய்க் கவனித்துக் கொண்டாள். பத்துத் தலை இராவணன் தன் இருபது கைகளினலும் கைலையங்கிரியைப் பெயர்த்து எடுத்துக் கொண்டிருந்தான். மலைக்கு மேலே சிவனும் பார்வதியும் வீற்றிருந்தார்கள். இராவணன் மலையைத் தூக்கிய இடத்தில் கீழே பள்ளமா யிருந்தது. மேலே தூக்கி நிறுத்திய மலையை அவனுடைய இருபது கைகளும் தாங்கிக் கொண்டிருந்தன. அவற்றில் இரண்டு கைகளுக்கு மத்தியில் இருந்த இடைவெளி வழியாக அந்தச் சிற்ப மண்டபத்துக்குள் தான் பிரவேசித்திருப்பதைத் தெரிந்து கொண்டாள். கைலையங்கிரிக்கு அடியில் அப்படி ஒரு பாதை இருக்கிற தென்பது சாதாரணமாகப் பார்ப்பவர்களுக்கு ஒரு நாளும் தெரியாது. அதன் அடியில் இறங்கிப் பார்க்கலாம் என்ற எண்ணமும் யாருக்கும் தோன்ருது. சமயத்தில் ஒளிந்து கொள்ளுவதற்குக் கூட அது சரியான மறைவிடந்தான்.

சில மணி நேரம் அந்தச் சிற்பச் சுரங்கப் பாதையின் அதிசயத்தைப் பார்த்துக்கொண் டிருந்து விட்டு மந்தாகினி அச்சிற்ப மண்டபத்தைச் சுற்றினள். வெளிச்சம் மிகக் குறைவா யிருந்தபோதிலும் இரவில் பார்த்துப் பழக்கமுற்ற அவளுடைய கூரிய கண்களுக்கு எல்லாம் நன்ருகத் தெரிந்தன.

ஓரிடத்தில் சோழ குலத்து முன்னேர்களில் ஒருவரான சிபிச் சக்கரவர்த்தி புருவின் உயிரைக் காக்கத் தம் உடலின் சதைகளை அறுத்துக் கொடுக்கும் காட்சி சிலை வடிவத்தில் இருந்தது. சிபியின் வம்சத்தில் பிறந்தவர்களானபடியினல் அல்லவோ சோழர்களுக்குச் 'செம்பியன்' என்னும் பட்டம் உரியதாயிற்று? அந்தச் சிற்பத்தைக் கூர்மையாகக் கவனித்துப் பார்த்த பிறகு ஊமை ராணி அப்பால் சென்ருள். பிரம்மாண்டமான சிவ பெருமானுடைய சிலையின் சிரஸிலிருந்து

கங்கை நதி கீழே விழும் காட்சி ஒரு சிற்பத்தில் அமைந்திருந்தது. அருகில் பகீரதன் கை கூப்பிய வண்ணம் நின்று கொண்டிருந்தான். கீழே விழுந்த பாகீரதி நதி ஒரு பிரம்மாண்டமான ரிஷியின் வாய் வழியாகப் புகுந்து காது வழியாக வெளியேறியது. அப்படி வெளியேறிய கங்கையில் ஒரு சிறிய முனிவர் குண்டிகையில் தண்ணீர் மொண்டு கொண்டிருந்தார். அவர்தான் குறுமுனிவர் என்று பெயர் பெற்ற அகஸ்திய ராக இருக்க வேண்டும். அந்தக் குண்டிகையை அவர் இன்னொரு சிறிய மலையின் மீது கவிழ்த்தார். குண்டிகையிலிருந்து பெருகிய நதி வரவரப் பெரிதாகிக்கொண்டு சென்றது. இந்தச் சிற்பக் கங்கையிலும் காவேரியிலும் அவற்றை அமைத்தபோது தண்ணீர் பெருகுவதற்கு ஏற்பாடும் செய்திருக்க வேண்டும். ஆனால் இப்போது அவற்றில் தண்ணீர் இல்லை. காவேரி நீண்டு வளைந்து மலைப் பாறைகளின் வழியாகவும் மரமடர்ந்த சோலைகளின் வழியாகவும் சென்றது. அதன் இருபுறமும் அநேக சிவன் கோயில்கள் இருந்தன. கடைசியாகக் காவேரி கடலில் கலக்க வேண்டிய இடத்தில் அந்தச் சிற்ப மண்டபத்தின் மதின் சுவர் இருந்தது. ஏதோ சந்தேகப்பட்டு ஊமை ராணி அந்த இடத்தில் மதின் சுவரில் கையை வைத்து அமுக்கினாள். சிறிய கதவு ஒன்று திறந்தது. அதன் வழியாக வெளியேறினாள். அவள் வெளியேறிய இடம் அரண்மனைத் தோட்டம். அதற்கு அப்பால் வெகு சமீபத்தில் அரண்மனையின் உன்னதமான மாடங்கள் காணப்பட்டன. சுற்றுமுற்றும் பார்த்தாள். மங்கிய அந்தி மாலையின் வெளிச்சத்தில் தோட்டத்தில் யாருமில்லை என்று தெரிந்தது. பழுவேட்டரையரின் தோட்டத்தில் விழுந்து கிடந்தது போலவே இங்கேயும் மரங்கள் முறிந்து விழுந்து கிடந்தன. ஆகையால் தோட்டத்தில் யாராவது இருந்தாலும் அவள் சிற்ப மண்டபத்திலிருந்து வெளி வந்ததைப் பார்த்திருக்க முடியாது. இன்னும் நன்றாய் இருட்டட்டும் என்று சிற்ப மண்டபத்தை யொட்டியே நின்று காத்திருந்தாள். ஒருவேளை கையில் வேலையுடைய அந்த யமகிங்கரன் வந்தாலும் வரக்கூடும். ஆகையால், சிற்ப மண்டபத்துக்குள்ளும் அடிக்கடி எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அரண்மனையில் தீபங்கள் ஒவ்வொன்றாகச் சுடர் விட்டு எரியத் தொடங்கின. சிறிது நேரத்துக்கெல்லாம் அரண்மனை முழுதும் ஒரே ஜகஜ்ஜோதியாகக் காட்சி அளித்தது. கீழ் அறைகளில் ஏற்றிய தீபங்கள் பலகணிகளின் வழியாக வெளியில் ஒளி வீசின. மேல் மாடங்களில் ஏற்றிய தீபங்கள் வானத்து நட்சத்திரங்களுடன் போட்டியிட்டுக் கொண்டு பிரகாசித்தன.

"ஐயோ! பகல் வேளையைக் காட்டிலும் இரவு மிகவும் அபாயகரமாகத் தோன்றுகிறதே!" என்று மந்தாகினி எண்ணினாள்.

அரண்மனையை நாலு புறமும் நன்றாக உற்றுப் பார்த்தாள். சிற்ப மண்டபத்துக்குச் சமீபமாக இருந்த அரண்மனைப் பகுதியிலே மட்டும் அதிக விளக்குகள் இல்லை என்பதைக் கவனித்துக் கொண்டாள். காவேரி வெள்ளத்திலிருந்து தான் எடுத்துக் காப்பாற்றிய தன் உயிருக்குயிரான செல்வக் குமாரனை இலங்கையில் கொல்ல முயற்சித்த பாதகனும் அவனுடைய தோழனும் அரண்மனையின் இந்தப் பகுதியிலேதான் மேல் மாடத்தில் ஏறி நின்றார்கள். ரவிதாஸன் இன்னொருவனிடமிருந்து வேலை வாங்கி யார் மீதோ எறிவதுபோல் குறி பார்த்த இடம் இதுதான். நல்ல வேளையாக, இந்தப் பகுதியில் அதிகமாக தீபங்கள் ஏற்றவில்லை. அதற்குக் காரணம் யாதாயிருக்கலாம்?......நல்லது; அதுவும் சீக்கிரத்தில் தெரிந்து போகிறது.

நன்றாக அஸ்தமித்து அரண்மனைத் தோட்டத்தில் இருள் சூழ்ந்தவுடனே மந்தாகினி சிற்ப மண்டபத்தின் வாசலிலிருந்து மிரண்டோடும் மானின் வேகத்துடன் பாய்ந்து சென்று அரண்மனையை அடைந்தாள். அரண்மனையின் அந்தப் பின் பகுதியில் வட்ட வடிவமான தாழ்வாரங்களும் அவற்றைத் தாங்கி நின்ற வரிசை வரிசையான தூண்களும், பல இடங்களில் மேல் மாடத்துக்கு ஏறும் படிக்கட்டுகளும் காணப்பட்டன. தாழ்வாரங்களில், பெரிய விருந்துகளுக்குச் சமையல் செய்ய உதவும் பிரம்மாண்டமான தாமிரப் பாத்திரங்கள், பழசாய்ப் போன தந்தப் பல்லக்குகள், ஒடிந்த சிங்காதனங்கள்,— இப்படிப் பல பொருள்கள் இருந்தன. அவற்றின் மத்தியில் சிறிது நேரம் சுற்றிப் பார்த்துவிட்டு மந்தாகினி கடைசியாக ஒரு படிக்கட்டின் மீது துணிந்து ஏறினாள். கீழே இருந்தது போலவே மேல் மாடத்திலும் வட்ட வடிவமான தாழ்வாரங்களும் அவற்றின்

மேற் கூரையைத் தாங்கிய சித்திர விசித்திரமான தூண்களும் வேலைப்பாடு அமைந்த பலகணிகளும் நிலா முன்றில்களும் அவற்றில் பளிங்குக்கல் மேடைகளும் காணப்பட்டன. மனித சஞ்சாரம் அற்றதாகத் தோன்றிய அந்த மேன்மாட கூடங்களில் மந்தாகினி சுற்றிச் சுற்றி அலைந்தாள். மாடத்தின் உட்புறத்து ஓரங்களுக்குப் போக அவள் மிகவும் தயங்கினாள். ஓரிடத்தில் உட்புறத்திலிருந்து தீப வெளிச்சம் வருவதைக் கண்டு அங்கே போய்த் தூண் மறைவில் நின்று எட்டிப் பார்த்தாள்.

ஆகா! அவள் பார்த்தது என்ன?

பார்த்த கண்களைத் திருப்பவே முடியாத காட்சியைப் பார்த்தாள்.

ஒரு விசாலமான மண்டபத்தின் மத்தியில் விசித்திர வேலைப்பாடு அமைந்த சப்ரமஞ்சக் கட்டிலில் ஒருவர் சாய்ந்த வண்ணம் படுத்திருந்தார்.

அவரைச் சுற்றிலும் நாலு ஸ்திரீகளும் இரண்டு ஆடவர்களும் அச்சமயம் நின்றார்கள். படுத்திருந்தவரிடம் அவர்கள் பயபக்தி கொண்டவர்கள் என்பது அவர்களுடைய தோற்றத்திலிருந்து தெரிந்தது. சிறிது தூரத்தில் இன்னும் அதிக மரியாதையுடன் இரு தாதிப் பெண்கள் நின்றார்கள்.

ஒரே ஒரு தீபந்தான் அந்த மண்டபத்தில் எரிந்தது. அதுவும் கட்டிலுக்கு அருகில் இருந்த விளக்குத் தண்டின் மீது பொருத்தப்பட்டு மங்கலான வெளிச்சத்தையே தந்து கொண்டிருந்தது.

சுற்றிலும் நின்றவர்களை முதலில் மந்தாகினி பார்த்தாள். அவர்களில் ஒருத்தி தன் உயிருக்குயிரான சகோதரன் மகள் பூங்குழலி என்பதை அறிந்தாள். மற்றவர்களையும் அவள் முன்னம் சில தடவை மறைவான இடங்களிலிருந்து பார்த்திருக்கிறாள். ஆனால், அவர்கள் எல்லாம் யார் யார் என்பது அவ்வளவு நன்றாகத் தெரியாது.

சுற்றி நின்றவர்களைப் பார்த்து விட்டு மிக மிகத் தயக்கத்துடன் மந்தாகினி கட்டிலில் படுத்திருந்தவரைப் பார்த்தாள். அவளுடைய நெஞ்சு ஒரு கணம் ஸ்தம்பித்து விட்டது.

ஆம்; அவரேதான்! எத்தனையோ யுகம் என்று சொல்லக் கூடிய நீண்ட காலத்துக்கு முன்னால், தான் சின்னஞ் சிறு பெண்ணாக ஓடி விளையாடிக் காடுகளில் திரிந்து கொண்டிருந்த காலத்தில், ஓடத்தில் வந்து ஒதுங்கி, தன் உள்ளத்தையும் உயிரையும் கொள்ளை கொண்ட மனிதர்தான். தான் வாழ்ந்திருந்த பூதத் தீவைச் சில காலம் சொர்க்க லோகமாக ஆக்கியிருந்தவர்தான். பெரிய கப்பலில் கூட்டமாக வந்தவர்களால் அழைத்துப் போகப்பட்டவர்தான்!

ஆகா! அவர் இப்போது எப்படி மாறிப் போயிருக்கிறார்!

பூர்வ ஜன்மம் என்று சொல்லக் கூடிய அந்த நாட்களுக்குப் பிறகும் மந்தாகினி அவரைப் பல தடவை அவரறியாமல் பார்த்திருக்கிறாள். காவேரி நதியில் உல்லாசப் படகுகளில் அவர் சென்றபோது கரையில் அடர்ந்த புதர்களின் மறைவில் ஒளிந்திருந்து பார்த்திருக்கிறாள். நகரங்களின் தெருக்களில் வெண் புரவிகள் பூட்டிய தங்க ரதத்தில் வீதி வலம் வந்தபோது கூட்டத்தோடு கூட்டமாய் நின்று பார்த்திருக்கிறாள். ஆனால் கடைசியாக அவரைப் பார்த்துக்கொஞ்ச காலம் ஆகிவிட்டது. அந்தக் காலத்திற்குள்ளே தான் இப்படி மாறிப் போயிருக்கிறார். முகத்தில் தாடியும் மீசையும் வளர்ந்திருந்தன. கன்னங்கள் ஒட்டி உலர்ந்து போயிருந்தன. நெற்றியிலே சுருக்கங்கள். ஆகா! அந்தக் கண்களில் ஒரு காலத்தில் குடிகொண்டிருந்த காந்த ஒளி எங்கே போயிற்று? தெய்வமே! இப்படியும் மனிதர்கள் மாறுவது உண்டா? இலங்கைத் தீவில் விஷ ஜுரத்தினால் பிடிக்கப்பட்டவர்கள் பலரை நீண்ட நாள் காய்ச்சலுக்குப் பிறகு உயிர் போகும் சமயத்தில் ஊமை ராணி மந்தாகினி பார்த்ததுண்டு.

ஆகா! ஒரு சமயம் தங்கச் சூரியனைப் போல் பிரகாசித்துக் கொண்டிருந்த இவருடைய களை ததும்பிய முகமும் அவ்வளவாக மாறிப் போயிருக்கிறதே?

ஒருவேளை இவருடைய அந்திய காலமும் நெருங்கி விட்டதோ!

திடீரென்று மந்தாகினிக்கு அன்று மாலை தான் பார்த்த பயங்கரக் காட்சி நினைவுக்கு வந்தது. அவள் அச்சமயம் நின்ற இடத்திலே தான் ரவிதாஸன் என்னும் கொலைகாரனும் அவனுடைய தோழனும் நின்றார்கள். அங்கிருந்து தான் வேல் எறியக் குறி பார்த்தார்கள். ஒரு வேளை கட்டிலில் படுத்திருப்பவர் மீது எறியத்தான் குறி பார்த்தார்களோ?

இந்த நினைவினால் மந்தாகினியின் உடம்பெல்லாம் வெடவெடவென்று நடுங்கியது. கண்களைச் சுற்றிக் கொண்டு வந்தது. மயக்கம் வரும் போலிருந்தது. தூணைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு கால்களை ஊன்றி நின்று சமாளித்துக் கொண்டாள். (தொடரும்)








# ஜே. பி. மங்காராமின்
## பிரசித்திபெற்ற
# பிஸ்கோத்துகள்




- மிருதுவானது
- ருசியுள்ளது
- மொறுமொறுப்பானது

**ஜே. பி. மங்காராம் & கம்பெனி, குவாலியர்**

ஏஜண்டுகள்: மெஸர்ஸ். ஜி. ஜெகநாதந்த் நந்தலால் & கோ. 1/94, ராமசாமி தெரு, மண்ணடி, மதறாஸ்

---

# தி பாவுஸோரி பெனிபிட் சிட் பண்டு லிட்.

(இந்தியாவில் ஸ்தாபிக்கப்பட்டது)

3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி

தபால் பெட்டி நெ. 414 · மதராஸ்-5

தந்தி: 'EVERMENS'.... போன்: 85834



இவ்வருட

முதல்

## மாதாந்திர சீட்டுகள்

மாதா மாதம் நூற்றுக்கணக்கான மக்கள் சேர்ந்து, சிரமமின்றிச் சிறுகச் சிறுக சேமித்து சந்தோஷப்படும் சீட்டு

ஜனவரி மாத சீட்டு வரிசை

(4-வது வெள்ளிக்கிழமை ஏல வரிசை)

சந்தா சேருவதற்கு கடைசி தேதி 19-1-53 | முதல் ஏலத் தேதி 23-1-53

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டின் மதிப்பு |
|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- |
| D | ரூ. 25/- | ரூ. 625/- |
| E | ரூ. 20/- | ரூ. 500/- |
| F | ரூ. 15/- | ரூ. 375/- |
| G | ரூ. 10/- | ரூ. 250/- |
| | 25 மாதங்கள் | 25 மெம்பர்கள் |

ரூ. 25க்கும் அதற்கு மேற்பட்ட தொகைக்கும் இந்தியாவிலுள்ள அங்கீகரிக்கப்பட்ட பாங்குகளின் செக் பெறவும் கொள்ளப்படும். அதற்குக் குறைந்த தொகைகளை மணியார்டர் அல்லது இந்தியன் போஸ்டல் ஆர்டர் மூலம் அனுப்பலாம். வேண்டுவோருக்கு இலவசமாக சுற்றறிக்கைகளும் விண்ணப்ப பாரங்களும் அனுப்பப்படும்.

சிறுகச் சேமிப்பதற்கு உங்களுக்கு பயிற்சி அளிக்கிறோம்

(போர்டார் உத்திரவுப்படி)

எம். வி. சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்

# தமிழ்க் களஞ்சியம்

டி. கே. சி

## 17. பிள்ளைத் தமிழ்

பிள்ளைக் கவி பாடுவது கஷ்டமான காரியம். பிள்ளைக் கவிகள் எத்தனையோ இருக்கின்றன. அவைகளைப் பாடியவர்களுக்கு என்ன எல்லாமோ தெரிந்திருக்கிறது. அண்டம், பேரண்டம், அகண்டம் எல்லாம் தெரிந்திருக்கிறது. ஆனால் குழந்தையைப் பார்த்ததாகவே தெரியவில்லை; பார்த்திருந்தாலும் அனுபவித்ததாகத் தெரியவில்லை. ஆகவே பிள்ளையைப் பற்றிய ஆனந்தத்தையோ அந்த ஆனந்தத்திலிருந்து பிறக்கும் உருவத்தையோ காண முடியாது.

அண்ட பிண்ட சராசரங்கள் எல்லாம் நம் தலைமேல் விழுந்து புரளலாம். பிள்ளையைத்தான் காண முடிகிறதில்லை.

ஒரு பிள்ளையின் அழகையும் அனுபவிப்பதற்கு லகுவான வழி தாயோடு நின்று பார்ப்பதுதான்.

ஒரு தாய் பேசுகிறாள். அடுத்த வீட்டிலிருந்து வந்த தோழியோடு.

குழந்தையைப் பற்றி ஏதோ குறை கூறுதல்:—

"என்னத்தைச் சொல்ல! இந்தக் குழந்தை படுத்துகிற பாடு இப்படி அப்படி என்று சொல்லி முடியாது. தொட்டிலில் போட்டால் அப்படியே கிடக்க வேண்டாமோ? இப்படியும் அப்படியுமாக உதறித் தொட்டிலையே கிழித்து விடுகிறது. எடுத்து ஒக்கலில் வைத்தால் 'உன்னு' 'உன்னு' என்று உன்னி இடுப்பையே ஒடித்து விடுகிறது. ஒக்கலில் இருந்து எடுத்து மார்போடு அணைத்துக் கட்டினாலோ வயிற்றில் ஒரே மிதி!

கிடக்கில் தொட்டில்
கிழிய உதைத்திடும்
எடுத்துக் கொள்ளில்
மருங்கை இறுத்திடும்
ஒடுக்கிப் புல்கில்
உதரத்தே பாய்ந்திடும்
மிடுக்கிலா மையால்
நான்மெலிந் தேன்நங்காய்

[மிடுக்கு இலாமையால்: தேக பலம் இல்லாத நிலைல்; மெலிந்தேன்: ரொம்பவும் சங்கடப் பட்டுப் போகிறேன்.]

இது குறை கூறுகிற வார்த்தையா; அல்ல. குழந்தையின் தேகம் திடமாய், அழகாய் இருக்கிறது என்பதை அனுபவிக்கிற காரியந்தான். இது பிள்ளைத் தமிழ். தாயின் கண்ணோடு பார்த்து நாமும் அனுபவிக்கிறோம் கவிதையை.

பெரியாழ்வார் தாயோடு தாயாக நின்று பாடிவிட்டார்!



### வந்துவிட்டது கோபம்!

கடற்கரைக் காட்சி என்றால் அலைகள் வருவதும் மீளுவதும் அழகிய காட்சி. பார்த்துக் கொண்டே இருக்கலாம்.

புன்னஞ் சோலைகள் அடர்ந்து நிற்கிறதும், புன்னை மொட்டுகள் கீழே சிதறிக் கிடக்கிறதும் அபூர்வமான காட்சிகள்.

இதையெல்லாம் விடப் பெண் குழந்தைகள் கரைக்கு வருவதும், சிறு வீடு கட்டுவதும், அலைகள் வந்து சிறு வீட்டை அழிப்பதும் கண் கொள்ளாக் காட்சி.

இத்தகைய காட்சிகளோடுகூடிய காவிரிப் பூம்பட்டினத்தைப் பற்றி அவ்வூர்ப் பெண்கள் எக்களிப்போடு பேசுவதில் வியப்பில்லைதானே?

சோழ மன்னன் சாமான்ய மனுஷன் போல் கடற்கரைப் பக்கமாக வந்தான்.*

* இந்தச் சம்பவத்தைக் குறிக்கும் காட்சி இந்த இதழ் அட்டையை அலங்கரிக்கிறது.

மேலே சொன்ன காட்சிகளை அப்படியே நின்று அநுபவித்துக்கொண்டிருந்தான். பெண்கள் சிலர் உட்கார்ந்து உல்லாசமாய்ப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

அவர்களிடம் போய் ஏதாவது பேச வேண்டுமென்று பட்டது. 'உங்களுக்கு எந்த ஊர்?' என்று கேட்டான் மன்னன்.

பெண்கள் தங்கள் உல்லாசப் போக்கில் "சொல்லுகிறோம், கேளுமையா!" என்று சொல்லுகிறார்கள் :

"வழிப் போக்கர்களைக் கொஞ்சம் சிரமப் படுத்துகிற ஊர்தான் எங்கள் ஊர். வாஸ்தவந்தான். சிதறிக் கிடப்பது முத்துக்களா, புன்னை மொட்டுகளா என்பது லகுவில் தெரியாது. இரண்டுந்தான் கலந்து கிடக்கும். எப்படிக் கலந்து கிடக்க நேர்ந்தது—சொல்லுகிறேன், கேளும்.

"இந்தப் பெண் (இது போல மற்றப் பெண்களும்தான்) கடற்கரையின் சரிவில் சிறு வீடு கட்ட ஆரம்பித்தது. ஒரு மணி நேரமாகக் கட்டிக்கொண்டிருந்தது. கட்டியும் முடிந்தது. சாயங்கால வேளை ஆய்விட்டதல்லவா? சமுத்திரம் கொஞ்சம் பொங்க ஆரம்பித்தது. ஒரு பெரிய அலை வந்தது. சிறு வீட்டை முழுக்கிவிட்டது. அலை பின் வாங்கும்போது சிறு வீட்டில் மிச்சம் ஒன்றும் இல்லாமல் அடித்துக் கொண்டு போய்விட்டது.

"பெண்ணுக்கோ கோபம் வந்து விட்டது. கோபத்தில் கடலைப் பார்த்து—'இரு இரு' என்று சொல்லி ஓடுகிறது.

முன்னைத்தந் சிற்றில்
முழுங்கு கடலோத
மூழ்கிப்பே ர
அன்னைக்(கு) உரைப்பன்
அறிவாய் கடலேஎன்(று)
அலறிப்பே ருந்
தன்மை மடவார்
தணந்து குத்த வெண்முத்தம்
புன்னை அரும்(பு)ஏய்ப்பப்
போவாரைப் பேதுறுத்தும்
புகாரேஎம் ஊர்.

[முன்னைத் தம் சிற்றில் : வீட்டு முற்றத்துக்கு முன் கட்டிய சிறு வீட்டை ; முழங்கு கடலோதம் மூழ்கிப் பேர : முழங்கி வந்த அலையானது சிறு வீட்டை முழுக்கி ; கரைத்துக் கொண்டு போக ; அன்னைக்கு உரைப்பன் அறிவாய் கடலே என்று : "இரு இரு கடலே அம்மாவிடம் சொல்லி அடி வாங்கிக் கொடுக்கிறேன்" என்று சொல்லிக் கொண்டு ; அலறிப் பேரும் தன்மை மடவார் : 'ஹோ' என்று கத்திக்கொண்டு வீட்டை நோக்கி ஓடுகிற குழந்தை ; தணந்து உகுத்த வெண் முத்தம் : கழுத்தில் அணிந்திருந்த முத்து மாலைகளை கோபத்தில் பிய்த்தெறியச் சிதறிக் கிடந்த அந்த முத்துக்கள் ; புன்னை அரும்பு ஏய்ப்ப : புன்னை மொட்டை ஒத்திருக்க ; போவாரைப் பேதுறுத்தும் : வழிப் போக்கர்களைத் திகைக்கச் செய்கிற காவிரிப்பூம் பட்டினம்தான் (புகார்) எங்களுடைய ஊர்.]

குழந்தையின் சுபாவம் ஏதோ அதை விட்டுவிட்டு நம்முடைய இதயத்துக்குள் வந்து உட்கார்ந்து கொள்ளுகிறது. ஒட்டிக் கொள்ளுகிறோம் குழந்தையோடு நாம். இது பிள்ளைத் தமிழ். பூர்வமான பிள்ளைத் தமிழ்.

"கூடுந் திரவியத்தின் குவைகள் — திறல்
கொள்ளுங் கோடிவகைத் தொழில்கள் — இவை
நாடும் படிக்கு வினைசெய்து — இந்த
நாட்டோர் கீர்த்தி யெங்கு மோங்க......"



என்ற அமரகவியின் வாக்குக் கிணங்க, கடல் கடந்து சென்று மேனாடுகளிலெல்லாம் வாணிபம் செய்து புகழ் ஈட்டியவர் ஸ்ரீ வெங்கடாசலம் அவர்கள். 1860-ம் வருஷத்திலிருந்து சிறப்புடன் நடைபெறும் 'பி. வெங்கடாசலம் காண்டிமெண்ட்ஸ்' என்ற ஊறுகாய் தயாரிப்பு ஸ்தாபனத்தின் மூலம் தென்னிந்தியாவின் பெருமையை லண்டன் மாநகரில் நிலைநாட்டியவர். அவருடைய குடும்பத்தார் தர்ம ஸ்தாபனங்களுக்கும் கல்விச் சாலைகளுக்கும் பல அரிய தொண்டுகள் செய்திருக்கிறார்கள். சென்னை நரசிங்கபுரத்தில் ஏழைகள் பள்ளிக்கூடமும், சென்னை வண்ணாரப்பேட்டையில் தக்ஷிணாமூர்த்தி இலவச மருத்துவச் சாலையும் அதற்குச் சான்றாக விளங்குகின்றன. பாட்டனாருடைய வர்த்தக ஸ்தாபனத்துடன் அவருடைய உயர் குணங்களையும் உரிமையாகப் பெற்ற ஸ்ரீ பி. வி. எஸ். வெங்கடாசலம் இன்று சென்னை நகரின் சமூக வாழ்க்கையில் பிரபலமடைந்து விளங்குகிறார். ஹரிஜன சமூகத்தைச் சேர்ந்த ஸ்ரீ வெங்கடாசலம் அவர்களை இவ்வருஷத்தில் சென்னை நகரின் 'ஷெரீப்'பாக ராஜாஜி சர்க்கார் நியமித்திருக்கிறார்கள். ஆஸ்திக உள்ளமும் சேவா உணர்ச்சியும் பரம்பரையாகப் பெற்றுள்ள ஸ்ரீ பி. வி. எஸ். வெங்கடாசலம் அவர்களுக்கு நமது மனமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

 சங்கீத மண்டலம் 



ரங்கநாயகி



K. S. நாராயணசாமி



K. K. சிவராமன்



V. துரைசாமி அய்யங்கார்



ஆலங்குடி ராமச்சந்திரன்



M. வைத்தியநாதன்

# வெள்ளிவிழா வித்வத் கோஷ்டி



பழனி விஜயலக்ஷ்மி
வாய்ப்பாட்டு



எம்பார் S விஜயராகவாச்சார்
பாகவதர்



அண்ணசாமி பாகவதர்



கல்யகம் – வீணை




## 3. ராஜா எங்கே?

அந்த வண்டியில் ஏறிய டிக்கெட் பரிசோதகர் எல்லாப் பிரயாணிகளிடமிருந்தும் டிக்கெட்டுகளை வாங்கிப் பார்த்தார். ராஜாவினிடம் அவர் நெருங்கும்போதே அவன் உடம்பு நடுங்கியது.

"ஏண்டா, பையா உன் டிக்கெட் எங்கே?" என்று கேட்டார் டிக்கெட் பரிசோதகர். ராஜா பதில் பேசவில்லை. ஆனால் அழுதான்.

"நீ எங்கிருந்து வருகிறாய்?"

ராஜா பதில் பேசவில்லை. ஆனால் இன்னும் பலமாக அழுதான்.

"சரி, சரி, இறங்கு கீழே!" என்று கூறி டிக்கெட் பரிசோதகர் ராஜாவின் கழுத்தில் கையை வைத்தார். ராஜா அவருக்குச் சிரமம் வைக்காமல் தானாகவே கீழே இறங்கி விட்டான். டிக்கெட் பரிசோதகர் அவனை ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் படுத்துக் கொள்ளச் சொல்லிவிட்டு ஸ்டேஷன் மாஸ்டர் அறைக்குப் போனார்.

ராஜாவுக்கு அழுகை அழுகையாக வந்தது. அவனுக்கு அடுத்தபடி என்ன செய்வது என்றே தெரியவில்லை. நெஞ்சில் குமுறிய துக்கத்தையும் மீறி அவனுக்குத் தூக்கம் வந்து விட்டது.

"பையா, எழுந்திரு!" என்று யாரோ எழுப்பியதும் ராஜா திடுக்கிட்டு எழுந்தான். பொழுது நன்றாய் விடிந்து விட்டது. மணி ஏழு என்று ஸ்டேஷன் கடிகாரம் காட்டியது. டிக்கெட் பரிசோதகர் அவனைத் தம்முடன் வரும்படி சைகை செய்துவிட்டு நடந்தார். ராஜா அவரைத் தொடர்ந்தான்.

ஸ்டேஷனை விட்டு வெளியேறி ஊருக்குள் அவனை அழைத்துச் சென்றார். ராஜா வாய் திறவாமல் அவரைத் தொடர்ந்து சென்றான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் டிக்கெட் பரிசோதகர் ஒரு ஹோட்டல் கட்டடத்துக்குள் நுழைந்தார். ராஜாவும் அவர் கூடவே போனான்.

மேஜையருகில் நாற்காலியில் உட்கார்ந்திருந்த ஹோட்டல் முதலாளி அவரைக் கண்டதும், "வாருங்கள், உட்காருங்கள்!" என்று அன்போடு வரவேற்றார்.

டிக்கெட்டுப் பரிசோதகர் ஒரு மேஜையருகே உட்கார்ந்து கொண்டு, "நீங்கள் முன்பு ஒரு சமயம் ஒரு பையன் தேவை என்று சொன்னீர்களே...!" என்று ஆரம்பித்தார்.

"ஆமாம், ஆமாம்! சொன்னேன். பையன் கிடைத்தானா?...ம்...இது யார் பயல்?"

"இந்தப் பையன்தான்! ரயிலில் டிக்கட் இல்லாமல் பிரயாணம் செய்து வந்தான். சர்க்கார் வளர்த்தாலும் நீங்கள் வளர்த்தாலும் ஒன்றுதானே என்று உங்களிடம் அழைத்து வந்தேன். பயல் அநாதை. எது கேட்டாலும், எப்படிக் கேட்டாலும் ஒன்றும் சொல்லாமல் தேம்பி அழுகிறான். எல்லாம் கொஞ்ச நாள் போனால் சரியாகப் போய்விடும்" என்று கூறிக் கொண்டே ராஜாவை, காலை ஒன்பது மணிக்கெல்லாம் கொண்டு வந்து பவானி ஹோட்டல் முதலாளியிடம் ஒப்படைத்துவிட்டுப் போய்விட்டார், டிக்கட் பரிசோதகர்!

ராஜா பரிதாபமாக ஹோட்டல் முதலாளியைப் பார்த்துக் கொண்டே மௌனமாக நின்றான். மௌனத்தைக் கலைத்தார், முதலாளி.

"ஏண்டா, பையா. இப்படி சும்மா அழுது கொண்டே இருந்தால்......? அழாதே! உன் பெயரென்ன......?"

ராஜா பேசவில்லை. ஆனால் அழுதான்!

"அழாதேடா! அழாமல் சொல். உன் பெயரென்னடா......?" என்று இப்பொழுது அதட்டிக் கேட்டார் முதலாளி.

ராஜா, இரண்டு நிமிஷம் அழுதான்; ஒரு நிமிஷம் தேம்பினான்; அரை நிமிஷம் ஊமையாக நின்றான். பிறகு வாய் திறந்து சொன்னான். "என்...என் பெயர்...ரா...ராஜா!"

"உம்...! இப்போதுதான் நல்லவன் நீ...! சும்மா அழுவதிலே பிரயோஜனம் என்னடா கண்ணா? அழாதேடா ராஜா, அழாதே...!" என்று ராஜாவுக்குத் தேறுதல் கூறியவாறு 'சட்'டென்று திரும்பினார் முதலாளி.

"சேது, இந்தப் பையனை உள்ளே அழைத்துக் கொண்டு போய்க் குளிப்பாட்டு; பலகாரம் கொடு; இவன் கொஞ்ச நேரம் இங்கேயே இருக்கட்டும். அப்புறம் சாயங்காலம் நம்முடைய வீட்டில் விட்டுவிட்டு வா!" என்றார்.

உள்ளே யிருந்து வந்தவன் ராஜாவை அழைத்துக் கொண்டு சமையல் அறைக்குப் போனான்.

பாவம்...! மூக்கைச் சிந்தியபடியே சேதுவைத் தொடர்ந்தான் ராஜா!

* * *

"படிப்பின் மீது சத்தியம் பண்ணிச் சொல்கிறேன் அப்பா! நிச்சயமாக, அவன் அந்த மாதிரி வேலை செய்திருக்கவே மாட்டான்! மாட்டான்! மாட்டான்...!" என்று அழுத்தந் திருத்தமாக உரத்த குரலில் சொன்னாள், சரசா!

ஏன்......?

என்ன காரணமோ தெரியவில்லை, நீலகிரிக்குப் போன அம்மா, அப்பா, சரசா எல்லாம் ஆறாம் நாளன்றே வீடு திரும்பி விட்டார்கள். வீடு வந்து சேர்ந்த ஏழாம் நாளன்றுதான் 'அம்மாவின் டிரங்குப் பெட்டியை உடைத்து, அதிலிருந்த ஐம்பது ரூபாய்களையும் எடுத்துக் கொண்டு ராஜா கம்பி நீட்டி விட்டான்...!' என்ற பேரிடிச் செய்தியைத் தோட்டக்காரன் மூலம் எல்லோரும் அறிந்தார்கள்.

அப்புறம் என்ன...? அம்மா சீறினாள்! அப்பா கர்ச்சித்தார்! அவர்களோடு சேர்ந்து கொண்டு ராஜாவின் திருட்டுத் தனத்தைக் கண்ணாரக் கண்டு விட்டவனைப் போலக் குமுறிக் கருவினான் வரதன்!

சரசா மாத்திரம் ராஜாவின் ஒழுக்கத்தில் உறுதியான நம்பிக்கை வைத்து, அவனுக்காக அப்பாவிடம் ரொம்ப ரொம்ப வாதாடினாள்!

"சரசா! என் கோபத்தைக் கிளறிவிட்டு வீணாக உதை படாதே! என்னவோ அந்தத் திருட்டுக் கழுதைக்காக இப்படிப் பரிந்து பேசுகிறாயே...!" என்று அப்பா உறுமினார்.

"அப்பா, ராஜா வேலைக்காரப் பையன்தான்; ஆனால், எனக்கு அவன் அன்புள்ள சிநேகிதன். அவன்மீது சுமத்தப்படும் இந்தப் பழியை நான் ஒப்புக்கொள்ளவே மாட்டேன்; தயவு செய்து நீங்கள் கூறுவது போல அவனைத் திருடனாக்கிப் போலீஸில் வேறு பிடித்துக் கொடுக்க மட்டும் ஏற்பாடு பண்ணிவிடாதீர்கள்! இந்த விஷயத்தில் கொஞ்சம் நிதானமாக யோசனை செய்து பார்க்க வேண்டும். இவ்வளவு பெரிய காரியம் செய்ய ராஜா ஒரு நாளும் துணிய மாட்டான். அவனுக்குத் தெரியவும் தெரியாது" என்று கூறிக் கொண்டே தேம்பியபடி, பங்களாவுக்குப் பின்புறமுள்ள தோட்டத்தை நோக்கி 'விர்' என்று நடந்தாள் சரசா.

அப்பா, அப்படியும் இப்படியுமாக உலாவினார், ஏதோ முணமுணத்துக் கொண்டே. வரதன், அங்கிருந்த ஒரு சிறு பெஞ்சியின்மீது காலைத் தூக்கி வைத்துக் கொண்டு பேசாமல் நின்றான். கொஞ்ச நேரமாயிற்று.

அப்பா என்ன நினைத்தாரோ......? அவர், 'சட்'டென்று நின்றார். வரதனைப் பார்த்து, "வரதா! அந்தத் திருட்டுப் பயல் இப்போது எங்கே யிருப்பான்...?" என்று ஆத்திரமாகக் கேட்டார்.

வரதன், உஷாராக யோசித்து, "அந்தத் திருட்டுக் கழுதை எங்கே யிருக்கிறானோ...? எனக்கு அவன் இருக்கும் இடம் தெரிந்தால் அவனைக் குண்டுக் கட்டாகக் கட்டித் தூக்கி வந்து உங்கள் காலடியில் போட்டு முதுகுத் தோலை 'உரி உரி!' என்று உரித்து விடுவேனே......!" என்று உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசினான்.

"சரி! நன்றி கெட்ட நாய், ஐம்பது ரூபாயோடு ஒழிந்து போகட்டும்......!" என்று நெடுமூச்சு விட்டுச் சொல்லிக் கொண்டே மேல் மாடியை நோக்கி நடந்தார், அப்பா. அவர் சென்ற பின், வரதனும் அங்கிருந்து தோட்டத்தை நோக்கிக் கிளம்பினான். ஓரிரண்டு நிமிஷங்களுக்குள் தோட்டத்



திற்கு வந்து சேர்ந்த வரதன், தோட்டத்துக் குண்டு மல்லிகை மரத்தடியில் வந்து நின்றான். சுற்று முற்றும் பார்த்தான். தோட்டத்தின் நடுவிலுள்ள நீர்த் தொட்டிச் சுவரின் மீது உட்கார்ந்து விசித்து விசித்து அழுது கொண்டிருந்தாள் சரசா. வரதன், "சரசா!" என்று அழைத்துக் கொண்டே ஒரு விநாடியில் சரசாவின் அருகில் போய் உட்கார்ந்தான். அவள் அழுவதைக் கண்டு "என்ன, சரசா! ஏன் அழுகிறாய்?" என்று பதற்றத்துடன் கேட்டான்.

சரசாவுக்கு ஆத்திரம் குமுறியது!

"போடா! எல்லாம் உன்னால்தான்!"

சரசாவின் இந்தப் பேச்சைக் கேட்டதும் வரதனுக்குத் 'திகீர்' என்றது. 'நம்முடைய சூழ்ச்சியும், சதியும் இவளுக்குத் தெரிந்து விட்டதோ?' என்று எண்ணி மிகவும் பயந்து போன வரதனின் முகம் குபீரென்று வெளுத்துப் போய் விட்டது.

"என்ன சரசா? எல்லாம் என்னாலா ...?" என்று நடுக்கத்துடன் கேட்டான் வரதன்.

"ஆமாம், உன்னால்தான்! என்னவோ நேருக்கு நேர் பார்த்ததுபோல ராஜாவின் மீது பழி சுமத்துகிறாயே! அம்மாவின் பெட்டியை ராஜா உடைத்ததை நீ நேரில் பார்த்தாயா? உன் படிப்பு சாட்சியாகச் சொல்!" என்று ஆத்திரத்துடன் கேட்டாள்.

வரதன் பேசவில்லை; ஊமையைப் போலக் கிடந்தான். சரசா, மறுபடியும் பதுமையாய்ப் போனாள். சிறிது நேரமாயிற்று.

"...அப்பா, கோபமாயிருக்கிறாரே...ஏதாவது நாம் அவர் கருத்துக்கு எதிராகப் பேசினால் நம்மீது கோபித்துக் கொள்வாரே என்றுதான் அப்படிச் சொன்னேன். இதற்கெல்லாம் இப்படிக் கோபப்படலாமா சரசா. நான் உன் சிநேகிதனல்லவா?..." என்று ரொம்பக் கனிவாகப் பேசினான் வரதன்.

சரசா, கண்களைத் துடைத்துக்கொண்டாள்.

"சரசா, நீ ஏன் இப்படிக் கவலைப்படுகிறாய்? ராஜா ரொம்ப நல்லவன். அவன் தலைவிதி ... அப்படி! இன்னும் கொஞ்ச நாளில் நானே அவனைக் கண்டு பிடிக்கிறேன் பார்...ம்...இந்தா..." என்று ஜேபியிலிருந்து எடுத்துத் தயாராக வைத்திருந்த சாக்லெட் பொட்டலத்தைச் சரசாவிடம் நீட்டினான் வரதன்.

"எனக்கு வேண்டாம்" என்று தன் வெறுப்பெல்லாம் தெரியக் கூறினாள் சரசா.

"சாப்பிடு, சரசா" என்று கெஞ்சினான்.

இளகிய மனமுள்ள சரசா, மெல்லத் திரும்பினாள். அவன் கையிலிருந்த சாக்லெட் பொட்டலத்திலிருந்து இரண்டு சாக்லெட்டுகளை எடுத்துக் கொண்டாள். பிறகு வாயில் போட்டுக் கொண்டு தின்ன ஆரம்பித்தாள். இன்று, பாலை மறந்து சோற்றைத் தின்ற நாய்க் குட்டியை நினைத்து நெஞ்சம் களித்துப் புன்னகை புரிந்து கொண்டே, தானும் ஒரு சாக்லெட்டை எடுத்து வாயில் போட்டுக் கொண்டான் வரதன்! (தொடரும்)

# படித்துப் பாருங்கள்!

## பார்த்திபன் கனவு

ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு சோழ நாடு சுதந்திரம் இழந்து அடிமை நாடாயிருந்தது; பல்லவ சாம்ராஜ்யத்தின் புகழ் நெடுந் தூரத்துக்கு நெடுந்தூரம் பரவிக் கிடந்தது. அக்காலத்தில் சோழ நாட்டை ஆண்டு வந்த பார்த்திப சோழன் பரத கண்டம் முழுவதும் சோழ நாடு பரந்து நிற்க வேண்டும் என்று கனவு காண்கிறான்; அவன் மனத்துள் எழுந்த கனவைச் சித்திரங்களாகத் தீட்டி, ஏங்கி உள்ளம் குமுறுகிறான். தன் வீரப் புதல்வன் விக்கிரமனுக்கும் ராணி அருள்மொழிக்கும் தன்னுடைய கனவைப் பற்றிக் கூறுகிறான்; அக் கனவைக் குறிக்கும் சித்திரங்களையும் காட்டுகிறான். இழந்த சுதந்திரத்தை மீண்டும் பெறுவதற்குப் பல்லவ சக்கரவர்த்தியாகிய நரசிம்ம வர்மரோடு பார்த்திபன் வீரப் போர் புரிந்து வீர மரணம் அடைகிறான். மரணத் தறுவாயில் பல்லவ சக்கரவர்த்தியிடம் தன் கனவைப் பற்றிக் கூறுகிறான். மாமல்லர், பார்த்திபன் கனவைப் பூர்த்தி செய்து வைப்பதாக வாக்குறுதி யளிக்கிறார். அந்த வாக்குறுதியின் காரணமாகச் சக்கரவர்த்தி, தமிழ் நாட்டின் பிரிவுகளை நீக்கி ஒரு குடையின் கீழ் ஆளவேண்டும், தம் சாம்ராஜ்யத்தின் புகழ் அகில உலகமும் பரவவேண்டும் என்று தாம் நீண்ட நாட்களாகக் கண்டு கொண்டிருந்த கனவையும் கைவிட நேர்ந்தது.

அதுமட்டுமா! விசித்திர சித்த மகாப் பிரபுவான வீரமாமல்லர் மாறுவேஷம் பூண்டு சோழ மண்டலம் முழுவதும் சுற்ற வேண்டி வந்தது; விக்கிரமனை வீர மகனாக வளர்க்கும் பொறுப்பை ஏற்க நேர்ந்தது. கடைசியில் பகைவனுடைய மகனுக்குத் தம் அருமைக் குமாரி குந்தவியையும் கொடுக்க நேர்ந்தது.

இந்த அருமையான பழந்தமிழ் நாட்டுச் சரித்திரப் பின்னணி கொண்ட பெருங் கதைக்கு ஓடக்காரப் பொன்னனும் வாயாடி வள்ளியும் உறு துணையாக அமைந்திருக்கிறார்கள். இத்தகைய கதை நம் தமிழ் நாட்டுக்கு முற்றிலும் புதிது. "கல்கி"யில் இந்த நவீனம் தொடர் கதையாக வெளி வந்தபோது ஆயிரம் ஆயிரம் வாசகர்கள் ஆர்வத்துடன் படித்து ரசித்தார்கள்; பிறகு இது புத்தக வடிவில் வெளி வந்ததும் ரசிகப் பெருமக்கள் அதிக ஆவல் காட்டியிருக்கிறார்கள் என்பது, இம்மாபெரும் நூலின் ஐந்தாவது பதிப்பு வெளிவந்திருப்பதிலிருந்து தெரிகிறது.

பிரசுரம்: பாரதி பதிப்பகம், உஸ்மான் ரோட், தியாகராயநகர், சென்னை-17. விலை: ரூ. 7.

## துன்பந் தீர்கின்ற காலத்திலே

அடிமை நாட்டில் நாம் எப்படி எப்படியெல்லாமோ வளர்ந்து விட்டோம். ஆம், நாம் வளர்ந்த முறை, நாம் பெற்ற கல்வி இவை பற்றிச்

சொல்லிக் கொள்வதைவிடச் சொல்லிக் கொள்ளாமல் இருப்பதே நலம். ஆனால் நம் பெற்றோர் செய்த பிழைகளை நாமும் செய்யவேண்டும் என்பதில்லை யல்லவா! ஆகவே, பாரத நாட்டின் எதிர் காலப் பிரஜைகளான இன்றையக் குழந்தைகளை நல்ல முறையில் வளர்க்க வேண்டியது இன்றைய பெற்றோரின் கடமையாகும். அதற்குப் பெரிதும் உதவும் வகையில் அமைந்திருக்கிறது திரு பி. ஸ்ரீ அவர்களின் இந்தப் புஸ்தகம்.

குழந்தையின் மனோதத்துவம் அறிந்து அதற்குத் தக்கபடி பழக வேண்டும். 'இதைச் செய்யாதே! அதைத் தொடாதே!' முதலிய கட்டளைகளால் குழந்தை எவ்வளவு குட்டிச் சுவராகி விடக்கூடும் என்பதை வலியுறுத்துகிறார்.

மொத்தத்தில் குழந்தைகளைப் பெற்றவர்களும், பெறப் போகிறவர்களும் படித்துப் பயன் பெறக்கூடிய புஸ்தகமாக இருக்கிறது.

பிரசுரம்: அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை 4. விலை: ரூ. 2.

## பாராயண கிரந்தங்கள்

ஆதிசங்கரர் வடமொழியில் பல ஸ்தோத்திர கிரந்தங்களைச் செய்திருக்கிறார். **ஸ்தோத்திர மாலை** என்னும் நூலில் முக்கியமான சில ஸ்தோத்திரங்கள் தமிழில் கொடுக்கப்படுகின்றன. (விலை: 0–2–6) **பஜகோவிந்தம்** தனி நூலாகத் தமிழ் உரையுடனும் தமிழ் எழுத்தில் ஸ்லோகங்களுடனும் பிரசுரிக்கப் பட்டிருக்கின்றது. விலை: 0–4–0.

சர்வலோக சாக்ஷியாக விளங்கும் சூரிய பகவானை வணங்கி வழிபடுவதற்கு ஏற்ற நூல் **ஆதித்ய ஹ்ருதயம்**. அந்நூலின் வடமொழி ஸ்லோகங்களைத் தமிழில் பிரசுரித்து, தெளிவான பொருளும் எழுதப் பட்டிருக்கிறது. (விலை: 0–4–0.)

விக்கினேசுவர பூஜையிலிருந்து அர்ச்சனை, தூப, தீப, ஆராதனை விவரங்களுடன் **சர்வத் பூஜை** தமிழில் பிரசுரிக்கப் பட்டிருக்கிறது. விலை: 0–4–0.

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் சங்கராச்சாரிய ஸ்வாமிகளின் திருவுருவப் படம். கையினால் எழுதப் பட்டது. (அளவு: 8"×6") விலை: அணு 4.

பிரசுரகர்த்தர்: தஞ்சை, ஆக்கூர் கே. எஸ். ஸ்ரீநிவாசன், கருணை பப்ளிஷிங் ஹவுஸ், 60, ஈசுவரன் கோயில் தெரு, மாம்பலம், சென்னை–17.

## வெண்ணிலவிலே

வான வீதியில் உல்லாஸமாகப் பவனி வரும் வெண்மதியைப் பாடாத புலவர் இல்லை; எழுதாத ஓவியன் இல்லை; போற்றாத கவிஞன் இல்லை.

" நாதர்முடி மேலிருக்கும்
வெண்ணிலாவே—அங்கே
நானும்வர வேண்டுகின்றேன்
வெண்ணிலாவே "

என்று ஸ்வாமி ராமலிங்கப் பெருமான்கூடப் பாடிச் சந்திரனோடு தோழமை பூண்டிருக்கிறார். அத்தகைய சந்திரனைப் பற்றிப் புலவர் பெருமக்கள் பலர் கூறியவற்றைத் தொகுத்து விரிவான கட்டுரைகளோடு இந்நூலில் வெளியிடப் பட்டிருக்கின்றது.

ஆசிரியர்: வித்வான் ஜி. சுப்ரமண்ய பிள்ளை; பிரசுரம்: நியூ புக் ஸ்டால், சிதம்பரம்; விலை: ரூ. 2–0–0.

---

அகில இந்திய மாதர் சங்க மதுரை கிளை அங்கத்தினர்கள் சங்க உதவி நிதிக்காக "சித்தார்த்தா", "சிவதாண்டவம்" மற்றும் சில ஹாஸ்ய நாடகங்களை மதுரை எட்வர்டு ஹாலில் நடத்தினர். கிளைச் சங்கக் காரியதரிசி ஸ்ரீமதி லில்லி ரத்தினம் இந்நிகழ்ச்சி வெற்றிகரமாக நடத்தும் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். ரூ. 4000/-க்கு மேல் வசூலாயிற்று. மேலும்



ஸ்ரீமதி லில்லி ரத்தினம்

அவரே சித்தார்த்தா, விஷ்ணு பாகங்களை ஏற்று வெற்றிகரமாக நடித்தார். இந்த வைபவத்துக்கு ஸ்ரீமதி அம்ருதா ராமசுப்பிரமணியம் தலைமை வகித்தார்.

பிரதான நாடகங்களும், "காதலர் கண்கள்" என்ற ஹாஸ்ய நாடகத்துணுக்கும் பொது ஜனங்களது பெரும் பாராட்டைப் பெற்றன.



குமாரி பிரபா — பாண்டிய ராஜன்; ஸ்ரீமதி ராஜி நாராயண் — சிவன்; குமாரி ராதா கிருஷ்ணு — பார்வதி; ஸ்ரீமதி மோகன ராமானுஜம் — பாண்டிய ராணி

# மூக்கம்மாளின் காதல்

முரளி

'போர்ட்டர்' நாராயணசாமியின் தலைக்குமேல் ஒரு கனத்த பாரம் இருந்தது. வேறு ஒரு பொருத்தமான ஆள் தலைக்கு அதை மாற்றிவிட எவ்வளவோ பிரயத்தனப் பட்டான். ஆனால் ஆள் அகப்பட்டால் தானே? இரவிலும், பகலிலும், தூக்கத்திலே யுங்கூட அந்தச் சுமை அவனுக்குப் பெரும் மன வேதனையை அளித்தது. அவனைப் பெத்தவர்கள் அதை அவன் தலையில் கட்டி விட்டுப் போய் விட்டார்கள். அவன் தங்கை மூக்கம்மாளுக்கு இன்னும் சரியான ஜோடி தகைந்த பாடில்லை!

திரவியம் இனி பிரியாத தென்னங் கன்று போல நின்று கொண்டிருந்தான். மாமன் மகள் என்ற பாசம் துளியாவது இருந்தால் நேரில் வந்து ஒரு வார்த்தையாவது கேட் டிருக்கமாட்டானா? அல்லது ஒரு மூக்காலணா 'கார்டை' யாவது தூதனுப்ப மாட்டானா! அவனைச் சொல்லி என்ன பயன்? அதிர்ஷ் டம் அவனைத் தூக்கி ஒரு நாற்காலியில் உட்கார வைத்துவிட்டது. அவனாவது, ஒரு 'போர்ட்டரி'ன் தங்கையான அரைப் பைத்தி யத்தைக் கண்டெடுத்துப் பார்ப்பதாவது!

மூக்கம்மாளுக்கு மட்டும் திடமான நம்பிக்கை இருந்தது. சிறு வயது முதல் திரவியம் அவள் மீது கொண்டிருந்த அன்பு, அவர்கள் பேசிக் கொண்ட ரகசியங்கள், விளையாடிய விளையாட்டுக்கள் எல்லாம் அவளுக்குத்தானே தெரியும்? "நீ எனக்கு, நான் உனக்கு" என்று திரவியம் செய்து கொடுத்த சத்தியங்களை யெல்லாம் அவள் எண்ணி வைத்திருந்தாள். 'கலெக்டர்' உத்தி யோகமே கிடைத்துவிட்ட போதிலுங்கூட அவன் அவளை மறந்துவிட முடியாது. மறந் திருந்தால் இதற்குள் அவன் வேறு கல்யா ணம் செய்து கொண்டிருப்பானே!

"மூக்கம்மா!" என்றான் நாராயணசாமி.

அவள் கனவு லோகத்திலிருந்து விடுபட் டுச் சுய நினைவுக்கு வந்தாள்.

"என்ன, பலமாக யோசனை பண்ணுகிறாய்?"

"அத்தானைப் பற்றித் தான், அண்ணே!"

"அவன் தான் உன்னை ஏறிட்டுக் கூடப் பார்க்க வில்லையே! அப்படி யிருக் கும்பொழுது தங்கச்சி, நீ மட்டும் எதற்காக உருகிப் போகிறாய்?"

"அதெல்லாம் கிடை யாது. அத்தான் ரொம்ப நல்லவரு! மூக்கம்மாளைத் தான் கட்டிக்கு வேன்னு ஒரு நாளைக்கு உன்னிடம் வந்து கேட்கவில்லே, என் பெயர் மூக்கம்மா இல்லே!"

"பிடிச்சியே தங்கச்சி, அருமையான குரங்குப் பிடி! 'லெட்டர் போடு கிறேன் லெட்டர் போடுகிறேன்' என்று ஒரு கத்தைக் கடிதாசைக் காலி செய்தியே! அஞ்சாறு பெனிசல் குச்சி கொண்டாந்து போட்டேன். அத்தனையும் அரிவாள் மனை யாலே சீவிச் சீவிக் கரைச்சியே! அதற்கு அவன் ஏதாவது பதில் போட்டானா? அவன் எட்டாத கொம்பிலே எவனோடு இருக்கி றானே? நீ அண்ணாந்து பார்த்துப் பெரு மூச்சு விடுகிறாய்!"

"சும்மா வாயை மூடிக்கிட்டு இரு, அண்ணே! உனக்கு ஒண்ணுமே தெரியாது. நான் எழுதின லெட்டரு எல்லாம் மேல் விலாசம் தப்பாப் போச்சு!"

"அதை எப்படிக் கண்டாய்?"

"அப்படி இருக்கப் போய்தான் அவரிட மிருந்து பதில் வரவில்லே."

மூக்கம்மாள் திரவியத்தினிடம் கொண் டிருந்த காதலையும் அவன் அதற்குப் பதில் போடாமல் இருப்பதையும் நினைக்க நினைக்க நாராயண சாமியைச் சிந்தனைச் சுமை இன் னும் பாரமாக அழுத்தியது.

★

காலையில் சரியாக மணி பத்தடித்துச் சில விநாடிகளில் திரவியம் திகைத்துப் போய் விட்டான். அந்த நேரத்தில் அவன் பக்க மாக ஒரு அதிர்ஷ்டக் காற்று அடிக்க ஆரம் பித்தது. ஒரு அப்பாவி வக்கீல் குமாஸ்தாவை இப்படி ஒரு அதிர்ஷ்டம் திடீரென்று அமுக் கிக் கொள்ளும் என்று அவன் எதிர் பார்க்க வில்லை. ஐந்து நிமிஷ காலம் அவன் திக்கு முக்காடிப் போனான்.

"என்ன, திரவியம்! அம்மங்காள் தான் லெட்டர் போட்டிருக்கிறாளோ?" என்று கேட்டார் வக்கீல். திரவியம் சுருட்டி வாரிக் கொண்டு எழுந்தான். வாயிலிருந்து வார்த்தை புறப்படுமுன் அவன் கையில் வைத்திருந்த கடிதம் சட்டைப் பைக்குள் புகுந்து விட்டது. "ஹி ஹி......ஹி! ஆமாம், லெட்டர் வந்

திருக்கு!'' என்று அவன் சிரித்த சிரிப்பில் அசடு வழியவில்லை என்பது அவன் நினைப்பு!

சாயந்திரம் வீட்டுக்கு வந்ததும் இரண்டு தினங்களுக்குமுன் வந்திருந்த ஒரு கடிதத்தை எடுத்துப் பிரித்தான் திரவியம்.

*''அத்தான் அவுங்களுக்கு உங்கள் கொளுந்தியா மூக்கம்மா எழுதிக் கொண்டது......''*

சரக்கென்று அந்தக் கடிதத்தை உள்ளங் கைகளுக்கிடையில் வைத்துக் கசக்கி வாசலில் எறிந்தான்.

நேற்று வரை மூக்கம்மாளின் மீது அவனுக்கு அபார ஆசை இருந்தது. 'ஒண்ணே, கண்ணே' என்று வளர்ந்த மாமன் மகள். எடுத்ததற்கெல்லாம் இடது கைப் பெருவிரலைப் பதிக்கும் நாராயணசாமியைப் போலில்லாமல் அவளுக்குக் கொஞ்சம் படிப்பு வந்திருந்தது. குழந்தைப் பருவத்திலிருந்து அவள்மீது கொண்டிருந்த அன்பு நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளராமற் போனாலும் கொஞ்சமும் குறையாமல் இருந்தது. அவளிடமிருந்து வந்த கடிதங்களையெல்லாம் சிறு குழந்தைகள் சேர்க்கும் தீப் பெட்டிப் படங்களைப்போல அடுக்கி வைத்திருந்தான். ஒவ்வொன்றுக்காகப் பதில் எழுதிக் கொண்டிருப்பதை விட நேரடியாகப் போய் நிச்சயதார்த்தம் செய்து கொள்ளலாமென்று பேசாமல் இருந்தான்.

ஆனால் காலையில் பத்து மணியிலிருந்து அவனிடம் இருப்பியிருந்த யோகம் அவன் போக்கை மாற்றிவிட்டது. சாம்பிராணிப் புகையை ரசித்துக் கொண்டிருக்கும்போது ஜவ்வாது ஊதுவத்தியின் பரிமளம் எங்கிருந்தோ வந்தது. எங்கே இருக்கிறது அந்த ஜவ்வாது ஊதுவத்தி?

அவனுக்கு அதிர்ஷ்டத்தைக் கொண்டு வந்த அந்தக் கடிதத்தை இன்னொரு தடவை எடுத்துப் பார்த்தான் திரவியம். இரண்டு ரூபாய் செலவு செய்து அதற்குக் கண்ணாடிச் சட்டங்கூடப் போட்டு வைக்கலாம். அவ்வளவு முத்து முத்தான எழுத்துக்கள்!

*''அன்புள்ள அத்தான்!*

*இந்தக் கடிதமாவது என்னை உங்களுக்கு ஞாபகப் படுத்தும் என்பது என் நம்பிக்கை. நீங்கள் இவ்விதம் பராமுகமாக இருந்து கொண்டிருப்பது என்னை ரம்பத்தால் அறுக்கிறது. அப்போதெல்லாம் உங்கள் முகதரிசனமாவது கிடைத்துக் கொண்டிருந்தது. தேடக் கிடைக்காத திரவியம் என்று உங்களை மனத்தில் வைத்துக் கொண்டாடினேன். இப்போதோ என்னை அறவே மறந்து விட்டீர்கள். அன்று ஆசை முகம் காட்டி விட்டு இன்று என்னை நிராதரவாக விட்டிருக்கிறீர்கள்.*

*துணிந்து இதை உங்களுக்கு எழுத வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. இங்கே பூனைக்கும் கிளிக்கும் பொருத்தம் பார்க்கிறார்கள். உங்கள் முயற்சியால் என்னை உங்களுடைய உடைமையாக்கிக் கொள்ளாவிட்டால் கிணற்றிலோ குளத்திலோ நான் மிதப்பதைக் கேள்விப் படும்போது நீங்கள் ஆச்சரியப்பட வேண்டாம்.*

*உங்களை எதிர்பார்த்திருக்கும்,*

*ராஜம்மாள்.''*

திரவியம் ஏழெட்டு வருஷங்கள் பின்னால் நடந்து பார்த்தான். இவ்வளவு நாட்களும் மறைவிலேயே வளர்ந்து கொண்டிருந்த ராஜம்மாள் துடிக்கும் இளம் பருவத்தோடு அவன் மனக்கண் முன் நின்றாள். அவனுடன் படித்துக் கொண்டிருந்தபோது அவள் எவ்வளவு சிறுமியாக இருந்தாள்! இப்போது எங்கே யிருக்கிறாளோ?

கடிதம் பெயரை மட்டும் சொல்லியது. 'கவர்' ஊரைக் காட்டிக் கொடுக்கவில்லை. அனுமதேய 'எக்ஸ்பெரிமெண்டல்' தபால் முத்திரைதான் அதில் பதிக்கப்பட்டிருந்தது.

ராஜம்மாளுக்குச் சொந்த ஊரே மதுரைதான். செல்வம் கொழிக்கிற வீடு. அணி அணியாக அவளை நகைகளால் போர்த்தியிருந்தார்கள். அவளது சந்திரவதனச் சாயல், பிற்காலப் பேரழகி என்பதை நிரூபித்துக் காட்டியது. ஆனால் அவள் சுந்தரேசன் என்பவனுடன்தானே அதிகம் பேசிச் சிரித்துக் கொண்டிருந்தாள்! இலை மறை காய் போல அவள் தன் மீதுதான் அன்பு வைத்திருக்கிறாள் என்பதைத் திரவியம் இவ்வளவு நாட்களும் உணரவில்லையே! ஆகா! அத்தான் என்று எவ்வளவு உரிமையோ எழுதுகிறாள்!

''கிணற்றிலோ குளத்திலோ நான் மிதப்பதை.........''

ஊஹூம். கூடவே கூடாது. அவ்வளவுக்கு விட்டு வைத்தால் நாம் இந்த ஜன்மம் எடுத்து என்ன பயன்?

வெளுத்த வேஷ்டி, சட்டை யெல்லாம் போட்டுக் கொண்டு காலன் பிடியிலிருந்தும், மணம் ஒப்பா மணத்திலிருந்தும் ராஜம்மாளை விடுவிக்க ஆபத் பாந்தவனாகக் கிளம்பி விட்டான் திரவியம். அந்தத் தெருவும் அவளுடைய வீடும் அவனுக்குக் கொஞ்சம் நினைவில் இருந்தன. குறுக்கே வந்த தெருக்களையெல்லாம் வாயுவேகத்தில் தாண்டி வந்தவன் சித்திரக்காரத் தெரு முனைக்கு வந்ததும் 'பிரேக்கை'ப் பிடித்தான். அப்போது இரவு மணி ஏழு. அக்கம்பக்கத்திலெல்லாம் மின்சார விளக்குகள் பகலைப் பழித்தன. ஆனால் அந்த வீடு இருட்டிக் கிடந்தது. காரணம் கதவையும் நிலையையும் இணையப் பொருத்தி ஒரு பூட்டு வெளியில் தொங்கியது.

ஆளற்ற வீடா அது? அடுத்த கட்டம் என்ன?

ஆபத்பாந்தவனாக வந்த திரவியம் திக்குத் தெரியாமல் விழித்துக் கொண்டிருப்பதைப் பொறுக்க மாட்டாமல் தானோ என்னவோ, பக்கத்து வீட்டி லிருந்து ஒருவர் தெருவுக்குத் தாம்பூலம் துப்ப வந்தார். வீட்டுக்குள் நுழையப் போன அவரைக் கூப்பிட்டு, ''ஸார்!... ராஜப்பா இந்த வீட்டில் தானே இருக்கிறார்?'' என்று அந்த வீட்டைச் கட்டிக் காட்டிக் கேட்டான்.

''ராஜப்பாவா? எந்த ராஜப்பா?''

''முனிசிபல் ஆபீஸ் கிளார்க், ராஜப்பா!''

''ஊஹூம்!''

''பக்கத்திலே வேறு எந்த வீடாவது இருக்குமோ?''

''ஊஹூஹூம்!''



"இந்தத் தெருவிலேயே அப்படி ஒரு ஆள் இல்லையா?" என்று கேட்டான்.

"நான் இந்தத் தெருவிலேயே பிறந்து இங்கேயே வளர்ந்தவன். எனக்குத் தெரிந்தவரை ராஜப்பா என்ற பெயரில் ஆளே கிடையாது—ஒரே ஒருவரைத் தவிர!"

"ஓஹோ! அந்த ஒருவர் யார்?"

"அது சாட்சாத் நானேதான். ஆனால் அது கூட என் பட்டப் பெயர்!"

"அப்படியா?"

"தம்பி! நீ மறதியாகப் பேரை மாற்றிச் சொல்கிறாயோ என்று நினைக்கிறேன்!"

"இல்லையே! ராஜப்பா என்றுதான் நல்ல ஞாபகம் இருக்கிறது."

"நீ கேட்கிறது ராஜம்மாவாக இருந்தால் அது இந்த வீடுதான். ஆனால் முனிசிபல் ஆபீஸுக்கும் அவளுக்கும் சம்பந்த மில்லை!" என்று சொல்லி விட்டு வீட்டுக்குள் போய் விட்டார் அவர்.

திரவியம் ஒரு பெரிய சிக்கலை அவிழ்த்து விட்டான். திட்டமாக ராஜம்மாள் இங்கேயே தான் இருக்க வேண்டும். சரி, அப்படியானால் வீட்டிலுள்ள அத்தனை பேரும் எங்கே போயிருப்பார்கள்?

அவன் தெருவின் வடக்கு முனையில் போய் நின்று கொண்டு தெற்கே பார்த்தான். தெற்கே போய் நின்று கொண்டு வடக்கே பார்த்தான். இரண்டு மணி நேரத்திற்குப் பிறகு வயிற்றைப் பசி கிள்ளவே, நம்பிக்கை இழந்து வீட்டை நோக்கி நடந்தான்.

★

மறு நாள் காலையிலும் குறி தப்பாமல் அதே நேரத்திற்கு இன்னொரு கடிதம் வந்தது. மீண்டும் ஊரைச் சொல்லாத 'எக்ஸ்பெரிமெண்டல்' தபால் முத்திரைதான். இருந்தால் என்ன, வீடுதான் தெரிந்து விட்டதே! கட்டுப்படாத ஆத்திரத்தோடு திரவியம் அதைப் பிரித்துப் படித்தான்.

*"அன்புள்ள அத்தான்!*

*முந்திய கடிதம் உங்களுக்குக் கிடைத்திருக்காது என்றுதான் எண்ணுகிறேன். கடிதம் கிடைத்திருந்து என்னுடைய நிலைமை விளங்கியிருந்தால் நீங்கள் இவ்விதம் அலட்சியமாக இருக்க மாட்டீர்கள். உங்களுடைய சந்திப்பு எப்பொழுது கிடைக்கு மென்று எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறேன். உங்களுக்கு மனம் இல்லாவிட்டால் விட்டுச் சொல்லி விடுங்கள். மௌனமாக இருந்து என்னை இலவு காத்த கிளியாக்க வேண்டாம். நீங்கள் அல்லது மரணதேவன்! யாரிடம் தஞ்சம் புகுவது என்று தடுமாறிக் கொண்டிருக்கும்.*

*ராஜம்மா"*

பகல் முழுவதும் திரவியத்துக்கு நிதானத்துடன் வேலை செய்ய ஓடவில்லை. எத்தனையோ கேஸ் கட்டுகளுடன் வக்கீலோடு

அன்று கோர்ட்டுகளில் ஏறி இறங்கிய அவனை ஒரே ஒரு கேஸ்தான் கினைவில் தோன்றிப் பயமுறுத்திக் கொண்டிருந்தது. ராஜம்மாளின் தற்கொலை! திரவியம் சாட்சி! அவளிடமிருந்த இரண்டு கடிதங்கள்! ஒவ்வொரு நிமிஷத்தையும் அவசரமாகத் தள்ளி விட்டுக் கொண்டிருந்தான் திரவியம்.

வக்கீலிடமிருந்து விடுபட்டு நேராகச் சித்திரக்காரத் தெருவை நினைத்துக் கொண்டு ஓடினான் திரவியம். அவன் ராஜம்மாளின் வீட்டை அடைவதற்கும் அவள் குடத்துடன் படியை விட்டு இறங்குவதற்கும் சரியாக இருந்தது. புதையலைக் கண்டெடுத்தவன் போல் சந்தோஷத்தால் திரவியத்தின் முகம் மலர்ந்தது.

"ராஜம்மா!"

அவள் வீட்டுக்குள் பார்த்தாள். அக்கம் பக்கத்திலும் பார்த்தாள். "யார் நீங்கள்?" என்று கேட்டாள் கலவரத்துடன். பட்டப் பகலில் தன் வீட்டு வாசலில் காதலனைத் தனித்துக் காண வேண்டுமென்றால் அது எவ்வளவு பயங்கர நிகழ்ச்சி!

"நான்தான்!"

"நான்தான் என்றால்?"

"நான்தான் திரவியம்! உனக்குக் கூட அடையாளம் தெரியாதபடி நான் மாறிப் போய் விட்டேனா, ராஜம்மா?"

"எந்தத் திரவியம்? என்ன வேணும் உங்களுக்கு?"

"என்ன இப்படிப் பேசுகிறாய், ராஜம்மா? வீட்டிலே யார்?"

"என் அப்பாவும் அம்மாவும்."

"அதுதான் பயந்து நடுங்குகிறாய். நான் அப்புறமாக வந்து சந்திக்கட்டுமா?"

"ஏது விஷயமாக?"

"நீ எழுதிய லெட்டர்கள்! இதோ!"

திரவியம் ஒரு 'கவரை' எடுத்துக் காண்பித்தான். அதில் எழுதியிருந்த மேல் விலாசத்தைக் கூர்ந்து கவனித்து விட்டு ராஜம்மா உதட்டைப் பிதுக்கினாள். "இது என் எழுத்து இல்லையே! யாரோ ஒரு ஆண்பிள்ளை எழுத்தைப் போல் அல்லவா இருக்கிறது!"

"போகட்டும்! இந்த எழுத்து?"

திரவியம் கவருக்குள்ளிருந்த கடிதத்தை எடுத்துப் பிரித்துப்படித்தான். அதைப்பார்த்த உடனே ராஜம்மா மௌனமாகி விட்டாள். விரலைக் கடித்துக் கொண்டு திரவியத்தையும் கடிதத்தையும் மாறி மாறிப் பார்த்தாள். அப்பொழுது எண்ணிக்கையற்ற யோசனைகள் அவள் மனத்துக்குள் ஓடியிருக்க வேண்டும்.

"இது எப்படிக் கிடைத்தது?"

"அதாவது நீ இதை எழுதி இந்தக் கவரிலே அடைத்துப் பெட்டியில் போட்டாய். பிறகு பெட்டியைத் திறந்து......"

"கொஞ்சம் இருங்கள். இதோ வந்து விட்டேன்" என்று ராஜம்மாள் குடத்துடன் வீட்டுக்குள் ஓடினாள்.

திரவியத்துக்கு ஒன்றும் புரியவில்லை. அவன் அங்கு வந்த சமயம் ராஜம்மாள் எப்படி இருந்திருக்க வேண்டும்? கூரை முகட்டிலே கயிற்றைத் தொங்க விட்டு அதைப் பிடித்துக் கொண்டாவது நிற்க வேண்டும். தற்கொலை பண்ணிக் கொள்கிறவளின் லட்சணம் கொஞ்சங்கூட முகத்தில் தெரியவில்லையே! எவ்வளவு ஒய்யாரமாகத் தண்ணீருக்குப் போகிறாள், குடத்தை எடுத்துக் கொண்டு! தோல்வியிலே கலங்காத உள்ளமா? இல்லாவிட்டால் காதல் முற்றிப் பைத்தியமா? காதலனை வரவழைத்துத் தெருவில் நிற்க வைத்துவிட்டு வீட்டுக்குள் என்ன தலை போகிற வேலை? அவன் அவ்வளவு அவசரப்பட்டு அங்கு வந்ததே தப்பு. வேண்டுமானால் ராஜம்மாளும் அவள் பெற்றோருமே அவனைத் தேடிக் கொண்டு வரட்டுமே!

திரவியம் இந்த முடிவுக்கு வந்தபோது அவன் அந்தத் தெருவில் இல்லை!

ராஜம்மாளும் அவளுடைய தகப்பனும் தெருவைப் பார்த்து விழித்தார்கள்.

"இதற்குள்ளே ஆளைக் காணுமே!" என்று கைகளைப் பிசைந்தாள் ராஜம்மாள்.

"சரி, அந்த விலாசத்தைச் சொல்லு!"

"திரவியம், வக்கீல் சிவராமையர் ஜூனியர், மேல ஆவணி மூல வீதி என்று எழுதி யிருந்தது, அப்பா!" என்றாள் ராஜம்மாள்.

அவர் ராஜம்மாளை அப்படியே நிற்க வைத்துவிட்டு எங்கேயோ கிளம்பினார்.

★

அடுத்த நாள் காலையிலும் திரவியத்துக்கு ஒரு 'கவர்' வந்தது. அதைத் திருப்பி விரட்டிவிட வேண்டுமென்று அவனுக்கு அளவு கடந்த ஆத்திரம். ஆனால் பாவம்! அது என்ன செய்யும்? திரும்பிப் போவதற்கு வேறு புகலிடம் இல்லை. அதன்மேல் அனுப்பியவரின் விலாசம் இல்லை. எனவே, அதை உடைத்துப் பார்க்காமலேயே சட்டைப் பைக்குள் வைத்துக் கொண்டான்.

"என்ன திரவியம்! அம்மங்காள் லெட்டர் தானா அது?" என்று கேட்டார் சிவராமய்யர்.

"ஆமாம்......!" என்று சிரித்தான் திரவியம் அசடு வழிந்து ஓட.

"ஏது இவ்வளவு நெருக்கிப் பிடிக்கிறாள்? சீக்கிரத்திலே அவள் கழுத்திலே ஒரு கயிற்றைக் கட்டி முடியேன்!" என்றார் வக்கீல்.

"ஆமாம், சார்! அப்படித்தான் செய்ய வேண்டும். எல்லாம் கிட்ட வந்தாச்சு!" என்று திரவியம் சொல்லி வாய் மூடுமுன் ஒரு சப் இன்ஸ்பெக்டர், இரண்டு ஜவான்கள், ராஜம்மாள், அவள் தகப்பனார் இத்தனை பேரும் அவன் முன்னால் வந்து நின்றார்கள்.

"இந்த ஆள்தான்!" என்றாள் ராஜம்மாள்.

"எங்கே, தம்பி! அந்த லெட்டரை எடு!" என்றார் சப் இன்ஸ்பெக்டர்.

"லெட்டரா?"

"என்ன சமாசாரம்?" என்றார் வக்கீல்.

"இவன் கிட்டே ஒரு லெட்டர் இருக்கிறது, சார்! அதைப் பார்க்க வேண்டும்."

"ஆமாம்! அவன் அம்மங்காள் அனுப்பியிருந்தான்! கடிதாசி இப்பொழுதுதான் வந்தது" என்றார் வக்கீல்.

"அம்மங்காளுமில்லே, அத்தங்காளுமில்லே! நேற்று இவன் ஒரு லெட்டர் வைத்திருந்தான். அதைக் கேட்கிறார்" என்றார் ராஜம்மாளின் தகப்பனார்.

"அதுவும் அவள்தான் அனுப்பியிருந்தாள். மூன்நாளான் கூட ஒன்று வந்தது. அதிலே என்ன தெரியணும் உங்களுக்கு?"

"சார்! இதெல்லாம் அவன் அனுப்பின இல்லே. எங்கிருந்தோ வந்திருக்கின்றன. இதிலே ஏதோ விவகாரம் இருக்கிறாப் போலத் தெரிகிறது."

திரவியம் அந்த மூன்று கடிதங்களையும் கையில் எடுத்துக் கொண்டு வக்கீலைப் பரிதாபகரமாகப் பார்த்தான்.

"இங்கே கொடு!" என்று சப் இன்ஸ்பெக்டர் அந்தக் கடிதங்களைப் பிடுங்கி எடுத்துக் கொண்டார். அவற்றில் ஒன்று உடைக்கப்படாமலே இருந்தது.

"இந்தா, இது உன் பேருக்குத்தானே வந்திருக்கிறது?"

"ஆமாம், சார்!"

"நீயே அதை உடைத்துப் பார்."

திரவியம் அதைப் பிரித்தான். படிக்கவும் முயன்றான் "'அன்புள்ள அத்தான்!' என்று ஆரம்பித்து இன்னும் என்ன வெல்லாமோ எழுதி 'ராஜம்மாள்' என்று கையெழுத்துப் போட்டு வைத்திருக்கிறதே, சார்!" என்றான் திரவியம்.

"இது எப்படி வந்தது?"

திரவியம் விழித்தான். "உ.......ம்......" அதாவது இதை எழுதிய ஆள் தபால் பெட்டியிலே போட்டிருக்க வேண்டும்......" என்று ஆரம்பித்தான்.

"சட், நிறுத்து!"

"நேற்றும் இவன் இப்படித்தான் சொன்னான்!" என்றாள் ராஜம்மா.

"இதைத் தவிர வேறு 'லெட்டர்' வந்ததா?"

"நிறைய வந்திருந்தது. என் மாமன் மகள் மூக்கம்மாள் எழுதி யிருந்தாள். அவ்வளவையும் கிழித்துப் போட்டு விட்டேன்!"

"சரி, நீ கொஞ்சம் ஸ்டேஷன் வரை வா! புறப்படு!" என்று அதட்டினார் இன்ஸ்பெக்டர்.

"சார்! இதெல்லாம் என்ன? கொஞ்சம் விளங்கும்படியாகச் சொல்லுங்களேன்!" என்றார் சிவராமய்யர்.

"எல்லாம், தானே விளங்கும். இவன் ஒரு திருடன்!" என்று விறைப்புடன் சொல்லி விட்டுத் திரவியத்தை முன்னால் விட்டுத் தள்ளிக் கொண்டு போனார் சப் இன்ஸ்பெக்டர்.

★

மூக்கம்மாள் வீட்டில் தனியாக இருந்தாள். அவள் கை வலிக்கவும் கை வலிக்காமலும் திரவியத்துக்கு எத்தனையோ கடிதங்களை எழுதி விட்டாள். அவன் கொஞ்சமாவது அசைந்து கொடுத்தால்தானே? அந்த ஏமாற்றத்திலே அவளுக்கு ஒரு ரோசம் பிறந்தது. இரண்டு நாட்களுக்குள் திரவியம் அவளைத் தேடி வரவேண்டும்; அல்லது அனுகூலமான பதிலாவது அவனிடமிருந்து வர வேண்டும். இல்லாவிட்டால் அவனைக் கட்டோடு மறந்து விடுவதென்று சங்கற்பம் செய்து கொண்டாள்.

"மூக்கம்மா!" என்ற குரல் கேட்டு எட்டிப் பார்த்தாள் அவள். அவள் சங்கல்பம் வீணாகப் போகாமல் திரவியம் அவளைத் தேடிக்கொண்டே வந்து விட்டான். அவனோடு ஒரு சப் இன்ஸ்பெக்டரும் வந்திருந்தது அவளைத் திகைக்கச் செய்தது.

"நீ சும்மா இரு. நான் கேட்கிறேன்" என்று சப் இன்ஸ்பெக்டர் முன்னால் வந்தார். மூக்கம்மாளிடம் ஒரு தாளைக் காண்பித்து, "இது என்ன?" என்று அதட்டினார்.

அவள் விழித்தாள்.

"உ....ம்! சொல்லு!"

"நான்தான் லெட்டர் போட்டிருக்கேன்!"

"இது நீ எழுதினதா?"

"இல்லே. எங்கண்ணன் கொடுத்தான். படிக்கப் பார்த்தேன். நல்லா இருந்தது!"

"இது அவனுக்கு ஏது?" என்று கேட்டார் இன்ஸ்பெக்டர்.

அதே சமயம் 'போர்ட்டர்' நாராயணசாமியும் வீட்டுக்குள் நுழைந்தான். சப் இன்ஸ்



'ஒரு ரூபாய்' நாடகத்தில் பங்கெடுத்தவர்கள்

கடந்த டிசம்பர் 6-ம் தேதி பம்பாய் கலா நிலயத்தார், நவாப் ராஜமாணிக்கம் கம்பெனியில் 12 ஆண்டுகளுக்குமேல் நடித்து அனுபவமுள்ள ஸ்ரீ டி. எஸ். மகாதேவனின் "ஒரு ரூபாய்" நாடகத்தை மிகவும் வெற்றிகரமாக நடத்தினார்கள். அதன் மூலம் வசூலான தொகை சுமார் ரூ. 5000/- செம்பூர் தென் இந்திய சங்கம் பள்ளிக்கூட நிதிக்காக பயன்படுத்தப்படும். சில மாதங்களுக்கு முன் கலா நிலயம் "லைலா" நாடகம் மூலம் ரூ. 2001/- மதராஸ் பஞ்ச நிவாரண நிதிக்கு நன்கொடையாக அளித்தார்கள்.

பெக்டர் ஒரே தாவில் அவன் கையை எட்டிப் பிடித்துக் கொண்டார். "இந்த லெட்டர் தெரிகிறதா?" என்று கேட்டார்.

"ஏ மூதேவி! என்ன செய்தாய் நீ?" என்று மூக்கம்மாளைப் பார்த்துச் சீறினன் நாராயணசாமி.

"நீ கொண்டு வந்த கடிதாசுகளைப் படிச்சுப் பார்த்தேன். கடிதாசு எழுதியிருந்த விதம் நல்லா இருந்திச்சு. அதனுலே, அத்தானுக்கு அனுப்பி வைச்சேன்" என்ருள் மூக்கம்மாள்.

"சில காகிதங்கள் வைத்த உறை அனுமத்தாகப் பிளாட்பாரத்திலே கிடந்தது. அதைக் கொண்டு வந்து, 'இந்தா, அடுப்புப் பற்ற வைக்கப் பேப்பர்!' என்று இவளிடம் கொடுத்தால் இவன் இந்த வேலை செய்திருக்கிருள். இவள்தான் என்னமோ எழுதிக் கிழிக்கிருளாக்கும் என்று ஸ்டேஷன் மாஸ்டரிடம் இங்கிலீஷிலே மேல் விலாசம் எழுதி ஏழெட்டுக் கவர் கொண்டு வந்து கொடுத்தேன். இப்படி என்னை மாட்டி வைத்து விட்டாளே!" என்று காலில் விழுந்து அலறினன் நாராயணசாமி.

திரவியத்தைக் கண்டதும் அவனுக்கு ஆத்ரோஷம் வந்தது. "அப்பா! உனக்கு மனசு சமாதானமாகப் போச்சா? உபகாரந்தான் இல்லே; உபத்திரவம் வேறு செய்கிறுயே! உனக்கு இது நல்லா இருக்கிறதா?" என்ருன்.

"நான் என்ன மச்சான், செய்தேன்? இந்த லெட்டர்களைப் பார்த்து விட்டு நான் ஒரு பெண்ணைச் சுற்றி அலைந்தேன். நல்ல வேளையாகச் சவுக்கடி படாமல் தப்பினேன்!" என்ருன் திரவியம்.

மூக்கம்மாள் பத்திரமாக வைத்திருந்த அந்தக் காகித உறையைக் கொண்டு வந்து வைத்தாள். அதன் மேல் 'சுந்தரேசன்' என்று அழகாக எழுதியிருந்தது. திரவியம் யோசித்தான். அவனோடு படித்த அதே சுந்தரேசனைத்தான் ராஜம்மாள் காதல் கடிதங்கள் எழுதி மணந்திருக்கிருன் என்பதைப் புரிந்து கொள்ள அவனுக்கு அதிக நேரம் ஆகவில்லை.

"பூ! இந்தக் குப்பைக் காகிதங்கள் செய்த வேலையா? என்ன கஷ்டம்!" என்று சொல்லி இன்ஸ்பெக்டர் முகத்தைக் கைக்குட்டையால் துடைத்துக் கொண்டார்.

"இந்தக் காகிதங்களின் உதவியைக் கொண்டு எங்கள் திரவியத்தை எங்களிடம் கொண்டு வந்து சேர்த்தீர்களே! இல்லாவிட்டால் இவன் இலேசில் வருவானு?—எஜமான்! கட்டாயம் மூக்கம்மாள்—திரவியம் கல்யாணத்தை முடித்து வைக்க நீங்கள் வந்து சேரவேணும்" என்று அப்பொழுதே இன்ஸ்பெக்டருக்கு அழைப்புக் கொடுத்து விட்டான் நாராயணசாமி.

மூக்கம்மாளும் திரவியமும் அந்தச் சந்தோஷச் செய்தியைக் கேட்டதும், ஒருவரையொருவர் பார்த்துக் கண்ஜாடை செய்து புன்முறுவல் புரிந்து கொண்டனர். நாராயணசாமியும் தலைச் சுமை இறங்கியவன் போல் அவர்கள் இருவரையும் பார்த்தான்.



# கந்தசாமியின் கல்யாணம்

— எஸ். வி. கிருஷ்ணன் —

கார் இருள்; எங்கும் நிச்சப்தம். ஆந்தையின் அலறல் விழித்திருப்போருக்கு அச்சத்தை ஊட்டியது. தெருக்களில் இரண்டு பக்கத்துப் பிளாட்பாரங்களிலும் பலர் தூங்கிக் கொண்டிருந்தனர்.

அப்போதுதான் கந்தசாமி, கண்ட்ராக்டர் சின்னையன் வீட்டை நோக்கி மெதுவாகப் போய்க் கொண்டிருந்தான். அவன் மிகவும் அச்சத்தோடுதான் நடந்து போனான். போலீஸ்காரர்கள் எங்கேயாவது தன்னைச் சந்தேகிக்கப்போகிறார்களோ என்ற பயம். கடைசியாக அவன் கண்ட்ராக்டர் வீட்டுச் சுவரைத் தாண்டிக் குதித்தான். அவன் அடிமேல் அடி வைத்து மெதுவாகத்தான் போனான். திடீரென்று ஒரு சத்தம் கேட்டது. பின் அது வெறும் பிரமை என்று உணர்ந்து நடந்தான்.

அவன் அடிக்கடி தன் மடியைத் தொட்டுப் பார்த்துக் கொண்டே சென்றான். தான் மடியில் கொண்டு வந்திருந்த சாவிக் கொத்து பத்திரமாக இருக்கிறதா என்று பார்த்த பிறகு வெகு வேகமாகப் பணப்பெட்டி வைத்திருக்கும் அறைக்குள் நுழைந்து விட்டான். தன் மடியிலிருந்த சாவியை எடுத்துப் பணப் பெட்டியைத் திறந்து எண்ணி ஆயிரம் ரூபாயை மாத்திரம் எடுத்துக் கொண்டு நகர்ந்தான். ஆயிரம் ரூபாய்தான் அவனுக்குத் தேவையாய் இருந்தது போலும்! ஆனால் என்ன துரதிர்ஷ்டம்? இருட்டிலிருந்த நாற்காலியின் மீது அவன் கால்கள் மோதியதின் காரணமாகத் தடுக்கி கீழே விழுந்தான். பணம் சிதறியது. அந்த அமைதியான இரவில் கீழே சிதறிய பணத்தின் ஒலி; மணிகள் ஒலிப்பது போல ஒலித்து அந்த இரவின் நிச்சப்தத்தைக் கலைத்தது. பணத்தைத் திரட்டி எடுப்பதற்காக எழுந்து நிமிர்ந்து பார்த்தபோது தன் எதிரில் சின்னையன் சிரித்த முகத்தோடு நின்று கொண்டிருப்பதைப் பார்த்தான். அப்போது கந்தசாமியின் இருதயமே நின்று விடும்போலிருந்தது. உடம்பு வியர்த்தது.

"கந்தா! என்ன யோசிக்கிறே? நான் வந்து விட்டேனென்றா? நீ இம்மாதிரியான காரியம் செய்யத் துணிந்தாய் என்றால் எனக்கே ஆச்சரியமாயிருக்கிறது. உன்னை எவ்வளவோ முன்னுக்குக் கொண்டுவர வேண்டுமென்று முயற்சி செய்து கொண்டிருக்கும் போது இப்படிச் செய்யலாமா? பணம் கேட்டால் ஆயிரம் என்ன, ஐயாயிரம் தந்திருப்பேனே!" என்றார்.

அவருடைய பேச்சு கந்தசாமியை வெட்கித் தலைகுனிய வைத்தது. தன் குற்றத்தை மன்னிக்கவேண்டும் என்று கேட்பது போலிருந்தது அவன் பார்வை.

"உனக்கு எதுக்கப்பா இவ்வளவு பணம்?" என்றார் சின்னையன்.

அச் சமயத்தில் கந்தசாமியால் ஒன்றும் சொல்ல முடியவில்லை. ஆனால் ஏதோ சொல்ல முயன்றான். அவனுடைய குரல் தழுதழுக்க "கலியாணம் செய்து கொள்ளவேணும்" என்றான்.

கண்ட்ராக்டர் சின்னையன் மனது இரங்கி, "கலியாணந்தானே? தாராளமாய்ச் செய்துக்கோ... ஆனால் மறுபடியும் இம்மாதிரியான காரியத்தில் இறங்கினால் வீணா பெண்டாட்டியைத் தவிக்க வைச்சுட்டு ஜெயிலுக்குப் போகும்படியா இருக்கும். சரி, போ. எல்லாத்தையும் சுகமா முடிச்சிக்கிட்டு நல்ல புத்தியோடு மறுபடியும் வேலைக்குத் திரும்பி வா" என்று சொல்லி அனுப்பினார்.

கந்தசாமி மெதுவாக நடந்தான். தன் எஜமானின் உள்ளம் எவ்வளவு கருணை வாய்ந்தது என்பதை அவன் அன்றுதான் சரியாக உணர முடிந்தது. அதை எண்ணி அவன் இருதயமே கரைந்தது.

* * *

அன்று பிற்பகல் அவன் பொன்னியைச் சந்தித்தான்.

"என்ன மச்சான் ஏதோ கவலையாயிருக்கிங்களே...?" என்றாள் பொன்னி.

"ஒன்றும் இல்லே. அதிருக்கட்டும். உன் தாத்தா வீட்டிலிருக்கிறாரா......சாயங்காலம் உன் வீட்டிற்கு வரலாமென்று இருக்கேன்..." என்றான் ஏதோ அவள் கேட்டதற்குச் சம்பந்தமில்லாமல்.

"தாராளமாய் வாங்க! ஆனால் தாத்தா சொன்னபடி......" என்று இழுத்தாள்.

"அதில்லாமல் எப்படி வர முடியும்? எல்லாம் சரியாகத்தான் இருக்குது" என்றான் கந்தசாமி.

"சரி, நான் தாத்தா கிட்டே போய்ச் சொல்றேன். சாயங்காலம் கட்டாயம் வந்திடுங்க" என்று சொல்லி விட்டு வேகமாக நடந்தாள்.

கந்தசாமி ஒரு பெருமூச்சு விட்டான். ஒரு பெண்ணுக்காக எவ்வளவு பெரிய தவறு செய்து விட்டோம். விசுவாசமுள்ள எஜமா

"பொன்னி, ஒரு சட்டி சிமெண்டு கொண்டு வா" என்பான். இல்லாவிடில் "ஒரு அடுக்கு கல் கொண்டு வா" என்பான். அவள் கொண்டு வந்தபின், மற்ற வேலைக்காரர்களை விரட்டிக் கொண்டே அவளோடு கால் மணி அல்லது அரை மணி ஏதாவது பேசிக் கொண்டே யிருப்பான். அவளோடு பேசிக் கொண்டே வேலை வாங்குவதில் அவனுக்கு எவ்வளவு ஆனந்தம் இருந்தது! இதனால் மற்ற வேலைக்காரர்களுக்குப் பொன்னியின் மீது பொறாமை ஏற்பட்டது. பாவம்! அவர்களுக் கென்ன தெரியும்? அவர்கள் இருவருடைய இருதய அந்தரங்கத்திலும் ஓடிக் கொண்டிருந்த காதல் வேகம்!

மாரி காலம் வந்தது. கட்டிட வேலையில் சுறு சுறுப்புக் குன்றியது. முக்கியமான சில வேலைக்காரர்களைத் தவிர மற்றவர்களின் உதவி அவசியமில்லாமல் போய் விட்டது. இதனால் அனேகருக்கு வேலை யில்லாமல் போய் விட்டது. அதில் பொன்னியும் ஒருத்தி. அவளுக்காகக் கண்ட்ராக்டரிடம் தனிச் சலுகையோடு கந்தசாமி சிபார்சு செய்ய அஞ்சினான். ஆகையால் பொன்னி எவ்விதச் சலுகையுமின்றித் தன் வீட்டோடு இருக்க நேரிட்டது.

பொன்னி வேலைக்கு வரா விட்டாலும் கந்தசாமி ஒரு நாளாவது அவளைச் சந்திக்கத் தவறியதே இல்லை. அவளுடைய கஷ்டத்தை உணர்ந்து அவளுக்காகத் தன்னாலான உதவியையும் செய்து வந்தான். அவளை எப்படியாவது கலியாணம் செய்து கொள்ள வேண்டும் என்ற பேராவல் அவனுக்கு இருந்தது. இதைப் பொன்னியும் உணர்ந்தாள். அவளுக்கும் கந்தசாமியைக் கலியாணம் செய்து கொள்ள வேண்டுமென்ற ஆவல் தான். ஆனால்...... அதற்கு இடையூறாக ஏதோ இருந்தது என்பது மாத்திரம் கந்தசாமிக்குத் தெரிந்தது.

அன்று மாலை ஏரிக் கரையில் பொன்னம்மாளும் கந்தனும் சந்தித்தபோது கந்தன் அவளுடைய சௌக்கியத்தை விசாரித்தான்.

"என் சௌக்கியத்துக்கு என்ன மச்சான்? என் தாத்தாவுக்குத்தான் ஓடியாடி வேலை செய்ய முடியவில்லை. எனக்கும் கூலி வேலை ஒன்றும் கிடைக்கவில்லை. எவ்வளவு நாளைக்குக் காலம் ஓட்டறது?" என்றாள் பொன்னி துக்கத்தோடு.

"அப்படிச் சொல்லாதே, பொன்னி. நான் இருக்கும்போது உனக்கென்ன கவலை? நானே உன்னையும் உன் தாத்தாவையும் பார்த்துக்கறேனே. நான் சம்பாதிக்கறதிலே இன்னும் இரண்டு பேர் தாராளமாகச் சாப்பிடலாமே" என்றான். "அது சரிதான் மச்சான். ஆனால் என் தாத்தா சம்மதிக்கணுமே...... கல்யாணப் பேச்சு எடுத்தாலே அவர் என்னென்னவோ சொல்லிக் கொண்டிருக்கிறாரு......" என்றாள்.

"அப்படியா? சரி, நானே உன் தாத்தாகிட்டே வருகிறேன். என்னதான் சொல்றாருன்னு கேட்கிறேன்" என்றான் கந்தசாமி உணர்ச்சி பொங்க.

மறு நாள் கந்தசாமி பொன்னியின் வீட்டிற்குப் போனான். பொன்னம்மாவின் தாத்தா அவனை மிகவும் சந்தோஷத்தோடுதான் வரவேற்றார். கந்தசாமி அவருக்குச் சமீபமாக அவர் பாயில் உட்கார்ந்து மெதுவாகப் பேசலானான்.

ஒருவிதமாகத் தான் பொன்னம்மாளைக் கலியாணம் செய்து கொள்ள இச்சைப்படுவதாக அவரிடம் தெரிவித்து விட்டான்.



தாத்தா சிரித்தவாறு பதில் சொன்னார். "அது சரிதான் தம்பி...... பொன்னம்மாளை உனக்குக் கலியாணம் செய்து கொடுக்கிறதைப்பத்தி எனக்கு ரொம்ப சந்தோஷந்தான். ஆனால் அதிலே ஒரு சங்கடம் இருக்குதே" என்று சொல்லி நிறுத்தி ஒரு பெருமூச்சு விட்டார்.

"என்ன சங்கடம்...?" என்றான் கந்தசாமி கவலையோடும் குழப்பத்தோடும்.

"ஒன்றுமில்லே... இவ தகப்பன் சாகும் போது ஒரு ஆயிர ரூபாய் கடனோடு செத்தான். அதுதான் இவளுடைய கலியாணத்தையும் பாதிக்குது......"

"எப்படி......?"

"அந்தப் பணம் கொடுத்த கடன்காரன் ஒரு பெண்ணாசை பிடிச்சவன். அவன் இதுவரையிலே நாலு பெண்ணைக் கலியாணம் செய்து கிட்டு இருக்கான். யாருக்காவது கடன் கொடுக்கறதா யிருந்தா அந்தக் கடனைத் திருப்பிக் கொடுக்க முடியாதப்போ 'ஒன்று பணத்தையாவது திருப்பி வை இல்லேன்னு உம் பெண்ணையாவது எனக்குக் கலியாணம் செய்து கொடு' என்று

கேட்கிறது அவனுடைய தொழிலாப் போய் விட்டது. இவன் தகப்பன் திடீர்னு செத்துப் போயிட்டான். சாகும்போது எங்கிட்டே 'அந்தக் கடனை அடைக்க முடிஞ்சா அடைங்க. இல்லாட்டி பொன்னம்மாவை அவனுக்குக் கலியாணம் செய்து கொடுத்துடுங்க' என்று அந்தக் கடங்காரனேயும் வைச்சுகிட்டு சொல்லி விட்டுப் போயிட்டான்'' என்றார் கிழவர்.

கந்தசாமி ஆயிரம் ரூபாய்க்கு எங்கே போவான்? எப்படியாவது ரூபாயைக் கொண்டுவந்து கொடுத்துக் கடனை அடைத்து விட்டுத் தானே பொன்னம்மாளைக் கலியாணம் செய்து கொள்வதாகச் சொல்லி விட்டு வந்தான்.

அவன் மனத்தில் ஒரு அசட்டுத் துணிச்சல் எழுந்து போராடியது. பொன்னம்மாவைக் கலியாணம் செய்து கொள்ள வேண்டுமென்ற ஆசையில் எதையும் செய்யத் துணிந்து விட்டான். தான் செய்யப்போகும் காரியத்தையும் பொன்னம்மாளிடம் இரகசியமாகச் சொல்லி வைத்தான்.

அன்று சாயங்கிரம் பொன்னம்மாள் பரபரப்போடு கந்தசாமியிடம் ஓடி வந்தாள்.

"மச்சான்! மச்சான்! தாத்தா ஏதோ மயக்கமா விழுந்து கிடக்கிறாரு வாங்க, வாங்க!'' என்று அலறினாள்.

கந்தசாமி அவளோடு எழுந்து ஓடினான். குடிசையில் கிழவர் மயக்கமாய் விழுந்து கிடந்தார். கந்தசாமி அவர் பக்கத்தில் உட்கார்ந்து தண்ணீரை அவர் முகத்தில் தெளித்து, மெதுவாக அவரைக் கண் விழிக்கச் செய்தான். அவர் கண்ணைத் திறந்து பார்த்து மிரள மிரள விழித்தார்.

"வா தம்பி, வா. நீ இந்தத் துணிச்சலான காரியம் செய்வேன்னு தெரிஞ்சா உன்னைப் பரீட்சை செய்து பார்க்க இந்தப் பொய்யான கட்டுக் கதையைக் கட்டியிருக்கவே மாட்டேன். உனக்கு எங்க மேலே எவ்வளவு பற்றுதல் இருக்குதுன்னு தெரிஞ்சிக்கிறத்துக்காக இவளைக் கலியாணம் செய்து கொள்ள ஆயிரம் ரூபாய் கடனை அடைக்கணும்னு சொன்னேன்! நீ இவளைக் கலியாணம் செய்துக்கணும் என்னும் ஆர்வத்திலே எஜமானன் வீட்டிலேயே திருடறத்துக்குத் தயாராகி விட்டாய். பணம் கிடக்குது. உலகத்தில் அன்புதான் முக்கியம். அன்பு குறையாமே நீ இவளைக் காப்பாற்றி வந்தால் போதும். இதுக்குத்தான் நான் இவளை இவ்வளவு சிரமப்பட்டு வளர்த்தேன். நீங்க ரெண்டு பேரும் கலியாணம் செய்துகிட்டு சௌக்கியமாக வாழ்ந்து அதைக் கொஞ்ச நாள் இந்தக் கண்ணாலே பார்த்துட்டு...'' என்றார் கிழவர் குரல் தழுதழுக்க.

கந்தசாமியின் கல்யாணத்தைப் பற்றிச் சொல்ல வேண்டுமா? கண்ட்ராக்டர் சின்னையன் தாமே அதை முன்னின்று மிகவும் விமரிசையாக நடத்தி வைத்தார்.




நாராயணசாமிக்கு எதிலும் மறதி அதிகம். ஆனால் அதில் ஒரு விசேஷம் என்னவென்றால், அவன் எந்தப் பொருளை மறந்து விட்டாலும் அந்தப் பொருள் அவனிடம் மீண்டும் எப்படியாவது வந்து சேர்ந்து விடும். ஒரு சாமான் தொலைந்து போன சில மணி நேரங்களுக்குள் அவனுக்கே அனேகமாக நினைவு வந்துவிடும். அப்படி நினைவு வரவில்லையென்றால், வேறு யார் கையிலாவது கிடைத்து அந்தப் பொருள் அவன் கைக்கு வந்துவிடும்.

ஒரு சமயம் அவன் தன் நண்பன் சோமுவைப் பார்க்க அவன் ஆபீஸுக்குப் போனான். அங்கே சற்று நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டுத் தன் வீட்டுக்குத் திரும்பினான். வரும் வழியில் தபாலாபீஸுக்குப் போய் அவசரமாக ஒரு கடிதம் எழுதித் தபாலில் சேர்க்க நினைத்தான். அப்போது தான் அவனுக்குத் தன் பார்க்கர் பேனாவின் நினைவு வந்தது. வழக்கம்போல் சட்டைப் பையில் கை வைத்தான். பேனா அங்கே இல்லை. நாராயணசாமிக்குத் திக்கென்றது.

தலைவலியால் அவஸ்தைப் படுகிறவன் மாதிரி அவன் கொஞ்ச நேரம் தலையைப் பிடித்துக் கொண்டு இருந்த பிறகுதான் அவனுக்கு, தன் நண்பன் சோமுவோடு பேசிக் கொண்டிருந்த போது, அவன் மேஜை மீது தன் பார்க்கர் பேனாவை வைத்து விட்டது பளிச் சென்று நினைவுக்கு வந்தது.

உடனே நாராயணசாமி பக்கத்திலிருந்த 'பப்ளிக் டெலிபோனு'க்கு ஓடினான்.



"ஹலோ, சோமு! நான் தான் நாராயணசாமி பேசுகிறேன். சற்றுமுன் உன் ஆபீஸுக்கு வந்து உன்னிடம் பேசிக் கொண்டிருந்தேன் அல்லவா? அப்போது உன் மேஜை மேல் என் பார்க்கர் பேனாவை வைத்து விட்டேன். நான் மௌண்ட் ரோடு தபால் ஆபீஸில் இருக்கிறேன். நீ தயவு செய்து என் பேனாவை உடனே ஆபீஸ் பியூனிடம் கொடுத்தனுப்பு!" என்று சொல்லிவிட்டுத் தபாலாபீஸில் காத்துக் கொண்டிருந்தான்.

கொஞ்ச நேரத்தில், சோமுவின் ஆபீஸ் பியூன் பார்க்கர் பேனாவைக் கொண்டு வந்து கொடுத்தான். நாராயணசாமி பேனாவை வாங்கிக் கொண்டு கடிதம் எழுதினான்.

நாராயணசாமி கடிதம் எழுதித் தபால் பெட்டியில் சேர்ப்பதற்கும், கார்மேகங்கள் எங்கிருந்தோ வந்து ஒரேயடியாக வான வீதியில் பந்தலிட்டு, 'சோ'வென்று மழை பொழிவதற்கும் சரியாயிருந்தது. மழை பிரமாதமாக வலுத்தது. வீட்டுக்குப் புறப்பட்ட நாராயணசாமிக்குத் தன் புதுக் குடையின் நினைவும் வந்தது; தேடினான். இத்தனை நேரமும் தன்னுடன் இணைபிரியாமல் இருந்த குடை இப்பொழுது எங்கே போயிற்று என்பது அவனுக்கே விளங்காத புதிராக இருந்தது.

மீண்டும் தலையைப் பிடித்துக் கொண்டு சற்று நேரம் யோசனை செய்து பார்த்தான். வீட்டை விட்டுப் புறப்பட்ட போது குடை கொண்டு வந்தது நிச்சயம். கமலா கூட, 'புதுக் குடையை எங்கேயாவது வைத்துவிட்டு மறந்து போய், வீட்டுக்கு வந்து தலையைச் சொறியாதீர்கள்!' என்று எச்சரிக்கை செய்தாளே! ஆம். சோமுவின் ஆபீஸுக்குப் போய் அவனோடு பேசிக் கொண்டிருந்து விட்டுப் புறப்பட்டபோது, 'அப்பா, புதுக்குடை. ஞாபகமாக எடுத்துக் கொண்டு போ!' என்று சொல்லிக் கையிலும் எடுத்துக் கொடுத்தானே......ஆமாம். இப்போது நினைவுக்கு வருகிறது! பப்ளிக் டெலிபோனில் சோமுவுடன் பேசியபோது குடையை அங்கே வைத்து விட்டேன். சரி. அங்கே போய்ப் பார்க்கலாம். கால் மணி நேரம் தானே ஆகிறது! ஒருவேளை நம் அதிர்ஷ்டம் இதுவரையில் அந்த டெலிபோனில் யாரும் பேசவில்லை என்றால், நம் குடை கிடைத்தாலும் கிடைக்கலாம் அல்லவா?' என்று தனக்குள் நினைத்துக்கொண்டு நேரே சமீபத்தில் இருந்த டெலிபோன் அறைக்கு ஓடினான், நாராயணசாமி. நல்லவேளையாக மழையும் கொஞ்சம் நின்றிருந்தது.

டெலிபோன் அறையில் நாராயணசாமியின் புதுக்குடைக்குப் பதிலாக ஒரு அழகான பிரம்பு இருந்தது. வெள்ளிப் பூண்கட்டி மிகவும் ஜோராக இருந்த அந்தப் பிரம்பைப் பார்த்ததும் அதை அங்கேயே விட்டுவிட அவனுக்கு மனம் வரவில்லை. பிரம்புக்கு உரியவரிடம் அதைச் சேர்த்து விடலாம் என்றாலோ அவரை எங்கே கண்டு பிடிப்பது? இதுபற்றி அங்கே யாரிடமாவது விசாரித்துப் பார்க்கலாமே

என்றால், உடனே அந்தப் பிரம்புக்கு உரியவர்கள் என்று சொல்லிக் கொண்டு நூற்றுக் கணக்கில் ஜனங்கள் பெருகி விடுவார்களே! போலீஸில் ஒப்படைக்கவும் நாராயணசாமிக்கு மனம் வரவில்லை. 'புதுக் குடை காணாமற் போனதற்கு இந்தப் பிரம்பாவது கிடைத்ததே!' என்று ஒருவாறு திருப்திப் பட்டுக்கொண்டு அந்தப் பிரம்புடன் வீட்டுக்குப் போய்ச்சேர்ந்தான்.



கொட்டுகிற மழையில் சொட்டச் சொட்ட நனைந்து கொண்டு வந்த நாராயணசாமியைப் பார்த்ததும் அவன் மனைவி கமலாவுக்கு வந்தகோபத்துக்கு அளவே இல்லை. விஷயத்தை ஒருவாறு ஊகித்து விட்டாள். குடை காணாமற் போன சமாசாரம் அவளுக்குத் தெரியா விட்டாலும் அவளுக்கு நாராயணசாமியைப் பற்றி நன்றாய்த் தெரியும் அல்லவா?

"புத்தம் புதிய குடையைத் தொலைத்து விட்டீர்கள் அல்லவா?" என்று கோபத்தோடு கேட்டாள் கமலா.

அப்பொழுதுதான் நாராயணசாமிக்குத் தன் குடையைத் தொலைத்துவிட்ட சமாசாரம் நினைவுக்கு வந்தது. குடைக்குப் பதிலாகக் கிடைத்த பிரம்பைக் குடையென்ற நினைப்பில், தலைக்கு நேரே குடை மாதிரி பிடித்துக் கொண்டு வீடு வந்து சேர்ந்தான். குடையை மடக்கி வைப்பதுபோல அபிநயம் பிடித்தான்! இப்படியெல்லாம் செய்ய அவன் பைத்தியக்காரன் அல்ல. அவன் பெரிய மறதிப் பேர்வழி. கமலா குடையைப் பற்றிக் கேட்ட பிறகுதான் நாராயணசாமிக்குக் குடையைத் தான் தொலைத்து விட்டதுபற்றி நினைவு வந்தது.

"குடையை எங்கே வைத்தீர்கள்? தேடிப் பார்த்தீர்களா? நான் நினைத்தது போலவே செய்து விட்டீர்களே!" என்று கமலா பொரிந்து தள்ளினாள்.

நாராயணசாமி ஒன்றும் பதில் பேசாமல் மௌனமாய் நின்றான்.

அந்தச் சமயம் நாராயணசாமியின் மாமனார் உள்ளே நுழைந்தார்.

"என்ன மாப்பிள்ளை, அவசரமாக ஒரு சமாசாரம் என் நண்பருக்கு டெலிபோனில் சொல்ல வேண்டியிருந்தது. மௌண்ட் ரோடு போஸ்டாபீஸுக்கு அருகிலிருக்கும் பப்ளிக் டெலிபோனுக்குப் போய்ப் பேசினேன். பேசி விட்டு, கொஞ்ச தூரம் வந்துவிட்டேன். உடனே மழை பிடித்துக் கொண்டு விட்டது. அப்பொழுது தான் என் கைப் பிரம்புக்குப் பதிலாக என்னிடம் ஒரு புதுக் குடை வந்திருக்கும் மர்மம் தெரிய வந்தது. நல்ல வேளை! மழையில் நனையாமல் குடையைப் பிடித்துக்கொண்டு வீடு வந்து சேர்ந்தேன். யாருடைய குடையோ என் கைக்கு மாறிவிட்டது. என்னுடைய ஜோரான கைப்பிரம்பு யார் கையிலோ சிக்கிவிட்டது!" என்றார்.

மாமனார் சொன்னதை நாராயணசாமி சரியாகக் காதில் வாங்கிக் கொண்டானோ இல்லையோ, அவர் கொண்டு வந்திருந்த புதுக் குடையை ஓடிப் போய்ப் பார்த்தான். அது அவன் குடைதான்! உடனே தான் கொண்டு வந்திருந்த பிரம்பை அவரிடம் காட்டி, "மாமா, இது உங்களுடைய பிரம்புதானே பாருங்கள்!" என்றான்.

அவன் மாமனார் ஒரு தடவை துள்ளிக் குதித்தார்! அந்தப் பிரம்பைக் கையில் வாங்கிப் பார்த்தார். சந்தேகமே இல்லை. அது அவருடைய அருமைப் பிரம்புதான்.

"மாப்பிள்ளை, நல்லவேளை! ஊரிலிருந்து புறப்படும்போதே மூந்தா நாள் அவள், 'நல்ல கைப்பிரம்பை எங்கேயாவது தொலைத்து விட்டு வந்து விடாதீர்கள்!' என்று குறிப்பாகச் சொன்னாள். நல்ல வேளையாக அது உங்கள் கையில் அகப்பட்டதே!" என்று கூறிப் புளகாங்கிதம் அடைந்தார்.

நாராயணசாமி பேச்சற்று நின்றுவிட்டான். அவருக்கு அவன் என்ன பதில் சொல்ல முடியும்?

எப்போதும் அதிர்ஷ்டம் ஒரு நிலையில் நிற்காது என்பது இந்தச் சமயம் நாராயணசாமிக்கு நிச்சயமாக மனசில் பட்டுவிட்டது. அவன் எத்தனையோ பொருள்களை ஞாபக மறதியினால் தொலைத்திருக்கிறான். ஆனால் அநேகமாக அவன் தொலைத்த பொருள்கள் அவனிடமே எப்படியாவது வந்து சேர்ந்து விடுவது வழக்கம். இந்தத் தடவை அவனுக்கு அந்த நம்பிக்கை குலைந்து விட்டது.

அன்று மழை விடாமல் பெய்து கொண்டிருந்தது. நாராயணசாமி புதுக் குடை சகிதம் வெளியே புறப்பட்டான். பிரபல ஹோட்டல் ஒன்றில் தங்கியிருந்த அவனுடைய நண்பர் ஒருவரைப் பார்க்கச் சென்றான். அங்கு அவரைப் பார்த்துப் பேசிக் கொண்டிருந்துவிட்டு வெகு நேரம் கழித்துப் புறப்பட்டான். மழை விடாமல் பெய்து



கொண்டிருக்கவே குடையை அவனால் மறக்க முடியவில்லை. தான் உட்கார்ந்து டிபன் சாப்பிட்டபடி பேசிக்கொண்டிருந்த நாற்காலியில் குடையைத் தேடிப் பார்த்தான். அதை அந்த இடத்தில் காணவில்லை. நாராயணசாமிக்குத் தலை சுழன்றது. எத்தனையோ பேர் ஹோட்டலில் வந்து கொண்டும் போய்க் கொண்டும் இருக்கிறார்கள். அவர்களில் அவன் குடையை யார் எடுத்துக்கொண்டு போனார்களோ? இருந்தாலும் ஒரு முயற்சி செய்து பார்ப்போம் என்று நினைத்து ஹோட்டல் மானேஜரிடம் போனான். அந்த ஹோட்டல் மானேஜர் ராமபத்திரன், நாராயணசாமியின் பால்ய நண்பன்.



“என்ன அப்பா ராமபத்திரன், புதுக் குடை கொண்டு வந்திருந்தேன். நண்பரோடு பேசிக்கொண்டே அந்த மேஜையின் அருகில் குடையை வைத்தேன். இப்பொழுது அதைக் காணவில்லை. இது என்ன அக்கிரமம்!” என்று நாராயணசாமி சற்று ஆத்திரத்தோடு கேட்டான்.

ஹோட்டல் மானேஜர் நாராயணசாமியின் பரபரப்பைப் பார்த்து விட்டு, “நாராயணசாமி, உன் குடை எங்கேயும் போய்விடவில்லை. நம் ஹோட்டலில் தங்கியிருக்கும் இளங் காதலர்கள் பாவம், குடை இல்லாமல் தவித்தார்கள். நான்தான் உன் குடையை எடுத்து அவர்களிடம் கொடுத்தேன். அவர்கள் இப்பொழுது வந்திருப்பார்கள். மாடியில் 2ம் நம்பர் அறையில் போய்ப் பார்! அவர்கள் இருந்தால் நான் சொன்னதாகச் சொல்லி உன் குடையைக் கேட்டு வாங்கிக் கொள்! எப்படியும் உன் குடை கிடைத்துவிடும். பயப்படாதே!” என்று சொன்னான்.

உடனே நாராயணசாமி அந்த இளம் காதலர்கள் தங்கியிருந்த அறைக்கு ஓடினான். அறைக் கதவுகள் உள் பக்கம் தாழிடப் பட்டிருந்தன. பின்வரும் சம்பாஷணை உள்ளேயிருந்து கேட்டது.

பெண்:—இதோ இந்த கண்ணைப் பறிக்கும் நகைகள் அவ்வளவும் யாருக்கு?

ஆண்:—உனக்கேதான், கண்மணி!

பெண்:—ஊரிலுள்ள அந்தப் பங்களா?

ஆண்:—அதுவும் உன்னுடையதே!

பெண்:—இந்தப் பர்ஸிலிருக்கும் பணம்?

ஆண்:—இதைக் கேட்க வேண்டுமா? சந்தேகம் இல்லாமல் உன்னுடையதுதான்!

பெண்:—இதோ இந்த விலையுயர்ந்த ஆடைகள்?

ஆண்:—என்ன இப்படிக் கேட்கிறாய்? உன்னுடையவைதான்!



இந்தச் சமயம் அந்த இளம் பெண் சிறு வெண்கல மணியின் நாதம்போல் சிரித்தாள். பிறகு அவன் கையை எடுத்துத் தன் கையில் வைத்துக் கொண்டாள். “இதோ என் அருகில் அமர்ந்திருக்கும் இந்த இளைஞர் யாருக்குச் சொந்தம்?” என்று கேட்டு விட்டு நாணத்துடன் மீண்டும் கலகல வென்று சிரித்தாள்.

பரவசமடைந்த அந்த இளைஞன், “கண்ணே, என்னைப் பற்றிக் கேட்கிறாயா? நான்தான் எப்போதோ உன்னுடையவனாகி விட்டேனே! என்னத்துக்காக உன் அழகிய வாய் வலிக்க, ஒவ்வொன்றாகக் கேட்டுச் சிரமப்படுகிறாய்? என்னிடமுள்ள சகல பொருள்களும், சந்தேகம் இல்லாமல் உன்னுடையவைதான்!” என்றான் அழுத்தந் திருத்தமாக.

இந்த விநோத சம்பாஷணையைக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்த நாராயணசாமிக்குத் திகில் பிடித்துக் கொண்டுவிட்டது. மறுகணம் அவன் தன்னை மறந்து அவர்களைக் குறுக்கிட்டு, “இதோ பாருங்கள்! நீங்கள் வைத்துக் கொண்டிருக்கிறீர்களே, அந்தக் குடை மட்டும் என்னுடையது!” என்று பலமாகக் கத்தினான்.

அடுத்த நிமிஷம் கதவு திறந்தது. இளைஞன் வெளியே வந்து நாராயணசாமியைப் பார்த்தான்.

“மன்னிக்க வேண்டும். கொஞ்சம் அவசரமாக நாங்கள் வெளியே போக வேண்டிய காரியம் இருந்தது. அதற்காகத் தங்களுடைய குடையை எடுத்துக் கொண்டு போனோம். ஹோட்டல் மானேஜர்தான் எடுத்துக் கொடுத்தார். அவர் உங்களுக்கு நண்பராமே! உங்களிடம் அவர் சொல்லிவிடுவதாகச் சொன்னார். குடையை உங்களிடம் கொடுத்துவிட வேண்டும் என்றுதான் நினைத்துப் புறப்பட்டுக் கொண்டிருந்தேன். அந்தச் சமயம் பார்த்து இவள் என்னத்தை யெல்லாமோ பேச ஆரம்பித்து விட்டாள். அதில் தாமதம் ஆகிவிட்டது. நீங்கள் என்னைத் தவறாக நினைக்கக் கூடாது!” என்று இளைஞன் கெஞ்சும் குரலில் கூறினான். அவன் தோளில் கை வைத்தபடி அந்த இளம் பெண் நின்று ஓரக் கண்களால் நாராயணசாமியைப் பார்த்தாள். உடனே நாராயணசாமியின் உடம்பு முழுவதும் புல்லரித்தது.

நாராயணசாமிக்கு ஒன்றும் புரியவில்லை. “என் குடையை நீங்கள் எடுத்துச் சென்றதைப் பற்றி ஒன்றும் நான் சொல்லவில்லையே! ஏதோ உங்கள் சம்பாஷணை காதில் விழுந்ததும் அதில் நானும் கொஞ்சம் பங்கெடுத்துக் கொண்டேன். அவ்வளவு தான்.



"வியாபாரத்துக்கு ஈயைக் கொல்லும் மருந்து வாங்கிக் கொள்கிறீர்களா?"

"வேண்டாம். சாமானை நிறைய அடுக்கிக் கிட்டு வியாபாரமே இல்லாமல் 'ஈயை' ஓட்டிக் கிட்டு உட்கார்ந்திருக்கிறேன்!"

"அப்படிச் சொல்லுங்கள். 'ஈயை' என்னத்துக்கு ஓட்டுகிறீர்கள்? எங்கள் ஈயைக் கொல்லும் மருந்தை வாங்கி உபயோகித்தால் ஈ வெல்லாம் தானாகப் போய்விடுமே!"

---

பார்க்கப் போனால் நீங்கள்தான் என்னை மன்னிக்க வேண்டும்......உங்களுக்கு வேண்டுமானால் குடையை உபயோகப் படுத்திக் கொள்ளுங்கள். என் நண்பருடன் இன்னும் கொஞ்ச நேரம் பேசிக்கொண்டிருந்து விட்டுப் போகிறேன்......!" என்று தட்டித் தடுமாறிச் சொன்னான்.

நாராயணசாமிக்குப் பதில் சொல்ல வந்த இளைஞனை இடைமறித்து அந்த இளம்பெண், "இல்லை, இல்லை! அவர் குடையை அவரிடமே கொடுத்து விடுங்கள். அப்புறம் மழை நின்று விட்டதானால், அவர் குடையை இங்கேயே மறந்து வைத்து விட்டுப் போய் விடுவார்!......" என்றாள்.

இளைஞன் சிரித்துக் கொண்டே, "ஆமாம், ஸார்! அவள் சொல்லுவதும் சரிதான், இல்லையா? மேலும், நாங்கள் இருவரும் ஒரு குடை வாங்குவதற்குத்தான் கடைத் தெருப் பக்கம் போயிருந்தோம். குடையும் வாங்கி விட்டோம். இந்தாருங்கள் உங்கள் குடை! ரொம்ப வந்தனம்!" என்று சொல்லிக் கொண்டே வந்த இளைஞன் சற்று சுற்றும் பார்த்து விட்டு, "......அடாடா! என்ன இது! புதிதாக வாங்கின குடையைக் காண வில்லையே!" என்று திகைப்புடன் கூறினான்.

அப்பொழுது "மாப்பிள்ளை," என்ற குரல் கேட்டு நாராயணசாமி திரும்பிப் பார்த்தான். அங்கே அவன் மாமனார் நின்று கொண்டிருந்தார். அடுத்த நிமிஷம் அவர் உள்ளே இருக்கும் இளைஞனை நோக்கி, "மிஸ்டர் பாலகங்காதரன் என்பது நீங்கள் தானே?" என்று கேட்டார்.

இளைஞன் சற்று முன்னால் வந்து "ஆமாம். நான்தான். உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டான்.

"ஒன்றுமில்லை. சைனா பஜாரில் குடைக் கம்பெனியில் உங்களைப் பார்த்தேன். அங்கே நீங்கள்......பேச்சுப் பராக்கில்......புதிதாக வாங்கின குடையை மறந்து வைத்து விட்டீர்கள். பணம் கொடுத்து விட்டு 'பில்' வாங்கிக் கொள்ளவில்லை. அத்துடன் இந்தப் பார்சலையும் அங்கே வைத்து மறந்து விட்டீர்கள். அதில் உங்கள் பெயரும் விலாசமும் இருந்ததைப் பார்த்தேன். உங்களிடம் சேர்த்து விடலாம் என்று எண்ணி நானே எடுத்து வந்தேன். குடைக் கம்பெனிக்காரரிடம் என்னை உங்கள் உறவினன், உங்களோடு வந்தவன் என்று சொல்லிக் கொண்டேன். அப்படி இருந்தும் ரொம்பச் சிரமப்படும்படி நேர்ந்து விட்டது. எப்படியோ உங்களைக் கண்டு பிடித்து விட்டேனே......! இந்தாருங்கள்......!" என்று சொல்லி அவர் புதுக் குடையையும் ஒரு சிறு பார்சலையும் இளைஞனிடம் கொடுத்தார்.

நாணமும் மகிழ்ச்சியும் ஒருங்கே பொங்க, இளைஞன் அவைகளைக் கையில் வாங்கிக் கொண்டான்.

"கிரிஜா, நம்முடைய அசட்டுத்தனத்தைப் பார்த்தாயா? பேச்சு மும்முரத்தில் எல்லாவற்றையும் மறந்து விட்டு வந்து விட்டோம்! இவர் இன்றைக்கு அந்தக் குடைக் கம்பெனிக்கு வரவில்லையென்றால், நமக்குக் குடைக்குக் குடையும் நஷ்டம். ஊரிலிருந்து வந்து பார்ஸலும் நஷ்டம். ஆனாலும் இவ்வளவு மறதி கூடாது" என்றான் இளைஞன்.

கிரிஜாவின் முகம் குப்பென்று நாணத்தால் ரோஜாப் புஷ்பம் போல் சிவந்தது.

உடனே நாராயணசாமி, "இல்லை, இல்லை. நீங்கள் மறந்து விடவில்லை. உங்கள் மனத்தில் ஒருவரை ஒருவர் ஞாபகம் வைத்துக் கொண்டு வந்திருக்கிறீர்கள். அவ்வளவுதான்!" என்று ஒரு போடு போட்டான். எல்லோரும் 'கொல்'லென்று சிரித்தனர்.

"சரி. இந்த மறதியின் ஞாபகார்த்தமாக நீங்கள் இருவரும் எங்களுடன் இன்று சிற்றுண்டி சாப்பிட வேண்டும்!" என்று சொல்லி விட்டு ஹோட்டல் சிப்பந்தியைக் கூப்பிட்டுச் சிற்றுண்டி கொண்டு வரச் சொன்னான் இளைஞன்.

நாராயணசாமியும் அவன் மாமனாரும் அவனுடைய வேண்டுகோளைத் தட்டவில்லை.

# பலே மலேயா!

**ஜெயமணி**

சென்னை சர்வகலாசாலை உப அத்யக்ஷகர் டாக்டர் ஏ. லக்ஷ்மணசாமி முதலியார் ஆச்சரியத்தில் மூழ்கினார்.

"எங்கள் தேசத்தைக் கூடத் தூக்கி அடித்து விட்டதே!" என்று கூறி ஸ்ரீ லெஸ்டர் கிரேஞ்சர் மூக்கின்மேல் விரலை வைத்தார். சென்னைக்கு விஜயம் செய்துள்ள நூறு அமெரிக்கப் பிரதிநிதிகள் அடங்கிய கோஷ்டியின் தலைவர்தான் ஸ்ரீ லெஸ்டர் கிரேஞ்சர்.

"இதைப் போல் நான் இதுவரையில் கண்டதே இல்லை" என்று சர்வ தேச சமுதாய மகாநாட்டுத் தலைவர் ஸ்ரீ ஜார்ஜ் ஹெயின்ஸ் சொக்கிப் போனார்.

"இதைக் காண ஆயிரம் கண்கள் வேண்டும்" என்று பொதுஜனப் பிரமுகர் பரவச மடைந்தார்.

மற்றும் பல கனவான்கள் தங்களுடைய மகிழ்ச்சியைத் தெரிவித்துப் புகழ்மாலை சூட்டினார்கள்.

சில தினங்களுக்கு முன் சென்னை மாநகரில் ஆறுவது சர்வதேச சமுதாய சேவை மகாநாடு கூடியது அல்லவா! அதை ஒட்டிச் சென்னை சர்வ கலாசாலைப் பரீட்சை மண்டபத்தில் சர்வ தேசப் பொருட் காட்சி நடைபெற்றது. அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ், பெல்ஜியம், நெதர்லண்ட்ஸ், மலேயா, இந்தோனேஷியா, இஸ்ரேல் முதலிய பல தேசங்கள் மேற்படி காட்சியில் பங்கு எடுத்துக் கொண்டன.

அவற்றில் மலாய் நாட்டின் பொருட் காட்சிப் பகுதிதான் மற்ற தேசப் பகுதிகளைக் காட்டிலும் சிறந்து விளங்கியது. அதுதான் எல்லோருடைய கவனத்தையும் கவர்ந்து, மேலே குறிப்பிட்ட விதம் சகலருடைய பாராட்டுதல்களையும் பெற்றது.

* * *

தற்போது மலேயா இருக்கும் நிலைமையில் அது அவ்வாறு பிரமுகர்களின் புகழுரைக்குப் பாத்திரமானது ஆச்சரியம் அல்லவா!

இரண்டாவது உலக மகா யுத்தம் முடிவதற்கு ஆறு ஆண்டுகள் ஆயின. ஆனால் பன்னிரண்டு வருஷங்கள் ஆகியும் மலேயாவில் நடந்து வரும் பயங்கரப் போர் முடியவில்லை.

பல மாதங்களுக்கு முன் மலேயாவில் இருந்த பிரிட்டிஷ் ஹைகமிஷனர் சர் ஹென்றி கர்னி பயங்கர வாதிகளால் கொலையுண்டார். மலேயா நிலைமை கட்டுக்கு அடங்காமல்போய்விடுமோ என்று பயந்தே பிரிட்டிஷ் பிரதம மந்திரி வின்ஸ்டன் சர்ச்சில், சிறந்த பிரிட்டிஷ் தளபதிகளில் ஒருவரான ஜெனரல் ராபர்ட் டெம்ப்ளர் கே. ஸி. பி., கே. பி. ஈ., ஸி. எம். ஜி., டி. எஸ். ஓ. வைத் தாமே நேரில் தேர்ந்தெடுத்து மலேயாவுக்கு அனுப்பி வைத்தார்.

ஜெனரல் டெம்ப்ளரைப் போல் வேறு எந்தத் தளபதிக்கும் பிரிட்டிஷ் சர்க்கார் இவ்வளவு சர்வாதிகாரம் அளித்ததில்லை. மலேயாவில் ஏற்பட்டுள்ள மோசமான நிலைமையை முன்னிட்டே அவருக்குச் சகல அதிகாரங்களும் அளிக்கப்பட்டிருக்கின்றன. எனினும் இன்னும்கூட அந்த நாட்டில் போர் அடங்கி அமைதி ஏற்படவில்லை.



வி. டி. பிச்சை பிள்ளை

உலகத்தில் உற்பத்தியாகும் மொத்த ரப்பரில் நாற்பது சத விகிதம் மலேயாவில் உற்பத்தியாகிறது. ஈயத்தில் முப்பத்தைந்து சதவிகிதம் அந்த நாட்டில் உற்பத்தியாகிறது. எனவே, இவ்விரண்டும் தான் அந்த நாட்டின் செல்வம் ஆகும்.

அங்கு நடந்து வரும் போரினால் மேற்படி செல்வ உற்பத்திக்குக் குந்தகம் ஏற்பட்டிருக்கிறது. அந்தப் போரைச் சமாளிப்பதற்கு மலாய் நாட்டின் செல்வமும் சர்க்காரின் சக்தியும் அபரிமிதமாக விரயமாகி வருகிறது. அப்படியிருந்தும் மேற்படி நாடு சமுதாய, அரசியல், பொருளாதாரத் துறைகளில் மிகவும் அபிவிருத்தி அடைந்திருக்கிறது எனில், அது பெரிதும் வியக்கத் தக்க விஷயம் அல்லவா!

* * *

சென்னை சர்வகலாசாலை மண்டபத்தில் அமைக்கப்பட்டிருந்த சர்வதேசப் பொருட்காட்சியின் மலேயா பகுதியில், அந்த நாட்டில் பல துறைகளிலும் ஏற்பட்டுள்ள அபிவிருத்திகளை நிதர்சனமாகக் காட்டும் பிரம்மாண்டமான படங்களும் மற்றச் சாதனங்களும் அழகான முறையில் வைக்கப் பட்டிருந்தன.

மலேயாவில் கையினால் செய்யப்பட்ட அபூர்வ சித்திர வேலைப்பாடுகளுடன் கூடிய பலவித வெள்ளிச் சாமான்கள் காட்சி அளித்தன.

ஆள் உயரம் உள்ள ஏராளமான படங்கள் சில நிமிஷ நேரத்துக்கு நம்மை மலாய் நாட்டுக்கே இழுத்துச் சென்று விட்டன.

அங்கு சித்திர நிபுணர்களான பெண்கள் கண்களைக் கவரும் ஜரிகை வேலைப்பாடுடன் கூடிய 'ஸாராங்' துணிகளை நெய்கிறார்கள்.

கண் பார்வையை இழந்த இளைஞர்கள் தொழில் துறைகளில் பயிற்சி பெற்று, வெகு நேர்த்தியான கூடை முதலிய சாதனங்களை உற்பத்தி செய்யும் காட்சி யாரையும் மெய் சிலிர்க்கச் செய்கிறது.

பாமர மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தக்கூடிய கிராமக் கைத் தொழில்களின் அபிவிருத்திக்காகக் கைக் கொள்ளப் பட்டுள்ள பல்வேறு முறைகளையும் தத்ரூபமாகப் பார்க்க முடிகிறது.

அடுத்தபடியாக, மலாய் நாடு முழுவதும் சுகாதார ஸ்தாபனங்கள் வெகு மும்முரமாக வேலை செய்வதைக் காண்கிறோம். ரப்பர், ஈயச் செல்வங்களுக்குப் பிறப்பிடமான மலேயா மலேரியா நோய்க்கும் பிறப்பிடமாக இருப்பதால், அங்கு வைத்திய உதவி, சுகாதார ஸ்தாபனங்களின் அவசியத்தைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை.

மலேயா வெங்கும் நடமாடும் ஆஸ்பத்திரிகள் இருக்கின்றன. அதாவது ஜீப் வான்களில் டாக்டர்கள் நர்ஸ்கள் முதலியோர் கிரா

மம் கிராமமாகச் சென்று ஜனங்களுக்கு வைத்தியம் செய்கிறார்கள்.

தெருக்களில் பிச்சை யெடுக்க விடாமல் அனாதைக் குழந்தைகளை ஆதரிப்பதற்காகப் பல விடுதிகள் அமைக்கப்பட்டுச் சிறந்த முறையில் நடந்து வருகின்றன. வேலை செய்வதற்குத் தகுதியற்ற ஏழைகளுக்கும் அனாதைக் குழந்தைகளுக்கும் உடைகள் தைத்துக் கொடுக்கும் கைங்கர்யத்தில் பலர் ஈடுபட்டிருப்பதைக் காண்கிறோம்.

விபத்துக்களில் அவயவங்களுக்கு ஊனம் ஏற்படும் ஏழைகளுக்குச் செயற்கை அவயவங்களை இலவசமாக விநியோகம் செய்து, அவர்களுடைய வாழ்க்கை பலன் தரத்தக்கதாகச் செய்யும் பொறுப்பை மலேயா சர்க்கார் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

விவசாய அபிவிருத்தி முறைகள் அடங்கிய பெரிய நூல்களையோ, நீண்ட அறிக்கைகளையோ விநியோகம் செய்து மக்களின் மனதைக் குழப்பாமல், அவ்விஷயமாக ஒரு சில வரிகளில் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் சிறந்த வழியை மலேயா சர்க்கார் கையாண்டு வருகிறார்கள். கிராமம் கிராமமாகப் பெரிய விளம்பரங்களை ஒட்டி, எல்லோரும் சிறந்த விவசாய முறைகளை எளிதில் கற்கும்படி செய்கிறார்கள்.

ஆங்காங்கு முதியோர் கல்விச் சாலைகள் அமைக்கப்பட்டுப் பிரயோஜனகரமான முறையில் வேலை செய்வதைக் காண்கிறோம்.

மலேயாவில் சுலபமாகக் கிடைக்கக் கூடிய தீட்டாத அரிசி, கிழங்கு மாவு, ஜவ்வரிசி, கரும்பு, சீமை முள்ளங்கி, சோளம், தேங்காய் முதலிய உணவுப் பொருள்களின் சக்தியைப் பற்றி விளக்கும் வர்ணப் படங்கள் அவற்றைப் பார்ப்பவர்களின் நாக்கில் ஜலம் ஊறும்படி செய்கின்றன.

இத்தனை அபிவிருத்திகள் செய்யப்பட்டிருந்தும், மலேயா ஜனநாயக மணமற்ற பிரிட்டிஷ் காலனியாக இருக்கக் கூடாது என்பதில் மலேயா சர்க்கார் அதிகாரிகள் சிரத்தை கொண்டிருக்கிறார்கள். இந்த உண்மையை அரசியல் சம்பந்தமான படங்கள் விளக்குகின்றன.

"மலேயா ஜனங்களுக்காக, மலேயா ஜனங்களால், மலேயா ஜனங்களுடைய சர்க்காரை அமைப்பதே பிரிட்டிஷ் சர்க்காரின் நோக்கம்."

இவ்விதம் கிழக்கு ஆசியாப் பிரதேசத்தில் பிரிட்டிஷ் கமிஷனர் ஜெனரலாக இருக்கும் ஸ்ரீ மெல்காம் மெக்டொனல்டு கூறிய வார்த்தைகள் கொட்டை எழுத்துக்களில் பொறிக்கப்பட்டு எல்லோருடைய கவனத்தையும் கவர்வதாக இருக்கின்றன; மலாய் நாட்டின் எதிர்கால க்ஷேமத்தில் நம்பிக்கை ஊட்டுவதாக இருக்கின்றன.

சர்வ தேசப் பொருட் காட்சியில் மலேயா பகுதிக்கு வேண்டிய ஏராளமான சாதனங்களை மலேயாவிலிருந்து சென்னைக்குக் கொண்டுவந்து வெற்றிகரமாக நடத்துவதற்குக் காரண புருஷரான ஸ்ரீ வி.டி. பிச்சை பிள்ளை அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும். மலேயா பகுதிக் காட்சியை மாத்திரம் கலைத்து விடாமல் நிரந்தரமாக வைத்திருக்கவேண்டும் என்று சர்வதேசப் பிரமுகர்கள் மிகவும் வற்புறுத்தினார்கள் என்றால், ஸ்ரீ பிள்ளையின் திறமையைக் குறித்து அதிகம் சொல்வதற்கு என்ன இருக்கிறது!

ஸ்ரீ பிச்சை பிள்ளை மலேயா பெடரேஷன் சர்க்கார் விளம்பர இலாகா ஆசிரியர் பதவி வகிக்கிறார். சென்னைக்கு விஜயம் செய்த வல்லரசுகளின் பிரதிநிதிகள் உட்பட எல்லோருடைய புகழுரைக்கும் பாத்திரரான அவர் கடல் கடந்த தமிழர்களில் ஒருவர் என்பது தமிழ் நாட்டு மக்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கக் கூடிய விஷயம் ஆகும்.

# சிங்கத்தின் கோபம்

சர்க்கஸ் மைதானத்தில் எள் போட்டால் எள் விழ இடமில்லை. மக்களின் கரகோஷங்களுக்கிடையே பாண்டு வாத்திய முழக்கங்களுடன் அன்றைய நிகழ்ச்சி ஆரம்பமாயிற்று.

நாய்கள் தீப்பந்த வளையங்களுக்குள் பாய்ந்தன. பூனை அழகிய உடை அணிந்து நாய் வண்டியில் பிரயாணம் செய்தது.

கடைசியாக ஒரு மயிர்க்கூச்செறியும் காட்சி நடந்தது. ஒரு பெரிய கூண்டில் ஒரு பயங்கரச் சிங்கம் உறுமிக்கொண்டு அங்குமிங்கும் பாய்ந்தது. ஒரு பெண் அந்தக் கூண்டில் தைரியமாக நுழைந்தாள். சிங்கத்தின் வாயினுள் தலையைக் கொடுத்தபடி பல நிமிஷ நேரம் நின்றாள். சிங்கம் அவளைச் சிறிதும் இம்சிக்கவில்லை.

இச்சமயத்தில் படாடோபமாக உடையணிந்த ஒரு யௌவன புருஷன் மேடையில் தோன்றினான். "பார்த்தீர்களா! அந்தப் பெண் மாதிரி இந்தக் கூட்டத்திலிருக்கும் எந்த ஆண்மகனாவது செய்ய முடியுமா!" என்றான். திடீரென்று மேடையில் ஒரு சிறுவன் வந்து நின்றான். "என்ன தம்பி! உன்னால் அப்பெண் மாதிரி செய்ய முடியுமா! வீணாக உயிரை இழக்காதே!" என்றான் சர்க்கஸ்காரன்.

சிறுவன் சர்க்கஸ்காரனின் பயமுறுத்தலுக்குச் சிறிதும் பயப்படாமல் அக் கூண்டினுள் நுழைந்தான். சிங்கம் அப்பாலகனை ஒன்றும் செய்யாமலிருக்கவேண்டுமே என்று மக்கள் கடவுளை வேண்டிக் கொண்டனர்.

சிறுவன் சிங்கத்தின் அருகில் சென்று, "அப்பா!" என்று கத்தி அதன் கழுத்தைக் கட்டிக் கொண்டான். என்ன அதிசயம்! திடீரென்று அச்சிங்கம் தன் வேஷத்தைக் கலைத்துக் கொண்டது. சிங்க வேஷத்திலிருந்த முரட்டு மனிதன் கோபத்துடன் அச்சிறுவனின் கன்னத்தில் படீரென்று அறைந்தான். இந்த விபரீதக் காட்சியைக் கண்டு கூடியிருந்த மக்கள் பலத்த ஆரவாரம் செய்தனர். படாடோப உடையணிந்த சர்க்கஸ்காரன் வெட்கத்தினால் தலை குனிந்தான். —கண்மணி



# ரூ. 17/8 தான் ஒரு சிறந்த 'கோடக்' காமிரா!

சொந்தமாக படம்பிடிக்கும் பெருமிதம் அடையுங்கள்—சுலபமாகவும் குறைந்த செலவிலும்! இச்சிறப்பான 'கோடக்' மாடல்களைக் கொண்டு, நீங்கள் பொத்தானை அழுத்தி, குமிழை திருப்பவேண்டியதுதான். உங்கள் கோடக் வியாபாரியே உங்களுக்கு பிலிமைக் கூட மாட்டிக்கொடுப்பார். எனினும் இவ்வெல்லா காமிராக்களும், நீங்கள் நண்பர்களிடம் பெருமையுடன் காட்டக்கூடிய சிறப்பு வாய்ந்த படங்கள் எடுப்பவைகளாகும்.






நல்ல படங்கள் எடுப்பது மிக சுலபமே!

**'பிரௌனி' 127 காமிரா**
ஐந்தடி அருகிலுள்ள உருவத்தையும் சரி, வானளாவிய தூரத்திலிருக்கும் காட்சியையும் சரி; தெளிவாக, தத்ரூபமாகப் படம்பிடிக்கவல்லது—எதையும் மாற்றிச் சரிப்படுத்தவேண்டிய அவசியமில்லை. 'கோடக்' 127 பிலிம் ஒவ்வொரு சுருளிலும் 1⅝" × 2½" அளவில் 8 ஸ்னாப்புகள் எடுக்கலாம். விலை ரூ. 17/8-

**பேபி 'பிரௌனி' ஸ்பெஷல் காமிரா**
உள்ளங்கையிலேயே எடுத்துச் செல்லும்படி அவ்வளவு அடக்கமான காமிரா. 'கோடக்' 127 பிலிம் ஒவ்வொரு சுருளிலும் 1⅝" × 2½" அளவில் 8 படங்கள் எடுக்கலாம். விலை ரூ. 18/-

**சிக்ஸ்-20 'பிரௌனி' காமிராக்கள்**

**மாடல் C:** தொந்தரவுதரும் சிறுகருவிகளொன்றுமில்லை, குழப்பமுமில்லை. பத்தடி தூரம் அல்லது அதற்கு அப்பாலுள்ள எந்த உருவத்தையும் படமெடுக்கலாம். 'கோடக்' 620 பிலிம் ஒவ்வொரு சுருளிலும் சாதாரண 2¼" × 3¼" அளவில் 8 ஸ்னாப்புகள். விலை ரூ. 29/-

**மாடல் D:** மாடல் C-யைப்போன்றது—ஆனால் 3½ அடி அருகிலிருந்து போர்ட்ரேட்டுகள் எடுக்க க்ளோஸ்-அப் லென்ஸ் அமையப்பெற்றது. விலை ரூ. 34/-

**மாடல் E:** க்ளோஸ்-அப் லென்ஸ் அமைந்திருப்பதோடு மேகங்களுடன்கூடிய வானக்காட்சிகளை அழகாக படம்பிடிக்க மஞ்சள் பில்டரும் உடையது. விலை ரூ. 40/-

3-BC கான்வாஸ் கேஸ்—C, D, E மாடல்களுக்கு. விலை ரூ. 3/-

3-ML தோல் கேஸ்—C, D, E மாடல்களுக்கு. விலை ரூ. 8/-

இவ்விலைகளில் விற்பனைவரி சேராது

**உங்கள் ஆர்வத்தை அதிகரிக்க சிறந்த ஸ்னாப்புகள்**
குடும்பத்தொகுதியினர், கட்டிடங்கள், நிலப்பரப்புக் காட்சிகள் எல்லாம் தெள்ளத்தெளிவாக பெரிதாக்கத் தகுந்தவகையில் படம் எடுக்கலாம்.

**உபயோகிக்க மிக எளிதானது**
லென்ஸ் தூரங்களோ ஷட்டர் வேகங்களோ சரிசெய்யத்தேவையில்லை. நேராக காமிராவைப் பிடித்து ஷட்டர் பொத்தானை அழுத்தவேண்டியதே.

**வெளிச்சக்குறைவின் தொந்தரவில்லை**
மாடல் E-யுடன் மலிவான ப்ளாஷ் பல்புகளின் உதவியினால் வீட்டினுள்ளும் இரவு வேளையிலும் ஸ்னாப்புகளும், இதர மாடல்களுடன் "ஓப்பன்-ப்ளாஷ்" உபயோகித்து குழந்தைகளின் விளையாட்டுகள், உத்ஸவங்களின் படங்களும் எடுக்கலாம்.

இன்றே உங்கள் கோடக் வியாபாரியைப் பாருங்கள்

கோடக் லிட். (இங்கிலாந்தில் இணைக்கப்பெற்றது)
பம்பாய் - கல்கத்தா - டில்லி - மதராஸ

K. 7406




எல்லா வருஷங்களையும் விட அந்த வருஷம் குற்றால சீஸனின் பரிபூரண இன்பத்தை நான் அனுபவித்தேன். வெய்யிலின் உக்ரமே தோன்றாமல் எப்பொழுது பார்த்தாலும் 'சொரு சொரு' வென்று பெய்து கொண்டிருக்கும் குளுமையான சாரலோ, அன்றி மலையடிவாரத்தின் ரம்மியமான காட்சிகளோ அதற்குக் காரணமில்லை.

பின் என்னதான் காரணம் என்று கேட்கிறீர்களா! சென்னையிலிருந்து என்னுடைய ஆப்த நண்பன் ராஜு குற்றாலத்துக்கு வருகிறதாக எழுதியிருந்தான். பிறகு என்னுடைய சந்தோஷத்திற்குக் கேட்பானேன்!

ராஜு சென்னையில் ஒரு வாரப் பத்திரிகையில் உதவி ஆசிரியராக வேலை பார்த்து வருபவன். இளமை முதலே ஒன்றாகப் படித்தவர்கள் நாங்கள். கல்லூரிப் படிப்பை முடித்த பிறகும் கூட என்னை, "போடா வாடா" என்றுதான் அழைப்பான். இது ஒன்றே போதாதா எங்கள் நட்பின் ஆழத்தை அளக்க!

ராஜுவைக் கண்டதும் என் உத்ஸாகத்திற்கு அளவே இல்லை. சோர்ந்திருந்த என் உள்ளத்தில் சாரல் தெளித்தது போலிருந்தது. அவன் தன்னுடன் ஒரு ஆளையும் துணைக்குக் கூட்டிக் கொண்டு வந்திருந்தான். அவன் வேலை பார்க்கும் பத்திரிகையின் சித்திரக்காரராம் அவர். பெட்டி படுக்கை, காமிரா இவை சகிதம் அவர்கள் வந்திருப்பதிலிருந்து ஏதோ முக்கியமான காரியமாகத் தான் வந்திருக்கிறார்கள் என்று நான் ஊகித்துக் கொண்டேன்.

"எங்கள் பத்திரிகையின் ஐந்தாவது ஆண்டு மலர் அடுத்த மாதம் வெளிவர இருக்கிறது. அந்த மலரின் புகழ் இந்தக் குற்றாலக் காட்சியின் ஒவ்வொரு அசைவிலும் தான் அடங்கி இருக்கிறது" என்றான் ராஜு, தோளில் தொங்கிக் கொண்டிருந்த காமிராவை ஆட்டிக் கொண்டே.

கவிதா ரஸனைக்கும் காட்சி எழிலுக்கும் பெயர் பெற்ற திருக்குற்றாலத்திற்கு ஒரு பத்திரிகையின் சார்பில் அவர்கள் வந்தது பற்றித் திருநெல்வேலி வாசியான எனக்கு ரொம்பப் பெருமையாக இருந்தது. மறுநாள் முதலே நாங்கள் மூவரும் எல்லா இடங்களையும் சுற்றிப் பார்க்கப் புறப்பட்டோம்.

அன்று எங்கள் குற்றால வாழ்க்கையில் மிகவும் முக்கியமான தினம். மலைக்கு மேலேயுள்ள இயற்கைக் காட்சிகளை முடித்துக் கொண்டு கோயிலைச் சுற்றிப் பார்த்துக் கொண்டு வரும்பொழுது "சங்கர்! இங்கே பார்த்தாயடா!" என்று கூவினான் ராஜு. கர்ப்பக் கிரகத்தின் வாயிலில் நின்றபடியே கர்ப்பக்கிரகத்தின் நிலைவாயிற்படி உத்தரத்தைத் தூண்டிக் காண்பித்தான் அவன். அதிலே பெருமாள் திருநாமமும் சங்கு சக்கரமும் பொறிக்கப்பட்டிருந்தது!

"சிவன் கோயிலில் வைஷ்ணவ சின்னம் எப்படி வந்தது?" என்ற கேள்விக் குறியோடு ராஜுவை நோக்கினார் ஓவிய நிபுணர்.

"கண்டு பிடித்து விட்டேன்! ஆதியில் இந்தக் கோயில் பெருமாள் கோயிலாகத்தான் இருந்திருக்க வேண்டும். பின்னர் யாரோ ஒரு சிவநேசச் செல்வர் கைங்கர்யத்தால் குற்றால நாதரும் குழல்வாய் மொழியும் இங்கு குடி வந்திருக்க வேண்டும்" என்றான் ராஜு, பெரிய சரித்திர ஆராய்ச்சிக்காரன் மாதிரி.

"போடா, புத்திசாலி! அரியும் சிவனும் ஒன்று என்பதற்காக யாராவது வேண்டுமென்றே செதுக்கி யிருக்கக் கூடாதா, என்ன!" என்றேன்.

"சும்மா விளையாட்டுக்குச் சொன்னேன்" என்று சிரித்துக் கொண்டே சொல்லிவிட்டு அந்த இடத்தைவிட்டு நகர்ந்தான் ராஜு.

அவனுடைய அந்த விளையாட்டுப் பேச்சு எனக்குச் சஞ்சீவி வைத்திய சாலையின் ஞாபகத்தைக் கொண்டு வந்து விட்டது.

"ராஜு, இங்கே பெருமாளும் சிவனும் ஒன்றாக இருப்பதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது! இங்கே சஞ்சீவி வைத்தியசாலை என்று ஒன்றிருக்கிறது. அங்கே நாட்டு வைத்தியமும், நவீன ஆங்கில வைத்தியமும் பார்க்கிறார்களாம். ரொம்ப ஆச்சர்யமாக இருக்கிறதல்லவா! நான் நேற்றுத்தான் கேள்விப்பட்டேன். நாளைக்கு நாமும் பார்த்துவிட்டு வருவோமா!" என்றேன்.

"சரிதான்! அங்கே நாட்டு மருந்துக்கும் இங்கிலீஷ் மருந்துக்கும் காதல் ஏற்பட்டுக் கடைசியில் கல்யாணம் செய்து கொண்டன போலும்!" என்றான் ராஜு சிரித்துக் கொண்டே.

கேலிக்காக அவன் கூறிய வார்த்தைகள் எவ்வளவு தூரம் உண்மை என்பது நாங்கள் வைத்தியசாலைக்குப் போய்விட்டுத் திரும்பும் போதுதான் தெரிய வந்தது.

மறுநாள் அதி காலையில் காப்பி சாப்பாட்டை முடித்துக் கொண்டு நாங்கள் மூவரும் சஞ்சீவி வைத்தியசாலையை நோக்கிப் புறப்பட்டோம்.

வாசலில் பக்கத்திற்கொன்றாக இரண்டு பெரிய பன்னீர்ப்பூ மரங்கள். முதல் நாள் இரவு மழை பெய்து வெறித்திருந்த கரிசல் மண் தரையில் வெண்மையான பன்னீர்ப் பூக்கள் உதிர்ந்து கிடந்தன. அவை கரிய வானையும், விண்மீன் கூட்டத்தையும் நினைவுக்குக் கொண்டு வந்தன.

உள்ளே நுழைந்தால், பெரிய தோப்பு. பலாவும் புன்னை மரங்களும் அடர்ந்து நின்று கொண்டிருந்தன. வானப் பந்தலுக்குக் கால் கட்டமாதிரி இடையிடையே கமுகு மரங்கள். தோப்பின் நடு மையத்தில் வெள்ளை வெளேரென்று இரண்டு மூன்று கட்டிடங்களும் அதைச் சுற்றித் தென்னங் கீற்றுக் கொட்டகைகளும் கண்ணில் பட்டன.

"வாருங்கள்!" என்று சிரித்த முகத்துடன் எங்களை வரவேற்றார் டாக்டர். நவ நாகரிகமாக ஆங்கில மோஸ்தரில் உடை யணிந்திருக்கும் அவரைப் பார்த்ததும் எங்களுக்கு வியப்பாகவே இருந்தது. நான் ராஜுவையும் அவர் நண்பரையும் டாக்டருக்கு அறிமுகம் செய்து வைத்தேன்.

பின்னர் வைத்தியசாலை முழுவதையும் அவர் விளக்கத்துடன் சுற்றிக் காண்பித்தார். நாட்டு வைத்திய முறையில் சிகிச்சை நடக்கும் இடம் ஒருபுறம், மற்றொரு புறம் இங்கிலீஷ் மருந்துகள் கொண்ட வைத்தியசாலை. இந்த இரண்டு முறைகளுக்கும் வேண்டிய சாதனங்கள் அத்தனையும் அந்தத் தோப்புக்குள் நிறைந்திருப்பதைப் பார்த்த பொழுது ராஜு திணறிப் போய் விட்டான்.

கடைசியில் டாக்டர் தம்முடைய தங்கும் அறைக்கு எங்களை அழைத்துக் கொண்டு போனார். எல்லோரும் ஆசனத்தில் அமர்ந்தோம்.

"ஸார், நீங்கள் எப்படி இந்த இரண்டு வைத்திய முறைகளிலும் தேர்ச்சி பெற்றீர்கள்! இந்த மாதிரி அமைந்திருப்பது மிகவும் அபூர்வமாயிற்றே!" என்ற கேள்வியைத் தூக்கிப் போட்டான் ராஜு.

"நான் ஒரு எம். பி. பி. எஸ். மேனாட்டு வைத்தியம்தான் படித்திருக்கிறேன். ஆனால் என்னுடைய மனைவிக்கு நாட்டு வைத்தியத்தில் மிகுந்த தேர்ச்சியும் அனுபவமும் உண்டு" என்று சொல்லிக் கொண்டே வந்த டாக்டர் 'டிராயரை'த் திறந்து ஏதோ ஒரு கையெழுத்துப் பிரதியை எடுத்து, "இந்தக் கதை உங்கள் மலருக்குப் பயன்படுமா பாருங்கள்!" என்று நீட்டினார்.

பிரித்துப் பார்த்தால் அது "காதல் மருந்து" என்ற தலைப்பில் ஒரு சிறு கதையாக இருந்தது.

"ஏது உங்களிடம் இந்த வியாதிக்கு வேறு மருந்து இருக்கிறதா!" என்று சிரித்துக்கொண்டே கேட்டான் ராஜு. எல்லோரும் அந்தச் சிரிப்பில் பங்கெடுத்துக் கொண்டோம்.

டாக்டர் எழுதியிருந்த கதை இதுதான்:

## 1

குற்றாலத்தை யடுத்த காசிமேஜர்புரம் ஒரு அழகிய கிராமம். அங்குள்ள கவர்ன்மெண்ட் ஆஸ்பத்திரிக்குச் சமீபத்தில்தான் டாக்டராக வந்திருந்தான் நாகராஜன்.

முதலில் 'இந்தப் பட்டிக்காடுதானா நமக்குக் கிடைக்க வேண்டும்!' என்று உள்ளுக்குள் சலித்துக் கொண்டவன், வந்த இரண்டு மூன்று மாதங்களுக்குள் 'பிறவி எடுத்ததின் பயனை இப்பொழுது தான் அனுபவிக்கிறோம்' என்று எண்ணி உள்ளம் பூரித்தான். அவ்வளவு தூரம் அவன் மனத்தைக் கவர்ந்து விட்டிருந்தது அந்தக் கிராமம்.

ஆனால் கொஞ்ச நாள் கழித்து அவனைத் தூக்கி வாரிப் போடும் படியான செய்தி ஒன்று அவனுக்கு எட்டியது. நவீன வைத்தியத் துறையில் மிகவும் கைதேர்ந்த அவனுடைய புகழையும் மங்கச் செய்த சஞ்சீவி வைத்தியரின் திறமையைப் பற்றி அவன் அப்பொழுது கேள்விப்பட்டான்.

அந்த வருஷம் வழக்கத்தைவிட அதிகமான மக்கள் குற்றாலம் சீஸனுக்குப் பெருந் தொலைவிலிருந்தெல்லாம் வந்தனர். அப்படித் திரள் திரளாக வந்தவர்களில் க்ஷேத்திராடனத்திற்கு வந்தவர்களைக் காட்டிலும் சஞ்சீவி வைத்திய சாலைக்கு வந்தவர்கள்தான் அதிகம். தீராத பல வியாதிகளை யெல்லாம் பச்சிலை மூலிகைகளின் அரிய சக்தியினால் குணப்படுத்தும் சஞ்சீவி வைத்தியரின்



புகழ்தான் அவர்களைக் குற்றாலத்திற்கு இழுத்து வந்தது. எனவே சஞ்சீவி வைத்தியரின் புகழ் நாகராஜனின் நெஞ்சிலே நெருஞ்சி முள்ளாக உறுத்தியதில் ஆச்சரியமில்லை யல்லவா!

"பிரபல விஞ்ஞானிகள் அரிதில் கண்டு பிடித்த மேனாட்டு வைத்திய முறை யெங்கே, இந்தப் பச்சிலை வைத்திய மெங்கே! இந்த இருபதாவது நூற்றாண்டில் கூட ஜனங்களுக்கு இந்த 'அபூர்வ மூலிகை'ப் பைத்தியம் போகவில்லையே!" என்று மனத்துள் சிரித்துக் கொண்டான் நாகராஜன்.

கம்பௌண்டர் சுவாமிநாதன் அதற்கு விளக்கம் கொடுத்தான்: "ஸார், இந்த ஊரிலே இங்கிலீஷ் வைத்தியத்திற்கு அவ்வளவு 'மவுஸ்' கிடையாது. அந்தப் பிள்ளையார் கோயில் தோப்பு சஞ்சீவி வைத்தியருடைய மகத்துவம் இந்தப் பிராந்தியங்களில் மட்டுமல்ல, வெளி யிடங்களிலும் இப் பொழுது நன்றாகப் பரவி யிருக்கிறது. அவர் மண்ணைக் கிள்ளிக் கொடுத்தாலும் எப்பேர்ப் பட்ட வியாதிகளும் தீர்ந்து விடுகின்றன. அதற்குக் காரணம் அவர் கொடுக்கும் மூலிகை மருந்தா அல்லது அவருடைய கை ராசியா என்று சொல்வது மிகவும் கடினம்."

"என்ன இருந்தாலும் ஆங்கில மருந்துக்குள்ள வேகம் காட்டு மருந்துக்கு இல்லை" என்று கூறி விவாதத்திற்கு அத்தோடு முற்றுப்புள்ளி வைக்க விரும்பினான் நாகராஜன்.

"இல்லை சார், போன வாரம் நீங்கள் கைவிட்ட அந்த டி. பி. கேஸை குணப்படுத்தி விடுவதாகச் சொல்லி யிருக்கிறாராம் அந்த சஞ்சீவிக் கிழவர்" என்று புள்ளி விவரத்தோடு தொடர்ந்தான் கம்பௌண்டர்.

அவ்வளவுதான்; நாகராஜனுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்து விட்டது.

"பார்க்கலாமே! அந்தக் கேஸைக் குணப் படுத்தி விட்டால் நான் என் வைத்தியத் தொழிலையே விட்டு விடுகிறேன்" என்றான் நாகராஜன் ரோசத்தோடு.

இதற்கு மேலும் பேச்சுக் கொடுப்பதில் பயனில்லை என்று தெரிந்து கொண்ட கம்பௌண்டர் 'பேஷண்'டைத் தூக்கிக் கொண்டு அந்த இடத்தை விட்டு நகர்ந்து சென்றான்.

## 2

சாயங்காலத்து மஞ்சள் வெய்யில் ஆஸ்பத்திரிக் கட்டிடத்திற்குத் தங்க முலாம் பூசிக் கொண்டிருந்தது. வார்டுகளைப் பார்வையிட்டு விட்டு வராந்தாவில் உலாவிக் கொண்டிருந்த நாகராஜன் அப்படியே ஒரு கணம் அசைவற்று நின்று விட்டான்

மாந்தோப்பு ஓடையில் தலை முழுகிவிட்டு, ஈரப் புடவை சலசலக்கத் தண்ணீர்க் குடமேந்தி வந்து கொண்டிருந்தாள் ஒரு கிராம மோகினி.

சாலையோடு வந்து கொண்டிருந்தவள் சட்டென்று ஆஸ்பத்திரிக் காம்பௌண்டுக்குள்ளே நுழைந்தாள். நுழைந்தவள் தெற்குச் சுவரோரம் நின்ற மஞ்சணத்தி மரத்தடியில் குடத்தை இறக்கி விட்டு, மெதுவாக மரத்தின் கிளையை ஒரு கையால் பிடித்துக் கொண்டு சுவரில் ஏறினாள். பின்னர் சுவரில் லாகவமாக இருந்து கொண்டு பக்கத்தில் நின்ற கருஞ்செண்பகத்தி மரத்தில் பூத்திருந்த பூக்களை ஒவ்வொன்றாகக் கிள்ளி எடுத்து முந்தானையில் போட ஆரம்பித்தாள்.

அப்பொழுது அங்கு படர்ந்த மஞ்சள் வெய்யிலில், நவரத்ன மலர்கள் பூத்துக் குலுங்கும் ஒரு சொர்ண மயமான விருக்ஷத்தில் ஒரு அப்ஸரமங்கை மலர் கொய்வது போன்றிருந்தது அந்தக் காட்சி.



இதுவரை அசையாச் சித்திரம்போல் அந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்த நாகராஜன், தான் ஒரு பெரிய டாக்டர் என்பதையும் எண்ணாது ஏதோ ஒருவிதச் சக்தி உந்தித் தள்ளவே, அந்த மரத்தடியில் வந்து நின்று கொண்டு, "யாரம்மா இது, மரத்து மேலே!" என்று கேட்டான்.

அவள் இதை எதிர் பார்க்கவே யில்லை. தன்னை யாரோ அதட்டும் குரல் கேட்டுத் திரும்பிய அவள் நாகரிகத்தின் சின்னமாக விளங்கும் ஒரு வாலிபன் கீழே நின்று கொண்டிருப்பதைப் பார்த்தாள். அவன் கழுத்தைச் சுற்றி நெளிந்து கொண்டிருந்த 'ஸ்டெதஸ்கோப்' அவனை யார் என்று அவளுக்கு அடையாளம் காட்டிக் கொடுத்து விட்டது.

பதற்றத்துடன் ஒரு கையால் முந்தானையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு கீழே குதித்தாள் அந்த மங்கை.

"மன்னித்து விடுங்கள், டாக்டர். நான் பழைய டாக்டர் என்று எண்ணிக் கேட்காமல் பறித்து விட்டேன்" என்றாள் திக்கித் திணறியபடி.



*சாவ்கார்:— (ஊரிலிருந்து வந்ததும் பிள்ளையைப் பார்த்து):—நான் ஊருக்குப் போன அன்று உனக்கு ஒரு பொம்மை வீடு வாங்கித் தந்தேனே! அதை வைத்துக்கொண்டு விளையாடினுயோ?*

*பையன்:—விளையாடினேன், அப்பா!*

*சாவ்கார்:—அந்த வீட்டை இப்பொழுது எங்கே காணும்?*

*பையன்:—இருக்கிறது, அப்பா! அந்த வீட்டைப் பக்கத்து வீட்டு ராமுவுக்கு வாடகைக்கு விட்டிருக்கிறேன்!*

"ஏனம்மா, பெண் பிள்ளை இப்படியா சுவரின் மேல் ஏறுவது! கீழே விழுந்து காலைக் கையை முறித்துக் கொண்டால் என்ன செய்வது! என்னைக் கேட்டால் பறித்துக் கொடுக்க மாட்டேனு என்ன!"

டாக்டரின் இந்த அளவுக்கு, அந்தஸ்துக்கு மீறிய அனுதாபம் அவளுக்குப் புரியாத புதிராக இருந்தது. மெதுவாகத் தலையை நிமிர்த்தி டாக்டரை ஒருதரம் ஏறிட்டுப் பார்த்தாள்.

வாசனையற்ற கனகாம்பரத்திற்கும் வசந்த கால ரோஜா மலருக்கும் உள்ள சிருஷ்டி எழிலின் தாரதம்மியத்தை இப்பொழுது தான் நாகராஜனுல் அறிந்து கொள்ள முடிந்தது.

"அது சரி, செத்தகத்திப்பூ உனக்கு எதற்கு!"

"மருந்துக்குத்தான்" என்று ரத்தினச் சுருக்கமாகப் பதிலளித்துவிட்டுக் குடத்தை ஒரு வீசு வீசி இடுப்பில் வைத்துக் கொண்டு அங்கிருந்து போக எத்தனித்தாள்.

அவன் விடவில்லை.

"உனக்கு என்ன வியாதி! என்னுடைய ஆஸ்பத்திரியிலிருந்து நல்ல மருந்தாக வேண்டுமானுல் வாங்கிக் கொள்ளேன்!" என்றான்.

கலீரென்று சிரித்தாள் அவள்.

அந்த அழகிய மங்கையின் சிரிப்பொலி நாகராஜன் உள்ளத்தையே திருடியது!

"ஏன் டாக்டர்! என்னைப் பார்த்தால் சீக்குக்காரி மாதிரியாகவா இருக்கிறது! சீக்கு உங்கள் பட்டணத்து உடம்பைத்தான் தேடிப் போகும். எங்கப்பா தான் சஞ்சீவி வைத்தியர். கொஞ்சம் மருந்துக்குச் செத்தகத்திப் பூ வேணுமென்று கேட்டார்; அதுதான் பறிக்க வந்தேன்" என்று படபடவென்று பொரிந்து தள்ளி விட்டு நடையைக் கட்டினுள் அவள்.

அவள் வெறும் பூவை மட்டும் பறித்துக் கொண்டு போய்விட்டதாகத் தோன்றவில்லை; அதோடு தன் மனத்தையே பறித்து மடியில் வைத்துக் கட்டிக் கொண்டு போய் விட்டதாக நாகராஜனுக்குத் தோன்றியது.

"வேம்பு! செத்தகத்திப்பூ கொண்டு வந்தாயா!" என்று கேட்டார் சஞ்சீவிக் கிழவர், குழியம்மியில் ஏதோ அரைத்துக் கொண்டே.

"இதோ!" என்று மடியிலிருந்த பூக்களையெல்லாம் கூடையில் உதறியவள், "அப்பா! நம் ஊர்க் கவர்ன்மெண்ட் ஆஸ்பத்திரிக்கு ஒரு புது டாக்டர் வந்திருக்கிறுர், தெரியுமா! மிகவும் சொற்ப வயது. நல்ல கெட்டிக்காரரும் கூடவாம். எல்லோரும் அவர் கொடுக்கும் மருந்தைப் புகழ்கிறுர்கள்" என்றாள்.

கிழவருக்கு மகளின் இந்தப் பேச்சு கொஞ்சமும் பிடிக்கவில்லை.

"போம்மா, இங்கிலீஷ் மருந்தெல்லாம் அந்தந்த நிமிஷத்துக்குத்தான். மேலும் அது பணம் பிடுங்குகிற வைத்தியம். நம்முடைய நாட்டுக்கு ஏற்றது நாட்டு வைத்தியம்தான். அதற்கு மிஞ்சினது வேறு ஒன்றுமே இல்லை."

அவர் தன் இறுமையிலே கொண்டிருந்த நம்பிக்கை அவருடைய வார்த்தைகளிலே தொனித்தது.

"இல்லையப்பா, இப்பொழுது வந்திருக்கிறவரைப் பற்றி ஏன் நம் கிராமத்தார் இவ்வளவு புகழ்கிறுர்கள்!"

"இந்தச் சஞ்சீவி வைத்தியர் மருந்துக்கு மேலாக ஒன்று இருக்கிறதென்று சொல்கிறுயா, அம்மா! அப்படியானுல் போன வாரம் வந்தானே ஒரு எலும்புருக்கி நோயாளி, அவனை ஏன் கை விட்டு விட்டார் அந்த டாக்டர்!"

"என்னப்பா, இப்படிக் கோபித்துக் கொண்டீர்கள்! நம்முடைய மருந்தை நான் ஒன்றும் பழிக்க வில்லையே!" என்று சொல்லித் தப்பித்துக் கொண்டு அந்த இடத்தை விட்டு மெதுவாக நழுவினுள் வேம்பு.

பாவம்! எந்தச் சக்தி அவளை இவ்வாறு டாக்டரைப் பற்றிப் புகழ்ந்து பேசச் செய்கிறது என்பதை அவர் கண்டாரா, என்ன!

## 3

நாகராஜனின் மன நிலையில் இப்பொழுது ஒரு புதிய மாறுதல் ஏற்பட்டிருந்தது. முன்னிலும் அதிகமாக சஞ்சீவி வைத்தியரைப் பற்றி நினைக்கலானுன். முன்பெல்லாம் சஞ்சீவிக் கிழவரின் நினைவு அவனுக்குப் பொறுமையையும் கோபத்தையும் தான் வளர்விட்டுக் கொண்டிருந்தது. ஆனுல் வேம்புவைச் சந்தித்த பிறகோ அந்த நினைவு அவனுடைய மன நோயைத் தீர்க்கும் சஞ்சீவியாக இருந்தது.

"வேம்பு! ...... வேம்பு! — எத்தனை அழகான பெயர்!" என்று வாய்க்குள் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டான். அவளுடைய பெயரை நாவினுல் உச்சரிக்கும்பொழுது அவன் உள்ளமும் உயிரும் சேர்ந்து இனித்தன! வேம்பு இல்லாவிட்டால் அவன் வாழ்க்கையே கசந்து விடும் என்ற நிலைமைக்கு வந்துவிட்டான் அவன்!

மாலை ஆறு மணி இருக்கும். தன் 'டியூடி' முடிந்து வீட்டிற்குப் புறப்பட்டான் நாகராஜன். வெளியே வந்ததும் அவன் கண்ட காட்சி அவனை ஒரு உலுக்கு உலுக்கி விட்டது.

அன்று தண்ணீர்க் குடமேந்தி குறுகுறுத்த கண்களுடன் ஒய்யாரமாக நடந்து வந்த வேம்பு,

இன்று கண்ணீரும் கம்பலையுமாக அவன் முன் வந்து நிற்பதென்றால்!

காரணம் தெரியாமல் தவியாகத் தவித்தது நாகராஜனின் உள்ளம்.

"டாக்டர்! உடனே வாருங்கள், அப்பா பேச்சு மூச்சில்லாமல் கிடக்கிறார். நீங்கள் வரா விட்டால் அப்பா பிழைக்கவே மாட்டார்" என்று விம்மலுடன் படபடத்தாள் வேம்பு.

கணப் பொழுதில், மருந்து ஸ்டெதஸ்கோப் இவைகளை யெல்லாம் எடுத்துக்கொண்டு பிள்ளையார் கோயில் தோப்பை நோக்கி அவளுடன் விரைந்தான் நாகராஜன்.

குற்றால மலைக்கு மேலே மூலிகை தேடச் சென்ற சஞ்சீவிக் கிழவர் கால் தவறிப் பெரிய பாறையிலிருந்து கீழே உருண்டு விட்டார். தலையில் பலத்த அடி ஏற்பட்டு இரத்தம் அதிகமாக வெளியேறி விட்ட படியால் மூர்ச்சை யடைந்து விட்டார்.

இந்த விஷயத்தைப் போகும்பொழுது வேம்புவிடமிருந்து அறிந்துகொண்டான் நாகராஜன். "ஆங்கில வைத்தியத்தின் பெருமையைத் தந்தையும் மகளும் அறிந்து கொள்வதற்கு ஒரு நல்ல சந்தர்ப்பம்" என்று உள்ளத்தில் எண்ணி இறுமாந்தான் அவன்.

கிழவரைக் கட்டிலில் கிடத்தி யிருந்தார்கள். கட்டிலைச் சுற்றி அவரிடம் வைத்தியசாலையிலேயே தங்கிச் சிகிச்சை பெற்றுக் கொண்டிருந்த அரை குறை நோயாளிகள், என்னவோ ஏதோ என்று மிகுந்த கவலையுடன் நின்றுகொண் டிருந்தனர்.

நாகராஜன் அவரை நன்கு பரிசோதனை செய்தான். அவன் முகத்தையே மிகுந்த பதற்றத்துடன் கவனித்துக் கொண்டிருந்த வேம்புவுக்கு அவன் முகத்தில் மின்னிய குறிப்பு மிகுந்த பீதியை உண்டு பண்ணியது.

"என்ன டாக்டர்!" என்றாள் கலவரத்தோடு.

"உயிருக்கு அபாய மொன்றுமில்லை. ஆனால் அடிபட்டு இரத்த மெல்லாம் வெளியேறி விட்ட படியால் பதிலுக்கு உன்னுடைய இரத்தத்தைக் கொஞ்சம் அவர் உடலிலே செலுத்த வேண்டும். ஆகவே ஆஸ்பத்திரிக்குத் தாமதியாமல் கொண்டு செல்ல வேண்டும்" என்று கூறிவிட்டு அதற்கான ஏற்பாடுகளைச் செய்வதில் முனைந்தான்.

வேம்புவின் உள்ளத்தில் நன்றியுணர்ச்சி ததும்பி வழிந்து கொண்டிருந்தது.

இரண்டு வாரங்களுக்குப் பிறகு ஒரு நாள் மாலை நேரத்தில் மகிழ்ச்சியுடன் சஞ்சீவி வைத்திய சாலையை நாடிப் புறப்பட்டான் நாகராஜன்.

மிகுந்த மரியாதையோடு அவனை வரவேற்றார் கிழவர். பரந்த புன்னை மர நிழலில் கயிற்றுக் கட்டிலில் உட்கார்ந்து இரண்டு வைத்தியர்களும் மனம் விட்டு அன்புடன் பேசிக் கொண்டிருந்தனர். அவர்கள் பேசிக் கொண்டிருப்பதை வீட்டுக்குள்ளிருந்து ஒன்றுவிடாமல் கவனித்துக் கொண்டிருந்தாள் வேம்பு.

"தம்பி, என்ன இருந்தாலும் இங்கிலீஷ் மருந்தென்றால் அதன் மாதிரி வேறுதான்! அதைப் பற்றி இவ்வளவு நாளும் தவறான அபிப்பிராயம் கொண்டிருந்தேன்" என்றார் சஞ்சீவிக் கிழவர்.

"என்ன அப்படிச் சொல்லி விட்டீர்கள்! நாட்டு மருந்தில் உள்ள சக்தி வேறு எதில் இருக்கிறது! நான் கைவிட்ட அந்த டி. பி. கேஸை உங்கள் பச்சிலை மருந்து குணப்படுத்த வில்லையா! பார்க்கப் போனால் ஆங்கில வைத்தியத்தின் அபூர்வக் கண்டு பிடிப்புகளுக்கு எல்லாம் ஆதிகாரணம் மூலிகைகள் தான்" என்றான் நாகராஜன்.

"அப்படியா!" என்று ஆச்சரியத்தோடு கேட்டார் கிழவர்.

"அதனால்தான் சொல்கிறேன், நம் நாட்டின் இந்தப் புராதன வைத்திய முறையை முன்னேற்றத்துக்குக் கொண்டு வர வேண்டும் என்று. அதற்காக உங்களைப் போன்றவர்கள் இந்தக் கலை மடிந்துவிடா வண்ணம் காப்பாற்ற வேண்டும்" என்று கூறினான் நாகராஜன்.

கிழவர் பதில் பேசவில்லை. அதற்குப் பதிலாக ஒரு நீண்ட பெருமூச்சு விட்டார்.

"தம்பி! நீங்கள் சொல்வது சரிதான். ஆனால் இந்தச் சஞ்சீவி வைத்தியசாலை என் காலத்தோடு முடிந்துவிடப் போகிறதே என்பதை நினைக்கும் பொழுது எனக்கு மிகவும் வருத்தமாக இருக்கிறது. இந்த வைத்தியத் துறையில் எனக்கு எவ்வளவு திறமை இருக்கிறதோ அவ்வளவையும் என் மகளுக்கு மட்டுமே கற்றுக் கொடுத்திருக்கிறேன். ஆனால் சின்னஞ் சிறிசான, அதுவும் பெண்பிள்ளையான அவள் என் அபிலாஷையை எப்படிப் பூர்த்தி செய்துவிட முடியும்!"

கிழவரின் குரலிலே அளவுக்கு மீறிய சோகம் வெளிப்பட்டது.

இந்தச் சமயத்தை ஆவலுடன் இதுவரை எதிர்பார்த்துக் கொண்டிருந்த நாகராஜன் இப்பொழுது அவரைப் பார்த்துத் தெளிவான குரலில், "நீங்கள் கவலைப் படாதீர்கள். உங்களுடைய விருப்பம் போல் இந்த வைத்தியசாலை என்றென்றைக்கும் சிரஞ்சீவியாக நின்று நிலவ உங்களிடமே ஒரு மருந்து இருக்கிறது. அதை எனக்குக் கொடுத்தீர்களானால் அந்தப் பொறுப்பை நானே ஏற்றுக் கொள்கிறேன்" என்று சொன்னான்.

"அப்படியா! என்னிடம் கூட உங்களுக்கு வேண்டிய மருந்து இருக்கிறதா!" என்று ஆச்சர

யத்தோடு கேட்ட கிழவருக்கு "ஆமாம், என் காதல் நோய்க்குத் தங்களிடம்தான் மருந்து இருக்கிறது!" என்று துணிச்சலுடன் கூறினான் நாகராஜன்.

"என்ன! என் வேம்பு அவ்வளவு பாக்கியம் செய்தவளா!" என்று ஆனந்தமும் வியப்பும் மேலிடக் கூவினார் கிழவர். அவர் குரலிலே இப்பொழுது ஒரு புதிய தெம்பு பிறந்திருந்தது.

"அதற்கு நானல்லவா தவம் செய்திருக்க வேண்டும்!" என்று கூறிக் கொண்டே நாகராஜன், கதவுக்குப் பின்னால் புன்முறுவலுடன் தலையைக் கவிழ்ந்து கொண்டிருக்கும் வேம்புவை நோக்கினான்.

* * *

கதையைப் படித்து முடித்து விட்டுச் சொல்லி முடியாத ஆச்சரியத்தோடு நாங்கள் டாக்டரைப் பார்த்தோம். அவர் எங்களைப் பார்த்துக் குறும்பாகப் புன்முறுவல் செய்தார்.

மூன்று தட்டில் டிபனும் காப்பியும் கொண்டு வந்து வைத்தாள் ஒரு பெண்மணி.

"வேம்பு! நம்முடைய கதையை இவர்களுடைய பத்திரிகைக்குக் கொடுத்து விட்டேன். உனக்குத் தடையொன்று மில்லையே!" என்றார் டாக்டர். அந்த அம்மாள் சிரித்துக் கொண்டே தன் கடமைகளைக் கவனிக்கப் புறப்பட்டுப் போய்விட்டாள்.

"சரி, உங்களைச் சந்தித்ததில் ரொம்பவும் மகிழ்ச்சி. நாங்கள் வருகிறோம்" என்று கதையைப் பெற்றுக் கொண்டு புறப்பட்டோம்.

"காதல் மருந்து எப்படி இருக்கிறதென்று சொல்லவில்லையே!" என்று அபிப்பிராயம் கேட்டார் டாக்டர்.

"கசக்கவில்லை; இனிக்கத்தான் செய்கிறது" என்று சிரித்துக்கொண்டே பதிலளித்தான் ராஜு.

# வட்ட மேஜை

## முதல் பணமுடிப்பு

அண்மையில் வீசிய புயல் விளைத்த கொடுமைகளை நேரில் கண்டு ஆவன செய்ய, நம் முதன் மந்திரி ராஜாஜி அவர்கள் 15-11-52 அன்று திருச்சிக்கு விஜயம் செய்தார்கள்.

ஸ்ரீ ரங்கம் நகர வாலிபர் காங்கிரஸ் புயல் கஷ்ட நிவாரண நிதி திரட்டி வருகின்றது. சாமான்ய மக்களிடத்திலிருந்து பெற்ற நன்கொடையிலிருந்து நூற்றுஒர் ரூபாய் கொண்ட பண முடிப்பை ஸ்ரீ ராஜாஜி அவர்களிடத்தில் பேரன்போடு கொடுத்துப் பெருமகிழ்ச்சி யடைந்தோம்.

ஸ்ரீ ராஜாஜி அவர்களும் வாலிபர் காங்கிரஸின் சேவா ஆர்வத்தைப் பெரிதும் பாராட்டி மேன் மேலும் பொது நலப் பணிபுரிய ஆசி கூறினார்கள்.

திருச்சி மாவட்டத்திலிருந்து இந்த நிதிக்காகக் கொடுபட்ட முதல் பண முடிப்பு இதுதான் என்ற பெருமையை இந்நகர வாலிபர் காங்கிரஸ்பெற்றது.

ஸ்ரீரங்கம் வி. அனந்தஜி ராவ்
15—12—52 காரியதரிசி.

●

## விதண்டாவாதக் கிளர்ச்சி

டிசம்பர் 16வ. எங்கள் சங்கத்தின் கூட்டத்தில் ஸ்ரீ பொட்டி ஸ்ரீராமுலுவின் மரணத்துக்காக வருத்தப் பட்டும், ஆந்திர ஜில்லாக்களில் நடைபெறும் காலித்தனங்களைக் கண்டித்தும் தீர்மானம் நிறைவேற்றினோம்.

ஆந்திர மாகாணம் ஏற்படுத்துவதற்காகச் சில ஆந்திரத் தலைவர்கள் கையாளும் விதண்டாவாதங்களையும், சில பகுதியினர் செய்யும் நாச வேலைகளையும் கேள்வியுறும்போது எங்களைப் போன்ற வாலிபர்கள் மன வருத்தமும், மனக் கசப்பும் அடைகின்றோம். இந்தத் தலைவர்களும், ஆர்ப்பாட்டக்காரர்களும் செய்வது ஆந்திர சேவையா! அல்லது ஆந்திரக் கோலமா!

ஸ்ரீ பிரகாசம் அவர்கள், ஸ்ரீ பொட்டி ஸ்ரீராமலு சமச் சடங்கின் போது நிகழ்த்திய பிரசங்கத்தின் போது "ஆந்திர தேசத்தில் ஏதாவது கொடூரமான செய்கைகள் நடந்திருந்தால் அதற்குப் பொறுப்பு தற்போதைய அரசாங்கம்தான்" என்று சொன்னார். இவர்கள் தலைமை தாங்கி வழி நடத்தும் விதண்டாவாதக் கிளர்ச்சிக்கு அரசாங்கம் பொறுப்பா! கிடையாது. நூற்றுக்கு நூறு இவர்களேதான் பொறுப்பு.

நரியும் திராக்ஷையும் என்ற கதைக்கு மேலே போகிறார்கள். ஸ்ரீ பிரகாசமும், அவரைச் சார்ந்த சில ஆந்திரர்களும், குள்ளநரிக்குத் திராக்ஷைக் குலை எட்டாமையால், திராக்ஷை புளிக்குமென்று அது வெறுப்புற்றுப் போய்விட்டது. ஆனால் இவர்கள் சென்னை நகரத்தின்மீது கொண்டாடும் பாத்தியதை நியாயமற்றது. தங்களுக்குக் கிட்டாது என்று அறிந்தும் குள்ள நரியை மிஞ்சி ஒரு படி மேலே ஏறி விட்டார்கள். சென்னை நகரத்தை ஆந்திர ராஜ்யத்தில் சேர்க்காவிட்டால், அதைத் தமிழ் மாகாணத்திலும் சேர்க்கக் கூடாது. அதை ஒரு சிறிய தனி ராஜ்யமாக்கி, ஓர் தலைமைக் கமிஷனர் ராஜ்யமாக்க வேண்டும் என்கிறார்கள். இந்த நியாயமற்ற கோரிக்கைக்குச் சென்னை வாசிகள் ஒருகாலும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். **சென்னை நகரமும் அதை அடுத்துள்ள தமிழ் ஜில்லாக்களும் சென்னை ராஜ்யத்தைச் சேர்ந்தவை. இதைச் சென்னை நகர வாசிகள் 100-க்கு 99 பேர் ஆதரிக்கின்றனர்.**

உண்மையான தேசப் பற்றுதலும், பாஷாவாரி மாகாணப் பற்றுதலும் இந்தத் தலைவர்களுக்கும் ஆந்திர சகோதரர்களுக்கும் இருக்குமேயானால் இவர்கள் விதண்டாவாதம் செய்யாமல் ஜவாஹர், வல்லபாய் படேல், பட்டாபி அறிக்கையில் கொண்டுள்ள நிபந்தனைகளின்படி ஆந்திர ராஜ்யம் பெற்று, தமிழ் மாகாண வாசிகளின் நேசபாவத்துடன் பிரிந்து ஆந்திர ராஜ்யம் அமைத்துக் கொள்ள வேண்டும். தமிழ் மாகாணவாசிகளுடன் தோளோடு தோள் நின்று இந்தியாவின் முன்னேற்றத்திற்காக அல்லும் பகலும் பாடுபடுமாறும், நம் மாபெரும் தலைவர் நேருஜியின் கொள்கைகளை ஆதரித்து உழைக்குமாறும் ஆந்திரத் தலைவர்களைக் கேட்டுக் கொள்கிறோம்.

ஆ. து. பூபதி
அ. வி. ராமரத்தினம்

சென்னை கூட்டுக் காரியதரிகள், புத்தியாஜாப்பேட்டை வாலிபர் காங்கிரஸ்.
19—12—52

# மூன்று குடும்பங்கள்

ரா. வி.

அந்தக் கிராமத்தை அவ்வளவு பெரிது என்று சொல்வதற்கில்லை. ஆயினும் அந்த ஊரில் கண்ணியம் மிகுந்த மூன்று குடும்பங்கள் வசித்து வந்தன. அந்த ஊர் வாசிகளில் மற்றவர்கள் எல்லோரும் அநேகமாக அந்தக் குடும்பத்தினருக்குச் சற்றுக் குறைந்த அந்தஸ்தை உடையவர்கள். ஆகவே, அந்த மூன்று குடும்பங்களும் அந்தக் கிராமத்துக்குத் தெய்வமாக விளங்கி வந்தன. இரவு பகல் எந்நேரத்திலும் அவர்கள் தங்கள் உயிரைக்கூடத் தம் கிராமத்து மக்களின் நலனை உத்தேசித்துத் தியாகம் செய்யத் தயாராயிருந்தார்கள் என்பது ஊர் அறிந்த, உலகம் அறிந்த உண்மை.

அந்த மூவரில் கிருஷ்ணசாமி தான் எல்லோரையும் விடப் பெரியவர். அவருக்கு ஏறக்குறைய நாற்பது வயது இருக்கலாம். ஆயினும் உடற்கட்டு மட்டும் கொஞ்சங்கூடத் தளரவில்லை. அழகிய முகம், விசாலமான நெற்றி, அகன்ற நீண்ட அழகிய விழிகள், கரு கருவென்று வளர்ந்திருக்கும் அடர்த்தியான கரிய மீசை. அவருடைய கம்பீரமான உருவத்தைப் பார்த்தவர்கள் தங்களை அறியாமலேயே அவர் கட்டளைக்குத் தலை வணங்குவார்கள். அவர் காந்தியத்தைப் பின்பற்றி வாழ்ந்து வந்தார். பிறர் படும் துயரத்தைக் காணச் சகியார். கிராமத்தில் யாராவது நோயால் துன்பப்படுவதைப் பார்த்தால் அந்த வேதனையைப் பார்க்கச் சகியாமல் பிழியப் பிழிய அழத்தொடங்கி விடுவார். மாட்டையோ ஆட்டையோ யாராவது அடித்துத் துன்புறுத்துவதைப் பார்த்து விட்டால் தம் மண்டையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு மணிக்கணக்காக வருத்தமே உருவாக உட்கார்ந்து விடுவார். இம்மாதிரி சமயங்களில் தம் துயரத்தைப் போக்கிக் கொள்ள அவர் கீதையைச் சரண் அடைந்து விடுவது வழக்கம். ஒவ்வொரு மனிதனும் உண்மையான உள்ளத்துடன் கீதையைப் பாராயணம் செய்தால் எல்லாக் கஷ்டங்களிலிருந்தும் விடுபட முடியும் என்பது அவருடைய அழுத்தமான நம்பிக்கை.

மக்கள் படும் துயரம் அவரை வாட்டி வருத்தி வந்தது. மனித சமூகத்தை உய்விக்கக் கூடிய சக்தி தாம் ஈடுபட்டுப் பாடுபடும் 'காருண்ய சபை'க்குத்தான் உண்டு என்று திடமாக நம்பி உழைத்தார். ஜாதி மத பேதமின்றி அஹிம்சையைக் கடைப் பிடித்துச் சமூகத்தைக் கடைத்தேற்றுவதற்காகவும் உலகத்திலே அமைதியை நிலைநாட்டுவதற்காகவும் அவர் அந்தச் சபையின் வளர்ச்சி அவசிய மென்று கருதிப் பாடுபட்டார். "நாட்டின் நலனை நாடும் மக்கள் ஆட்சி இன்று ராமராஜ்யக் கனவை நினைவாக்க முனைந்திருக்கிறது. இன்று 'எல்லோரும் இந்நாட்டு மன்னர்.' இவர்கள் எங்கு வேண்டுமானாலும் செல்லலாம். என்ன வேண்டுமானாலும் பேசலாம். கேட்பார் யாரும் இல்லை. 'ஏழை யென்றும் அடிமையென்றும் எவனும் இல்லை ஜாதியில்' என்ற நிலை ஏற்பட்டு விட்டது. இவ்வளவு உயர்வுக்கும் காரணமாயிருக்கும் ஆட்சியை எதிர்ப்பவர் யாராயினும் அவர்கள் தேசத் துரோகிகளே என்பது காருண்ய சபையைச் சேர்ந்த கிருஷ்ணசாமியின் அபிப்பிராயம். தாம் மட்டும் பாராளும் மன்றத்துக்கு ஒரு அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப் பட்டால் மக்களின் கஷ்ட நஷ்டங்களைத் துடைத் தெறிந்து விட முடியும் என்பதும் அவருடைய ஆணித்தரமான நம்பிக்கைகளில் ஒன்று.

காளிமுத்து வயதில் எல்லாரையும் விடச் சிறியவர். அவருக்கு வயது முப்பதுதான் இருக்கும். கல்லூரிக் கல்வியை முடித்துக் கொண்டு கல்லூரிக்கு வெளியுலகத்திலே இப்பொழுதுதான் காலடி எடுத்து வைத்திருந்தார். கல்லூரியை விட்டு வெளியேறியதும் முதற் காரியமாக அவர், 'சமதர்மக் கட்சி'யில் சேர்ந்தார். அதற்குப் பல காரணங்கள் கூறப்படுகின்றன. சொத்துச் சுதந்திர விஷயத்தில் அவர் கிருஷ்ணசாமிக்குச் சற்றே தாழ்ந்தவர். ஆகவே, கிருஷ்ணசாமிக்குச் சமமாக வாழ அவருக்கு எல்லா விதத்திலும் உரிமை உண்டல்லவா? பெரிய பண்ணை கிருஷ்ணசாமி மட்டும் தேச சேவை செய்வது, காளி முத்து மட்டும் செய்யாமல் இருப்பது என்றால் அது அவமானம் அளிக்கக்கூடிய விஷயம் அல்லவா! ஆகவேதான் காளிமுத்து காருண்ய சபைக்கு அடுத்தபடி உள்ள சமதர்மக் கட்சியில் சேர்ந்தார். கிருஷ்ணசாமி சேர்ந்திருக்கும் காருண்ய சபையிலேயே சேர்ந்து சேவை செய்வதென்றால், அதில் என்ன பெருமை இருக்கிறது! சமதர்ம தத்துவத்தை இந்திய மயமாக்கி இந்தியாவுக்கு நன்மை பயக்கும் வகையில் அமைதியான உபாயங்கள்மூலம் மக்கள் ஆட்சியை நிறுவக்கூடிய கொள்கைகள் அவருக்குப் பிடித்திருந்தன. சமதர்மத்தின் மூலம்தான் நாடு நலம் பெற முடியும் என்றும் அவர் எண்ணி யிருந்தார். வயதில் சிறியவரானதால் உற்சாகமும் ஊக்கமும் அவரிடம் நிறைந்திருந்தன; எடுத்த எந்தக் காரியத்தையும் செய்து முடிக்க வேண்டும் என்ற எண்ணம் இருந்தது. பொதுக் கூட்டங்களில் மணிக் கணக்காகச் சொற்பொழி வாற்றுவார். மக்களாட்சியை நிறுவப் பாடு படும் சமதர்மக் கட்சிதான் எல்லாப் பிரச்னைகளையும் தீர்க்க வல்லது என்பது அவருடைய பேச்சின் சாராம்சமாயிருக்கும். அவர் தம்முடையவும் தம் கட்சியுடையவும் கொள்கை மக்களின் ராஜ்யத்தை ஸ்தாபிப்பதுதான் என்று சொல்வார். ஒவ்வொரு பொதுக் கூட்டத்திலும் காருண்ய சபையைப் பற்றி விமரிசனம் செய்வதும் பெரிய பண்ணை கிருஷ்ணசாமியின் குப்பை கூளங்களைக் கிளறுவதும் அவருடைய பேச்சின் அங்கமாகவே அமைந்து விட்டன. கிருஷ்ணசாமியிடம் கோச்சு வண்டி யிருந்தது. காளிமுத்து தமக்கென்று புதுக் கார் ஒன்றே வாங்கிவிட்டார்.

கிருஷ்ணசாமி, தம் வீட்டு வராந்தாவில் பூந்தொட்டிகள் வைத்திருந்தார். அதைப் பார்த்த காளிமுத்து தம் வீட்டுத் தோட்டம் முழுவதிலும் குரோட்டன்ஸ் செடிகளும் பூந் தொட்டிகளுமாக வைத்து விட்டார். சொல்வதின் தாத்பர்யம் என்னவென்றால் எந்தக் காரியத்திலும் கிருஷ்ணசாமிக்கு ஒருபடி முன்னாலேயே இருப்பார் காளிமுத்து. தேசத் தொண்டு செய்ய வேண்டும் என்ற ஆசை அவருள்ளத்திலே அளவு கடந்திருந்தது. எனவே, வரப்போகும் பொதுத் தேர்தலில் கிருஷ்ணசாமிக்குப் போட்டியாக நின்று ஒரு

கை பார்த்து விடுவது என்று கங்கணம்கூடக் கட்டிக் கொண்டு விட்டார்.

கந்தசாமியின் குடும்பம் நடுப்பண்ணை என்ற பெயருடன் வழங்கி வந்தது. இவருக்கு நில புலன்கள் இருவரையும் விடக் குறைவு. ஆனால் உண்மையில் மக்களுக்கு நண்பராக விளங்குபவர். வயது கிட்டத்தட்ட முப்பத்தைந்து இருக்கலாம். கட்டைக் குட்டையான சரீரம். ஆனால் நல்ல கட்டுக் கோப்பானது, பயில்வானைப் போல. பொழுது விடிந்ததும் முதல் காரியமாக ஆயிரம் 'தண்டால்'களுக்குமேல் எடுப்பது அவருடைய தினசரி வழக்கம். அவருடைய மனம் பரிசுத்தமானது; ஆனால் மூளை அவ்வளவு கூர்மையானதல்ல. கோபம் வந்து விட ஆரம்பித்துவிட்டால் புழுத்த நாய் குறுக்கே போகாது. கிருஷ்ணசாமியையும் காளிமுத்துவையும் அவருக்குக் கட்டோடு பிடிக்காது. இரண்டு பேரும் மிக மட்டமானவர்கள் என்பது அவருடைய அபிப்பிராயம். ஆகவே, அவருக்கு அவர்கள் சேர்ந்திருக்கும் அந்த இரண்டு கட்சிகளையும் கண்டால் கூடப் பிடிப்பதில்லை. அதனால் சமீபத்தில் இந்த இரண்டு கட்சிகளின் ரகசியங்களையும் அம்பலப்படுத்தும் நோக்கத்துடன் ஆரம்பமான மூன்றாவதொரு கட்சியில் சேர்ந்து விட்டார். கோச்சும் காரும் அவருக்குப் பிடிக்கவில்லை. இருவருக்கும் மேலாக ஏதாவது இருக்க வேண்டும் என்று எண்ணி அவர் ஒரு யானையே வாங்கி வீட்டு வாசலில் கட்டி வைத்திருக்கிறார் என்றால், அவர் புத்தியின் மேதையை யாரும் ஊகித்துக் கொள்ளலாம். "யானை பண்டைய பாரதத்தின் கலாசாரப் பெருமைக்கு அறிகுறி. கோச்சு வண்டியிலும் காரிலும் போகிறவர்கள் தங்கள் நாட்டுக் கலாசாரத்தை மறந்து, தங்கள் நாட்டுக்கே துரோகம் இழைக்கிறார்கள். இவர்கள் இந்தியாவை அந்நிய நாகரிகத்துக்கு அடிமையாக்கி விட்டுத்தான் மறுகாரியம் பார்ப்பார்கள் போலிருக்கிறது. இவர்களால் ஹிந்து கலாசாரத்துக்கு ஆபத்துதான்! ஆகவே, எல்லோரும் ஒன்று சேர வேண்டும்" என்பது இவருடைய பிரசங்கங்களின் பல்லவியாக அமைந்திருக்கும்.

மூன்று பண்ணையாரின் வீடுகளும் பக்கத்தில் பக்கத்தில்தா னிருந்தன. அவர்கள் வீடுகளுக்குப் பின்னால் சின்னச் சின்னக் குடிசைகளும் பாழடைந்த வீடுகளும் அரணாக அமைந்திருந்தன.

சுதந்திரம் கிடைத்தபிறகு தான் மூன்று பண்ணையார்களும் தேச சேவையில் ஈடுபட்டனர். ஆயினும் அந்தக் கிராமத்தில் உள்ளவர்கள் சுகமாக வாழ்வதாகத்தான் ஊர், உலகம் எல்லாம் எண்ணி வந்தது. மிராசுதார்களுக்கும் குடியானவர்களுக்கும் எவ்விதமான தகராறும் கிடையாது. ஆகவே, அவர்கள் அமைதியாகவும் ஆனந்தமாகவும்தான் இருக்க வேண்டும் என்பது வெளியூரார்களின் அபிப்பிராயம்.

அந்த ஊரில் அரசியல் கூட்டங்கள் நடத்த வேண்டிய அவசியமே ஏற்பட்டதில்லை. முதலாளிகள் குடிபடைகளின் நலனைக் கவனிப்பவர்களாகவும் கஷ்ட நஷ்டங்களைப் போக்குபவர்களாகவும் அமைந்து விட்டால் அதற்கெல்லாம் அவசியம் ஏது! கிராமம் என்றால் இப்படி அல்லவா இருக்கவேண்டும்! மூன்று பண்ணையார்களுக்கும் அந்த ஊரில் எவ்விதமான பொதுக் கூட்டங்களும் நடக்கக் கூடாது என்றுதான் எண்ணம். ஏனெனில் நாட்டின் நலனைக் கவனிக்க மூன்று மூன்று தலைவர்கள் அந்தக் கிராமத்தில் இருக்கும்பொழுது இம்மாதிரிப் பொதுக் கூட்டங்கள் போட்டால், அது அவர்களுக்கே அல்லவா அவமானம்!

ஆனால் அந்த மூன்று குடும்பங்களுக்கும் இடையே உள்ள தொடர்பு அவ்வளவு சௌஜன்யம் வாய்ந்ததாக இல்லை. ஒருவர் மற்றொருவரை எப்படி எந்த வகையில் தாழ்த்தலாம் என்றுதான் யோசித்து வந்தார்கள். ஆகவே, ஒருவருடன் ஒருவர் சரியாக முகம் கொடுத்துக் கூடப் பேசுவதில்லை. மூவருமே எம். எல். ஏ. ஆகவோ, எம். பி. ஆகவோதான் கனவு கண்டு கொண்டிருந்தார்கள். வயல் வாய்க்கால்களுக்காக வேண்டி மூவருக்கும் சண்டை வந்து கிரிமினல் வழக்குவரைக்கும்கூடப் போவது உண்டு. வழக்கு என்று ஏற்பட்டு விட்டால் பணம் தண்ணீராகச் செலவழிய வேண்டியதுதானே! இந்த விஷயத்தில் யாரும் யாருக்கும் சளைப்பதில்லை. இம்மாதிரி தங்களுக்குள் அபிப்பிராய பேதம் இருந்த பொழுதிலும் அரசியல் அலுவல்கள் சரிவர நடந்து கொண்டு தானிருந்தன. ஆகவே, அவர்களுக்குக் கிராமத்தில் நல்ல செல்வாக்கு இருந்தது. அதனால் கிராமத்திலும் யாரும் அவர்களுக்கு எதிராக எதுவும் சொல்வதும் இல்லை; நடந்து கொண்டதும் இல்லை.

ஒருநாள் நிகழ்ந்த சம்பவம் ஒருவரை ஒருவர் பிடிக்காமல் இருந்த அந்த மூன்று குடும்பங்களுக்கும் இடையே நல்ல எண்ணத்தையும் ஒற்றுமையையும் உண்டுபண்ணி விட்டது என்றால் அந்தச் சம்பவத்தை அறிந்து கொள்ள யாருக்கும் ஆவல் எழுவது சகஜம்தானே!

அந்தச் சம்பவத்துக்குக் காரண பூதமானவர் கிருஷ்ணசாமிதான். கிருஷ்ணசாமியைப் பற்றி ஒன்று கூற மறந்து விட்டோம். அவருக்குக் கலை, அழகு என்றால் ரொம்பப் பிடிக்கும். பொதுக் கூட்டங்களில் அழகிய பெண்கள் யாராவது இரண்டு மூன்று பேர் வந்து விட்டால் அவருக்கு உற்சாகம் தலைக்கேறி விடும். அன்று அவர் ஆற்றும் சொற்பொழிவு தனி விசேஷம் வாய்ந்ததாகவும் உற்சாகம் ஊட்டக் கூடியதாகவும் அமைந்து விடும். பெண்கள்தான் மனித சமூகத்தின் மலர்ச்சிக்கு முக்கியமான காரணஸ்தர்கள். பெண்கள் இல்லையேல் சமூகம் வளர முடியாது; மலர்ச்சி பெறாது என்பது அவருடைய அசைக்க முடியாத தீர்மானம்.



அவரிடம் மாரிமுத்து என்று ஒரு வேலையாள்

இருந்தான். அவனுக்கு வயது இருபத்தைந்து இருக்கும். முதல் மனைவி இறந்து விடவே, அவன் இரண்டாவது கல்யாணம் செய்து கொண்டிருந்தான். அந்த இரண்டாம் மனைவியின் பெயர் முத்தம்மா. முத்தம்மா பார்ப்பதற்கு மிகவும் அழகாயிருந்தாள். அவள் அங்க அவயவங்கள் எல்லாம் யௌவனம் என்னும் அச்சில் வார்க்கப்பட்டு, அழகேறி மெருகிடப்பட்டிருந்தன. அவளும் தன் கணவனுடன் பண்ணையார் வீட்டில் வேலை பார்க்கத் தொடங்கினாள்.

பெரிய பண்ணையார் கிருஷ்ணசாமி அவளைப் பார்த்த அன்றைக்கே உற்சாகமடைந்து, மாரிமுத்துவைக் கூப்பிட்டுத் தமது காருண்ய சபையில் அங்கத்தினளாகி விடுமாறு சொன்னார். ஏழைகளின் நலனைக் கவனிக்கும் கட்சி காருண்ய சபை ஒன்றுதான் என்று சொல்லி ஒன்றும் தெரியாத அவளைக் காருண்ய சபைக்கு அங்கத்தினராகவும் ஆக்கிவிட்டார். பிறகு இரண்டு மூன்று நாட்கள் கழித்து மாரிமுத்துவைக் கூப்பிட்டு, "முத்தம்மாவையும் நம் கட்சியில் சேர்த்துவிட்டேன். கெட்டிக்காரியாகத் தோன்றுகிறாள். தேசத் தொண்டு செய்யட்டும்!" என்றார்.

"எசமான்! அவளுக்கு என்ன தெரியுங்க! வெறும் பைத்தியக்காரி! அவளுக்கு அதெல்லாம் வேண்டாமுங்கோ!" என்றான் மாரிமுத்து கையைக் கூப்பிக் கொண்டே.

கிருஷ்ணசாமி அன்பொழுக, "என்ன மாரிமுத்து! நீயும் தெரியாதவனைப் போலப் பேசுகிறாயே! இந்த நாட்களில் ஆணும் பெண்ணும் சரிநிகர் சமானமாகத் தேசத்தொண்டு செய்கிறார்கள். அவர் அவர்களுக்குப் பிடித்த கட்சிகளில் மெம்பர் ஆகிறார்கள். நம் வீட்டில் பார், எல்லோருமே நம் காருண்ய சபையில் மெம்பர்கள்தான். நாம் முட்டாள்கள் என்று நினைக்கும் பெண்கள் உண்மையில் முட்டாள்கள் அல்ல. அவர்கள் தேசத்தின் தாய்மார்கள். அவர்களால்தான் நாடு நலம் பெறவேண்டும். அவர்கள் காருண்ய சபையில் சேர்ந்து தேசத் தொண்டு செய்யா விட்டால் நம் நிலை ஒரு நாளும் சீர் இருக்காது!" என்றார்.

"எனக்கு என்ன தெரியும், எசமான்! நீங்கள்தான் எனக்குத் தாயும்தகப்பனும்போல. நீங்கள் சொல்வதைக் கேட்கிறேன்!" என்றான் மாரிமுத்து. அப்புறம் கேட்பானேன்! கிருஷ்ணசாமியின் விருப்பப்படியே முத்தம்மா காருண்ய சபையின் அங்கத்தினராகிவிட்டாள். அதுமட்டும் அல்ல; புத்திசாலியான அவள் கொஞ்ச நாட்களில் தேசத்தையும் தேசத் தொண்டையும் பற்றிக் கொஞ்சம்கொஞ்சம் புரிந்துகொண்டும் விட்டாள். கிருஷ்ணசாமி அவளுடைய பெருமையை உணர்ந்து மனம் பூரித்துப் போனார்.

நாட்கள் செல்லச் செல்ல ரசிக உள்ளம் படைத்த கிருஷ்ணசாமியின் மனத்திரையில் அறிவும் அழகும் ஒருங்கே அமைந்தவளான முத்தம்மாவின் உருவம் பதிந்தது. அல்லும் பகலும் அவருடைய மனம் அவளை நினைந்து நினைந்து இல்லாத கோட்டைகள் எல்லாம் கட்டிற்று. "ஆகா! முத்தம்மாவின் முகத்தில்தான் என்ன குறுகுறுப்பு! என்ன சுறு சுறுப்பு! அவளிடம் ஒரு தலைவிக்கு வேண்டிய லட்சணங்களெல்லாம்......"

இப்படியெல்லாம் இடைவிடாமல் அவளைப் பற்றியே யோசித்து வந்த கிருஷ்ணசாமியின் உள்ளத்திலே கள்ளம் புகுந்து கொண்டது.

ஒரு நாள் வெளியே வெக்கைக் காற்று வீசிக்கொண்டிருந்தது. நாற்புறமும் நல்ல அமைதி நிலவியிருந்தது. கிருஷ்ணசாமிக்குத் தனிமையாயிருக்கும் சந்தர்ப்பம் கிடைத்தது. அந்தச் சமயம் முத்தம்மாள் அவருடைய அறையைச் சுத்தம் செய்ய நுழைந்தாள். கிருஷ்ணசாமியை உணர்ச்சி உந்தித் தள்ளவே, முகத்தில் அசடு வழிய, இடது கையால் தலையைச் சொறிந்து கொண்டு, "முத்தம்மா!" என்று கூப்பிட்டார். அப்பொழுது அவர் குரலில் ஒரு நடுக்கம் தொனித்தது.

முத்தம்மாவிடம் முகத்தைக் கொண்டே அகத்தின் ஆழத்தை அறிந்து கொள்ளும் அபாரத் திறமை இருந்தது. அவள் என்றைக்காவது ஒரு நாள் இப்படி நடக்கும் என்று எதிர்பார்த்திருந்தாள். இருந்தாலும், ஒன்றும் தெரியாதவள் போல், "என்னங்க, எசமான்!" என்றாள்.

"வந்து, ...வந்து..." என்று இழுத்த வண்ணம் கிருஷ்ணசாமி மேலே பேச ஓடாமல் ஒரு ஐந்து ரூபாய் நோட்டை எடுத்து முத்தம்மாளிடம் நீட்டினார்.

"எதற்குங்க இந்த ரூபாய்!" என்று கேட்டாள் முத்தம்மா, அப்பொழுதும் அறியாதவளைப்போல.

"உன் அன்பு......" என்று அவர் ஆரம்பிப்பதற்கு முன்னதாகவே, முத்தம்மா கோபத்தில் கொதித்தெழுந்து, "என்னங்க, எசமான்! ஊருக்கெல்லாம் உபதேசம் செய்யும் நீங்கள் கூட......" என்று ஆரம்பித்தாள்.

அதற்குள் கிருஷ்ணசாமியின் முகத்தில் வெறி தாண்டவமாடுவதாகத் தோன்றவே, இனி இங்கிருந்தால் தனக்கு ஆபத்துத்தான் என்றெண்ணி வெகு





வேகமாக அங்கிருந்து வெளியேறிவிட்டான். அந்தச் சம்பவத்தை நினைக்க நினைக்க அவன் மனத்தை என்னவோ செய்தது; ஏதோ துளைத்தது.

வீட்டுக்கு வந்ததும் மாரிமுத்துவின் எதிரே சென்று முத்தம்மா 'கோ'வென்று கதறி விசித்து விசித்து அழலானாள். மாரிமுத்துவுக்கு ஒன்றும் விளங்கவில்லை. அவன் பதட்டமடைந்து, "உன் மேல் ஆணை. உண்மையைச் சொல்லு! எந்தப் பயல் உன்மேல் கண்ணைப் போட்டான், சொல்லு! அவன் கண்ணைக் கொத்திக் கீழே வைத்து விட்டு மறு காரியம் பார்க்கிறேன். இந்தப் பயல்கள் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார்கள், என்னை! மண்டையைப் பதம் பார்த்து விட்டு மறு காரியம் பார்க்கிறேன்!" என்று உறுமினான்.

முத்தம்மா அழுதவாறே எல்லா விவரங்களையும் சொன்னாள். முதலில் மாரிமுத்து வாயைப் பிளந்துகொண்டு அவள் சொன்னதைக் கேட்டுக் கொண்டிருந்தான். பிறகு வெறி பிடித்தவன் போலக் கிருஷ்ணசாமியின் வீட்டை நோக்கி வெகு வேகமாக ஓடினான்.

அப்பொழுது கிருஷ்ணசாமி வராந்தாவில் உட்கார்ந்து கீதையை எடுத்து வைத்துக்கொண்டு படித்துக் கொண்டிருந்தார்.

மாரிமுத்து வாசற்படியில் நின்று, "எசமான்! உங்களிடம் ஒரு விஷயம் கேட்க வந்திருக்கிறேன். ஏழைகளுக்கும் மரியாதை மட்டு உண்டா, இல்லையா! இன்றைக்கு இதைத் தீர்த்துக்கொள்ளத்தான் வந்தேன். ஜெயில் கிடைத்தாலும், தூக்குத் தண்டனை கிடைத்தாலும் எனக்குப் பயம் இல்லை. என்ன தைரியத்தில் என் முத்தம்மாளைக் கெட்ட கண் கொண்டு நோக்கினீர்கள்! நாங்கள் உங்கள் சோற்றைத் தின்றாலும் அதற்குப் பதிலுக்குப் பதில் வேலை செய்துவிடுகிறோமாக்கும்! எங்களுக்கு மரியாதை மட்டு கிடையாதா!" என்று கத்த ஆரம்பித்து விட்டான்.

கிருஷ்ணசாமிக்கு வாய் அடைத்துப் போய்விட்டது. இன்று வரை கிராமத்தில் யாரும் அவருக்கு இம்மாதிரி எச்சரிக்கை விடத் துணிந்ததில்லை. அவர் மெதுவாக வெளியே வந்து இங்கும் அங்கும் பார்த்துக்கொண்டே, "என்ன சொல்கிறாய், நீ!" என்று கேட்டார்.

மாரிமுத்துவின் குரல் வர வர உச்ச ஸ்தாயியை அடைந்தது. கிருஷ்ணசாமிக்கு அந்த அவமானத்தைச் சகிக்க முடியவில்லை. சிறிது நேரம் ஒன்றும் புரியாமல் நின்றவர் கோபமுற்று, "என்னடா சொல்கிறாய்! திருட்டுப் பயலே! என்ன மேலே மேலே பேசிக் கொண்டே போகிறாயே, உதை கேட்கிறதா உனக்கு! இரவு பகல் உங்கள் நலனுக்காகப் பாடு படும் எனக்கு இதுதான் தருந்த மரியாதையோ! உங்களையெல்லாம் செருப்பால் அடிக்கணுமடா, செருப்பால்! மனிதனாக நினைத்து மரியாதை கொடுத்ததனால் துளிர்த்துப் போய்விட்டீர்கள்!" என்று சீறினார்.

கிருஷ்ணசாமி இவ்வளவு இரைந்து பேசவே, மாரிமுத்து பயந்து விட்டான். அவன் முகம் கறுத்துச் சுருங்கியது. இதையெல்லாம் கேட்டுக் கொண்டு வாசற்படியில் நின்று கொண்டிருந்த நடுப்பண்ணை கந்தசாமி "என்ன, அண்ணா! என்ன நடந்தது!" என்று கேட்டார்.

கிருஷ்ணசாமி அதே உணர்ச்சி வேகத்தில், "இந்தப் பயல் வாயைக் கொடுத்து வீண் சண்டைக்கு இழுக்கிறான். 'மாரி முத்து, அந்தப் பலகையை எடுத்து உள்ளே போடடா!' என்று சொன்னதற்கு என்ன பேச்சுப் பேசுகிறான் என்கிறாய். 'இது என் வேலை அல்ல' என்கிறான், 'உன் வேலைதான். நீதான் செய்யவேண்டும்' என்று நான் கோபிக்கவே, அப்பா அம்மாவை இழுக்க ஆரம்பித்து விட்டான். உனக்குத் தெரியும். நான் பல வருஷங்களாகக் காந்தி வழியைப் பின்பற்றுகிறவன், மானிட சமூகத்துக்குச் சேவை செய்வது தான் என் நோக்கம் என்று. இந்தப் பயல்களுக்காக நான் இரவு பகல் என்று பார்க்காமல்

கோர்ட்டிலும்...



வீட்டிலும்...

வேலை செய்தேனே, அதற்குப் பதிலாக இந்தப் பயல்கள் நடக்கும் முறையைப் பார்த்தாயோ, இல்லையோ! காவாலிப் பயல்! கட்டி வைத்து உதைக்கனும்!" என்றார்.

நடுப் பண்ணையாருக்குக் கோபம் தலைக்குமேல் வந்துவிட்டது. "ஏண்டா, உனக்கு இவ்வளவு துணிச்சல் வந்து விட்டதாடா! இவரைக் கிராமம் முழுவதும் தெய்வமாக நினைக்கிறது. இவரை 'அப்பா, அம்மா' என்று திட்ட நீ யாரடா! உதை வாங்கினால்தான் உனக்குப் புத்தி வரும்!" என்றார். அவர் வஸ்தாது அல்லவா! அதைச் சொன்னதும் உடனே ஆத்திரத்துடன் மாரிமுத்துவைப் பிடித்துக் கீழே தள்ளிக் காலால் உதைக்கவும் தொடங்கி விட்டார்.

இதே சமயம் இந்த விஷயங்களை அறிந்த சின்னப் பண்ணைக் காளிமுத்து வெளியே வந்து, "என்ன அண்ணா! என்ன சமாசாரம்!" என்றார்.

இந்தப் பயல்,—காளிமுத்து,—இந்தப் பயல் நம் அண்ணனை வாயில் வந்தபடி வையத் தொடங்கி விட்டான். அது மட்டும் அல்ல; அடிக்கக் கூடப் போய்விட்டான். நான் மட்டும் சரியான சமயத்துக்கு வரவில்லை என்றால் கிருஷ்ணசாமி அண்ணனைக் கொலை செய்திருப்பான்" என்றார் கந்தசாமி.

காளிமுத்துவுக்கு அதைக் கேட்ட மாத்திரத்தில் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. "இந்தப் பயலுக்கு இத்தனை துணிச்சலா! இவன் கொலை செய்து விடுவானோ! இரண்டு துண்டாக வெட்டிப் போட்டுவிட மாட்டேனா!" என்று சொல்லிய வண்ணம் கீழே கிடந்த மாரிமுத்துவைச் செருப்பால் அடிக்கத் தொடங்கி விட்டார். அது மட்டும் அல்ல; வாயில் வந்தபடியெல்லாம் உரத்த குரலில் வைய வேறு தொடங்கி விட்டார்.

இந்தக் குழப்பத்தை அறிந்து கிராமத்து மக்கள் சிலர் கூடிவிட்டனர். பக்கத்துக் கிராமத்திலிருந்து ஏதோ வேலையாக வந்தவர் ஒருவர் "இங்கே என்ன கலவரம்!" என்று கேட்டார்.

"என்ன சொல்வது, ஐயா! காலம் மாறிப் போச்சு! இவன் நம் பெரிய பண்ணை வீட்டில் வேலை செய்து வருகிறான். இன்று அண்ணாவிடம் போய் உன் கையிலிருக்கிற காசை எல்லாம் எடுத்துக் கீழே வை. இல்லாவிட்டால் கொன்று போட்டு விடுவேன் என்று பயமுறுத்தினானாம். அண்ணா அமைதியாக ஏதோ கேட்கவே, அதற்குள் அவர்மீது கை வைத்து விட்டான். நல்லவேளையாக அதற்குள் நாங்கள் வந்து விட்டோம். எங்கள் மேல்கூடக் கொலையாளியைப் போலப் பாய்ந்தான். நாங்கள் மூன்று பேராக இருந்தோமோ, பிழைத்தோமோ! இவன் இந்தக் கோணல் கட்சிக்காரர்களோடு கலந்து விட்டான் என்று எனக்குத் தெரியும். கொலையும் கொள்ளையும் அடித்து நம் நாட்டைக் கெடுத்துக் குட்டிச்சுவராக்குவதுதான் இவன் நோக்கம். இப்பொழுதே இவனைப் போலீஸின் கையில் பிடித்துக் கொடுத்து விட்டு மறு காரியம் பார்க்கிறேன், பார்!" என்றார் சின்னப் பண்ணை காளிமுத்து.

"நியாயந்தானே! அவர் சொல்வதில் என்ன தவறு! இந்த உலகத்தில் எங்கேயாவது ஏழை சொல் அம்பலம் ஏறுமா! மாரிமுத்து எவ்வளவுதான் தன் நிலைமையை விளக்கிச் சொல்லட்டுமே! அது யாருக்காவது உண்மையாகப் படுமா! கையில் நாலு காசு உள்ளவன் சொல்லும் பொய்தானே மெய்யாகத் தோன்றுகிறது! உலகத்தின் இயல்பே இப்படி யிருக்கும்பொழுது யார் யாரைக் குறை கூறி என்ன பயன்!

## ஆதரவு அவசியம்




அன்று காலனை உதைத்து விரட்டி மார்க்கண்டனைக் காப்பாற்றிய சிவனைப்போல் இன்று கொடும் புயலினால் பாதிக்கப்பட்டவர்களைக் காப்பாற்றப் பொது மக்கள் முன்வரவேண்டும்.

# நீங்கள் இன்று உங்கள் பற்களை
# மக்ளீன் செய்தீர்களா?



"... நான் மக்ளீன்ஸ் பற்பசை உபயோகிக்க ஆரம்பிக்கும் முன்பு என் பற்கள் மஞ்சள் நிறமாகவே இருந்தன; இப்போது நான் ஒவ்வொரு தரம் சுத்தம் செய்யும் போதும் அவை அதிக வெண்மையாகி வருகின்றன"

மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை அதிசுத்தமானது. பற்களைச் தேயச்செய்யும் பொருள்கள் கலப்பற்றது. உங்கள் பற்கள் வெண்மையாக விளங்கும்படி லாவகமாக அது சுத்தம் செய்ய வல்லது. மேலும் வாயில் ஊறும் அபாயகரமான அமிலங்களைக் களைந்து பற்கள் பழுதடைவதைத் தடுக்கும். மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை மூலம் உங்கள் பற்கள், ஈறுகள் ஆகியவற்றைப் பாதுகாத்துக்கொள்ளுங்கள். தினந்தோறும் இரண்டு தடவை உபயோகியுங்கள். அது பற்களை வெண்மையாக்குகிறது.

இப்போது பெரிய அளவிலும், சிக்கனமான மாபெரும் அளவிலும் கிடைக்கிறது.




**பற்களை அதிக வெண்மை யாக்குகிறது**

வர்த்தக விவரங்களுக்கு:-

ஜே. எல். மாரிஸன், ஸன் அண்ட் ஜோன்ஸ் (இந்தியா) லிட்.,
தபால் பெட்டி 6527, பம்பாய் 26, தபால் பெட்டி 387, கல்கத்தா
தபால் பெட்டி 1370, மதராஸ்.

HTY-14 TAM.



டி.என். சுந்தரேசய்யர்



R.K. விஸ்வநாத சர்மா



திருவாளப்புத்தூர் கிருஷ்ணமூர்த்தி



வி. சேதுராமய்யா.



R.K. வெங்கட்ராம சாஸ்திரி





R.S. கோபாலகிருஷ்ணன்

# வெள்ளி விழா வித்வத் கோஷ்டி



T.S. சம்பந்தம் பிள்ளை



கண்டதேவி அளகிரிசாமி



கோவை தக்ஷிணாமூர்த்தி



லால்குடி ஜெயராமன்



டி. பாலசுப்பராயடு



வி. தியாகராஜன்



சாளக்குடி நாராயணசாமி



திருக்கோடிக்காவல் கிருஷ்ணமூர்த்தி



கோமளவல்லி சீனிவாஸன்



டி. என். மணி



P. ராமச்சந்திரய்யர



பாபனாசம் பாலசரஸ்வதி

# வெள்ளி விழா வித்வத் கோஷ்டி



கும்பகோணம் சீனிவாஸன்



V. ராஜம் அய்யர்



ராமநாதபுரம் வெங்கடாசலம்



திருவனந்தபுரம் ஹரிஹரன்



C. V. தனலக்ஷ்மி





[illegible]புரம் கிருஷ்ணமூர்த்தி

[illegible] சாஸ்திரி




நல்ல சங்கீத ஞானம் நிறைந்த பெண்ணுக்குப் பாட்டை வெறுக்கும் கணவன் அமைவதுதான் வழக்கம்.

அந்த வழக்கத்துக்கு விரோதமாக அவள் கணவன் சுந்தரம் சாதாரண நிலையில் இருந்தாலும் மனைவியின் சங்கீதத்தை அனுபவித்து ரஸித்து ஆதரித்து வந்தான். இது பார்வதம்மாளின் மனத்துக்கு ஆனந்தத்தைக் கொடுத்தது. கலாவின் சங்கீதம் ரஸிகர்க ளெல்லாம் போற்றும் மிக உயர்ந்த நிலையை அடைந்தது.

கலா—சுந்தரத்தின் வாழ்க்கைப் படகு இல்லற சாகரத்தில் ஆனந்தமாக மிதந்து கொண்டிருந்தது. அந்த வாழ்வுக்கு மேலும் ஏற்றம் கொடுத்து இன்பமளிக்கக் குழந்தை சோபா தோன்றினாள்.

சோபா பிறந்தது முதல் கலாவின் மனத்தில் ஒரு மாற்றம் ஏற்பட்டது. "குழல் இனிது யாழ் இனிது என்ப தம் மக்கள் — மழலைச் சொல் கேளாதவர்" என்ற பொய்யா மொழியின் வாக்கை உணர்ந்து அநுபவிக்கத் தொடங்கினாள். கலாவுக்கு முன்போல் சங்கீதத்தில் அவ்வளவு மோகம் பிறக்கவில்லை. தன் குழந்தையின் மோகனச் சிரிப்பும் அதன் மழலை மொழியும் அவளை மயக்கி விட்டது. அதில் காணும் இன்பத்தை அவள் வேறு எதிலும் காணவில்லை.

அம்மா எப்போதாவது பாடச் சொன்னால் "அதற்கென்னம்மா? பாடுகிறேன்" என்று அசிரத்தையாகச் சொல்லுவாள். அதே சமயத்தில் குழந்தை சோபாவைத் தொட்டிலில் போட்டுவிட்டு மணிக் கணக்காகத் தாலாட்டி மகிழ்வாள். அவள் பாட்டைக் கேட்டுக் குழந்தை காலையும் கையையும் ஆட்டிச் சிரிக்கும்போது, ஆயிரமாயிரம் ரஸிகர்கள் கைதட்டி ஆரவாரிக்கும்போது உண்டாகும் ஆனந்தத்தை அடைந்து மகிழ்வாள்.

பார்வதம்மாளுக்கோ தன் பெண் சங்கீத உலகில் கீர்த்தி மாலை சூடவேணும், பொருளைக் கொண்டு வந்து குவிக்கவேணும் என்ற பேரவா அதிகமாகிக் கொண்டே வந்தது. அதனால் கலாவுக்குத் துணையாக அவளுடனேயே இருந்து விட்டாள். கச்சேரிகளுக்கெல்லாம் பார்வதி அம்மாளே கலாவுக்குத் துணையாகச் சென்று வந்தாள். சபையில் கலாவின் சங்கீத ஞானத்தைப் பற்றி யாராவது புகழ்ந்து பேசும்போது அவள் உச்சி குளிர்ந்துவிடும். கச்சேரி செய்த பணத்தை வாங்கிக் கலா தன் அம்மாவிடம் கொடுப்பாள்.

"உங்கள் பெண் நேற்று அபாரமாய்ப் பாடினாள். அவள் குரலில் வழக்கத்தை விட உருக்கமும், குழைவும் அசாத்தியமாக இருந்தது. குழந்தையை நேரில் பார்த்து ஆசிர்வதிக்கத்தான் வந்தேன்."

"நேற்றெல்லாம் என் பேரக் குழந்தைக்கு ரொம்பவும் ஜுரம். கலா பாட இஷ்டப்படவேயில்லை. என்ன செய்வது? கொடுத்த வாக்கை மீற முடியவில்லை. அவளுடைய புகழ்ச்சிக்கு அவள் மனமே குறுக்கே நிற்கிறது. மாப்பிள்ளையும் ஊரில் இல்லை. ஏதோ என் பிடிவாதத்தில் வந்து பாடினாள்."

தன் தாயும் தங்களுக்கு அறிமுகமான ஒரு பெரியவரும் இப்படிப் பேசிக் கொண்டது கலாவின் நெஞ்சில் முதல் நாளைய சம்பவத்தின் அலைகளை எழுப்பின.

கலாவுக்கு இயற்கையிலேயே நல்ல சாரீரம். பள்ளிப் படிப்பைவிட அவளுக்குச் சங்கீதத்தில்தான் இஷ்டம் அதிகமாயிருந்தது. தாய்க்கு அவள் ஒரு பெண்ணும், ஒரு பிள்ளையுமிருந்தனர். அந்தக் குடும்பத்தைத் தாங்கும் முழுப் பொறுப்பும் தாயின்மேல் விழுந்து விட்டது. பார்வதம்மாள் தன்னுடைய எளிய நிலைமையில் பிள்ளையையும் படிக்கவைத்துப் பெண்ணுக்குச் சங்கீதமும் கற்றுக் கொடுக்க நாள் முழுவதும் கஷ்டப்பட்டு உழைத்தாள்.

குழந்தை கலாவின் ஞானபாவமும், புத்தி கூர்மையும் கண்டு அதிகச் செலவில்லாமல் வித்வான்கள் தாங்களே மனமுவந்து கலாவுக்குச் சங்கீதத்தைச் சொல்லி வைத்தார்கள். கலாவின் தாய்க்குத் தன் பெண்ணைப் பெரிய பாடகி யாக்கிவிடுவதா? அல்லது கல்யாணம் செய்து கொடுத்துக் குடும்ப வாழ்க்கையில் ஈடுபடுத்துவதா என்பது பெரிய பிரச்னையாக இருந்தது. கல்யாணமும் செய்து கொண்டு பெரிய பாடகியாகவும் இருப்பது ஒன்றுக்கொன்று முரண்பாடான விஷயமில்லை என்பதை அவள் ஒருவாறு தெளிந்தாள்.

அந்தப் பணத்தைக் கையில் வாங்கும்போது பார்வதம்மாளின் உள்ளம் பெருமிதத்தால் விம்மும். தன் எண்ணம் ஈடேறி விட்டதை அவள் முகம் எடுத்துக் காண்பிக்கும்.

ஒரு சமயம் காரியாலயத்தின் முக்கிய வேலையாகச் சுந்தரம் வெளியூர் போயிருந்தான். அச்சமயம் பெரியமனிதர் தலைமை வகிக்கும் ஒரு கலை விழாவுக்குக் கலாவைக் கச்சேரி செய்யும்படி கேட்டார்கள். வலுவில் வரும் பெரும் பாக்கியத்தை நிராகரிக்க முடியுமா? பார்வதம்மாள் பெருமையுடன் அந்தக் கச்சேரிக்கு ஒத்துக் கொண்டாள். கலாவுக்கும் சம்மதம்தான். ஆனால் குழந்தை சோபாவுக்குத் திடீரென்று நல்ல ஜுரம் கண்டுவிட்டது. ஒரு வயது கூட நிரம்பாத குழந்தை, நோயின் வேகம் காரணமாக அரற்றிக் கொண்டே இருந்தது. இதே நிலையில் கலாவுக்குக் கச்சேரி செய்ய இஷ்டமில்லை.

"அம்மா! குழந்தை உடம்பு பூரண குணம் ஆனால்தான் என்னால் பாட முடியும். தயவு செய்து அந்தக் கச்சேரிக்கு வர முடியாது என்று சொல்லி விடு, அம்மா!" என்று சோகத்தோடு சொன்னாள் கலா.

பார்வதம்மாள் "குழந்தை என்று இருந்தால் நோய் வராமல் இருக்குமா? அதற்காக ஏற்றுக் கொண்ட கச்சேரிக்குப் போகா விட்டால் பெயர் கெட்டுவிடும். நாளைக்கு நம்மைத் தேடி யாரும் கச்சேரிக்குக் கூப்பிட மாட்டார்கள்" என்று சொல்லி விட்டாள்.

அம்மாவின் ஆர்வம் கலாவுக்குப் பிடிக்கவில்லை. அந்தச் சமயம் அம்மா அவளுக்கு ஒரு பயங்கர ராக்ஷஸியாகத் தோற்றமளித்தாள். சாதாரண நாட்களிலேயே குழந்தையை எடுத்துக் கொஞ்சும்பொழுதெல்லாம் அவள் அம்மா அதை வாங்கிக் கொண்டு "நீ போய்ப் பாட்டைச் சாதகம் செய்" என்று சொல்வதுண்டு. இதுவே கலாவின் இதயத்தில் சிறிது கசப்பை உண்டாக்கி வைத்திருந்தது. அது இப்பொழுது பயங்கரமாக விச்வரூபம் எடுத்து விட்டது.

அவள் பெண்மனம் "தன்னைப் போன்ற பெண்கள் தங்கள் குழந்தைகளை வைத்துக் கொஞ்சி விளையாடவில்லையா? இயற்கை கொடுத்த செல்வத்தைத் தேடி அலைகிறதே இந்த மக்கள் மனம். ஒரு தாய்க்குக் குழந்தை வாஞ்சை எப்படிப் பட்டதென்று தெரியாதா? வித்தை வந்துவிட்டால் சுதந்திரமே கிடையாதா? சூழ்ந்து இருப்பவர்கள் அந்த வித்தையைக் கொண்டு தங்களுக்குப் பிரதானம் தேடிக்கொள்ள நினைப்பதா மனித குணம்? இவளும் பெண். இரண்டு குழந்தைகளைப் பெற்று வளர்த்திருக்கிறாள். நோயுற்ற குழந்தையைத் தனியே விட்டு விட்டுக் கச்சேரி செய்யும்படி என்னைக் கட்டாயப்படுத்த இவள் மனம் என்ன கல்லா? அல்லது இரும்பா? எனக்கு ஏன் கஷ்டப்பட்டுச் சங்கீதத்தைச் சொல்லி வைக்கணும்? பிற்காலத்தில் என்னைக் கொண்டு அவள் பெருமைப்படுவதற்கு ஒரு திட்டமா? ஒரு பெண்ணால் பேரன் பேத்தியைத் தாங்கி நிற்கும் பெண்களைக் கண்டு பெற்றவள் மனம் ஆனந்தமடையாதோ? 'குழந்தைக்கு நாளைக்கே சரியாய்விடும். இம்மாதிரி சந்தர்ப்பம் வருமா?' என்கிறாள். வராவிட்டால் வேண்டாமே. நான் நான்கு மணி நேரம் நோயால் தவிக்கும் குழந்தையைத் தனியே விட்டுவிட்டு, வேறு யாரிடமோ ஒப்பித்து விட்டுப் போனால் அதன் விளைவு என்ன ஆகும்? குழந்தையை இழக்கும்படி நேர்ந்தால் அம்மாவால் என்ன செய்ய முடியும்?" இப்படி நினைக்கும்பொழுது அவள் நெஞ்சம் துக்கத்தினால் விம்மி எழுந்தது. கண்களிலிருந்து கண்ணீர் பொங்கி வழிந்தது. வழிந்த கண்ணீர் மடியில் படுத்துக் கொண்டிருக்கும் குழந்தை மேல் விழுந்தது. உடனே கண்ணைத் துடைத்துக் கொண்டு குழந்தையைப் பார்த்தாள். தன்மேல் விழுந்த கண்ணீரைக் கூட உணருவதற்கு வேண்டிய உணர்ச்சி அதனிடம் இல்லை. நோயின் வேகம் தாங்காமல் குழந்தை முனகுவது அவள் இதயத்தையே பிளந்து விடும் போலிருந்தது.

ஏன், அம்மாவிடம் ஒரே அடியாய்க் கச்சேரிக்கு வரமுடியாது என்றால் என்ன? ஒரு தாயின் இதய உணர்ச்சியை உணராத இவளும் ஒரு அம்மாவா? இப்படி என்ன என்னவோ எண்ணித் தவித்தாள் கலா.

அந்தச் சமயம் டாக்டர் வந்து பார்த்தார். "சாதாரணமான ஜுரம் தான். இது நாளைக்கே சரியாய் விடும்" என்று சொன்னார்.



பார்வதம்மாள் பெருமையுடன் வாசல்வரை போய் வந்தாள். ஆனால் இதெல்லாம்கூட ஒரு நாடகம் மாதிரி கலாவின் பெற்ற மனம் எண்ணியது. டாக்டர் பொய்ச் சாட்சி கூறுகிறார். அம்மா பேராசை பிடித்து அலைகிறாள். இவர்கள் ஆட்டுவிக்கும் கருவியா நான் என்று பொருமினாள். தன் கணவனும் ஊரில் இல்லாதது அவளுக்கு அநாதரவாக இருப்பது போல் தோன்றியது. அவள் மனம் பதறியது. அக்கம் பக்கத்து மக்களெல்லாம் பார்வதம்மாள் பக்கம்தான் பேசினார்கள்.

"சிறு வயது. அதிலும் முதல் குழந்தை. அதனால் தான் பயப்படுகிறாள். ஒரு

விளையாட்டுக்கு ஒரு வியாதி வராமல் குழந்தைகள் வளருமா? குழந்தைகளுக்குப் பால் கொடுப்பதுடன் இருப்போம். நோவோ, நொடியோ எல்லாம் பெரியவர்கள்தான் பார்த்துக் கொள்வார்கள். இந்தக் காலத்துப் பெண்களுக்கு ஒன்றும் தானவில்லை. தங்கம் போல் பாடிவிட்டு வாம்மா'' என்று லக்ஷ்மிப்பாட்டி வேறு அம்மாவுக்குத் தகுந்தபடி பேசினாள்.

கலாவுக்கு, 'குழந்தைக்கு நோய் நொடி வராதென்று யார் சொன்னார்கள்? அம்மா இட்ட இருக்க விடாமல் செய்கிறீர்களே அது தான் கொடுமை' என்று கத்தவேணும் போலிருந்தது. ஆனால் வார்த்தைகள் தொண்டையை விட்டு வராமல் மறியல் செய்தன.

பர்வதம் மூக்கைச் சிந்த ஆரம்பித்தாள். கலாவுக்கு எப்பொழுதும் தன் தாய் ஆதியில் பட்ட கஷ்டத்தைக் கேட்க மனம் உருகும். இன்று அதுகூட சாகஸம் என்றுதான் தோன்றியது. தானும் எல்லாப் பெண்களைப் போல் இல்லாமல் சங்கீதத்தைக் கற்றுக் கொண்டு அதற்கு அடிமை ஆகிவிட்டோமே. கச்சேரி செய்யாவிட்டால் பெரிய மனிதர்கள் பொல்லாப்பு ஏற்பட்டுவிடும் என்கிறாள் அம்மா.

ஆகட்டுமே, மனமே கட்டுக் கடங்காமல் இஷ்டப்படி சிந்திக்கும் சக்தி வாய்ந்தது. சந்தர்ப்பத்துக்குத் தகுந்தபடி தாவும். அதற்குக் கலா மட்டும் விதி விலக்கா? அவள் மனமும் நிலை தடுமாற ஆரம்பித்தது. பாட்டைத் தடி எடுத்து அடித்துப் பாடச் சொல்ல முடியுமா? இவர்கள் என்ன புலிகேசி வம்சமோ? சாட்டையால் அடித்து நாற்சந்தியில் சிவகாமியை ஆட வைத்தானே, மகா பாவி! அவனுக்கும் இவர்களுக்கும் என்ன வித்தியாசம். எந்தக் காலத்திலும் வித்தை கீர்த்தியை மட்டும் கொண்டு வருவதில்லை. அத்துடன் அடிமைத் தனத்தையும் சேர்த்துக் கொண்டுதான் வருகிறது என்றெல்லாம் கூட நினைத்து வேதனைப்பட ஆரம்பித்தாள்.

மனக் குழப்பத்தைத் தவிர்க்க ஒரு பத்திரிகையைப் படிக்க எடுத்தவள் முதல் பக்கத்தில் "நோயுற்ற குழந்தைகளுக்கு முதல் சிகிச்சை தாயின் அரவணைப்புத்தான்'' என்று போட்டிருந்தது. பத்திரிகையைப் பெரு மூச்சுடன் விசிறி எறிந்தாள்.

மறுநாள் கச்சேரிக்குப் புறப்படும் சமயம். குழந்தைக்கு ஆகாரத்தை கொடுத்துப் பக்கத்து வீட்டு லக்ஷ்மிப் பாட்டியிடம் ஒப்புவிக்கப் பட்டது. கலாவின் தாயும் கூஜா சகிதம் கிளம்பத் தயாரானாள். கலாவுக்கு அழுது அழுது கண்கள் சிவந்து இடுங்கிப் போய் இருந்தது. அடக்கிக் கொண்டு தம்பூராவைக் கையில் எடுத்தாள். குழந்தை முனகுவது காதில் விழுந்தது. அப்படியே தம்பூராவை வைத்து விட்டுத் தொட்டில் பக்கம் ஓடினாள். குழந்தையைக் கண்ணீர் பொங்கப் பார்த்து விட்டுக் கிளம்பினாள்.

சபையில் வழக்கத்தை விடக் கூட்டம் அதிகம். அநேக பிரமுகர்கள் விஜயம் செய்திருந்தார்கள். கலாவின் குழப்பம் அதிகரித்து

விட்டது. தம்பூராவின் சுருதி அவள் காதில் குழந்தையின் முனகல் சத்தத்தை நினைவூட்டியது. அதனால் வெகு நேரம் வரை அவளால் சுருதி சேர்க்கவே முடியவில்லை.

பாட ஆரம்பித்ததும் தன்னை மறந்தான். அவன் பாட்டில் ஒரு முறையிடும் சோகமும் சேர்ந்து தொனித்தது. குழந்தையைக் காப்பாற்றக் கடவுளால்தான் முடியும். மனிதக் கூட்டத்தையே நம்பக் கூடாதென்று நினைத்தான். அவ்வளவுதான். பாட ஆரம்பித்தான். தன்னை மறந்து பாடினான். ஏதோ ஆவேசம் வந்தவன் போல் பாடிக் கொண்டே இருந்தான். அவன் பாடிய பாட்டெல்லாம் தெய்வ சந்நிதானத்தில் நின்று கசிந்து உருகிப்பாடும் பக்தனின் மனோபாவத்துடன் பாடும் பாட்டுக்களாகி விட்டன. சபையில் பிரமாத கரகோஷம்; ஆஹாகாரம். தன்னை மறந்து நான்கு மணி நேரம் கச்சேரி செய்து விட்டான். பக்க வாத்தியக்காரர்கள் திணறி விட்டார்கள். பார்வதம்மாள் உள்ளம் பூரித்தாள்.

இரவு பதினொரு மணிக்குக் கச்சேரி முடிந்து வீட்டுக்கு, வந்தவன் குழந்தையிடம் ஓடினான். குழந்தை அமைதியாகத் தூங்கிக் கொண்டிருந்தது. ஜுரம் விட்டிருந்தது.

லக்ஷ்மிப் பாட்டி, "குழந்தை ஒருதரம் வாந்தி செய்து விட்டதால் ஆகாரம் சாப்பிட்டு விட்டு நிம்மதியாகத் தூங்குகிறது. பின்னை நோய்க்குக் கள்ளனில்லை. நாளைக்கே எழுந்திருந்து விளையாடும்" என்றாள்.

கலாவின் தலையிலிருந்து ஒரு பெரிய சுமை இறங்கியது போலிருந்தது.

மறுநாள் பெரிய மனிதர்கள், பிரபலஸ்தர்கள், பத்திரிகை நிருபர்கள், சபா சொந்தக்காரர்கள், யார் யாரோ கலாவின் கச்சேரியைப் பற்றிப் புகழும்போது, பார்வதம்மாளுடன், கலாவும் சந்தோஷப்பட்டான்.

பார்வதம்மாள் தான் இளமையில் கணவனை இழந்து கஷ்டப்பட்டதையும் கலாவை முன்னுக்குக்கொண்டுவருவதற்கு உழைத்ததையும் கலாவிடம் சொன்னாள். தாயின் கஷ்டத்தை உணர்ந்த கலாவின் மனம் இரக்கம் அடைந்தது. குழந்தைக்குச் சரியாகணுமென்று தான் பட்ட கவலையையும், தெய்வத்தினிடம் வேண்டிக்கொண்டதையும் பார்வதி அம்மாள் சொன்னபொழுது கலா மனம் இரங்கிப் பச்சாதாபம் கொண்டான். தன் தாயைப் பற்றி நினைத்த நினைப்பை மாற்றிக் கொண்டான்.

பாவம் அம்மாவுக்கு மட்டும் பொறுப்பில்லையா? தன் பேரக் குழந்தைக்கு வியாதி குணமாகவேணும் என்று அவளுக்கும் தான் மிகுந்த அக்கறை இருந்திருக்கிறது என்பதை உணர்ந்து கொண்டான்.

சோபா காலை உதைத்து விளையாடிக் கொண்டிருந்தான். பார்வதி அம்மாளும் கலாவும் அந்தக் குழந்தையின் குறுநகையில் தங்கள் உள்ளத்தைப் பறி கொடுத்தனர். என்ன இருந்தாலும் கலாவும் எல்லாரைப் போல ஒரு பெண்தானே!




"நான் கீல் வாயுவினால் மிகுந்த அவஸ்தைப் பட்டேன் — அதாவது, உடம்பு பூராவும் உள்ள வலியினால் சில சமயங்களில் வேலைக்கும் போக முடியாமலிருந்தது. நண்பன் ஒருவன் "க்ருஷன்" உப்புக்களை உபயோகித்துப் பார்க்குமாறு சிபாரிசு செய்தான். நான் அவ்வாறே செய்ததில், உடம்பு வலிகள் கொஞ்சம் கொஞ்சமாய் மறைந்து வந்தது. வேலைக்கும் யாதொரு தடங்கலின்றிப் போய் வருகிறேன். நான் முற்றிலும் புதிய மனிதனாய் விட்டதற்கு "க்ருஷ"னுக்கு வந்தனம்." —A. R.

விஷத்தன்மை கொண்ட கழிவு பதார்த்தங்கள் சரிவர வெளித்தள்ளப் படாமையால் குடல்களில் தேங்கி, கீல் வாயுவை உண்டாக்குகின்றன. "க்ருஷ"னிலுள்ள ஆறுவித முக்கிய உப்புக்கள் குடல்களையும் மூத்திரக் காய்களையும் சரிவர இயங்குமாறு தூண்டுவதால் இவ்விஷப் பொருள்களை சீக்கிரமாகவும் சுலபமாகவும் வெளியே தள்ளுகிறது. தினந்தோறும் ஒரு சிறு அளவு "க்ருஷன்" டீயிலோ, தண்ணீருடனோ உட்கொள்ளுவது உங்களைக் கீல் வாயுவினின்றும் விடுவிக்கும்.

**"க்ருஷன்"** உங்களை ஆரோக்யத்துடனும் சந்தோஷத்துடனும் இருக்க உதவுகிறது

KSM—1




தேவகியின் உள்ளம் கட்டுக் கடங்காத பொறுமையினாலும், துக்கத்தாலும் தவித்துக் கொண்டிருந்தது. கடந்த சில நாட்களாகவே அவள் இம்மாதிரியான மனோ நிலையில்தான் இருந்து கொண்டிருக்கிறாள். இன்று அவள் பொறுமைக் குணத்தின் எல்லைக் கோட்டையே தொட்டு விட்டாள் என்றால் அது சற்றும் மிகையாகாது. அன்பும் பொறுமையும் உருவான தேவகியின் மனமாற்றம் அவளுடைய கணவனுக்கும், மாமியாருக்கும் தெரியாமல் இல்லை. ஆனால் அவர்கள் மனசில் சற்றும் களங்கமில்லாததால் தேவகிக்கு உடம்பில் ஏதோ கோளாறு, அதனால்தான் முன் போலச் சுமுகமாக இல்லாமல் சதா சிடுசிடுப்பாகவே இருக்கிறாளென்று நினைத்துத் தேவகியின் கோளைத் தீர்க்க எந்த டாக்டரைக் கூப்பிடலாம் என்ற யோசனையில் மூழ்கி யிருந்தனர்.

அன்று மத்தியானம் சாப்பாடெல்லாம் முடிந்த பிறகு, தேவகி தனியே புரண்டு புரண்டு படுத்தாள். சற்று நேரம் பொழுது போக்க ஏதாவது புஸ்தகம் படிக்கலாமென்று நினைத்துப் புஸ்தகத்தை எடுத்தாள். அதிலும் மனம் போகவில்லை. மணி மூன்று அடித்த சத்தத்தைக் கேட்டு விழித்துக் கொண்டு பரபரப்பாக எழுந்தாள். மாமியார், கணவன், நாத்தனார் முதலியவர்கள் வெளியேயிருந்து வரும் நாழியாகிவிட்டதென்று அவர்களுக்குக் காப்பி தயாரிக்கச் சமையலறைக்குச் சென்றாள். குமுட்டியைப் பற்ற வைத்த தேவகி பில்டரில் காப்பிப் பொடியைப் போட்டுவிட்டு, கெட்டிலில் ஜலத்தை நிரப்பிக் குமுட்டியில் வைத்து விட்டு விசிறிக் கொண்டே மனத்தில் கடந்த ஒரு மாதத்திய சம்பவங்களை நினைத்துப் பார்க்க ஆரம்பித்தாள். கெட்டில் ஜலம் தளதள வென்று கொதிப்பது போலவே அவள் மனமும் துக்கத்தால் கொதித்தது. நீண்ட பெரு மூச்சு விட்டவாறு ஜலத்தைப் பில்டரில் கொட்டி மூடினாள். அவளுடைய மனமும் எண்ணச் சுழல்களிடையே அகப்பட்டுத் தத்தளித்துக் கொண்டிருந்தது.

தேவகிக்குக் கல்யாணம் ஆன நாள் முதல் இது வரை அவள் மாமியார், கணவன் முதலியவர்களுடன் ரொம்பவும் அன்பாகவும், மரியாதையாகவும் பாங்காகக் குடித்தனம் நடத்திக் கொண்டு வந்தாள். ஒரு மாதத்துக்கு முன்பு தேவகியின் நாத்தனார் கல்யாணி கல்கத்தாவிலிருந்து பிறந்தகம் வந்தாள். கல்யாணியும் தேவகியும் ஒத்த வயதுடையவர்கள். ஆகவே இருவரும் இணை பிரியாமல் ரொம்ப ஒற்றுமையாக இருந்தார்கள். இருவரும் வெளியே போனாலும் ஒன்றாகவே போனார்கள். ஒன்றாகவே சாப்பிட்டார்கள். தேவகி தன் நாத்தனாருக்குப் பிடித்த சமையல்களாகச் சமைத்துப் போட்டாள். கல்யாணி எதை மனசினால் விரும்பினாளோ அதை அறிந்து தேவகி செய்கையில் அவள் விருப்பத்தைப் பூர்த்தி செய்தாள். கல்யாணி தன் அருமை மன்னி தன்னிடம் காட்டும் பரிவையும் அபரிமிதமான அன்பையும் கண்டு பூரித்துப் போனாள். நாத்தனாரும் மன்னியும் இருக்கும் அபூர்வ ஒற்றுமையைக் கண்டு தேவகியின் மாமியாரும் கணவன் சுந்தரமும் ஆனந்தத்தால் பூரித்துப் போனார்கள்.

துரதிருஷ்டவசமாக இந்த ஒற்றுமை நீடித்திருக்கவில்லை. தேவகி வந்து பத்து தினங்களாயின. அன்று தை வெள்ளிக்கிழமை யாகையினால் அன்றைய தினத்தில் தன் கை வரிசையை யெல்லாம் காட்டித் திறமையாகச் சமைத்து நாத்தனாருக்குத் தடபுடலாக விருந்து வைக்கத் திட்ட மிட்டிருந்தாள் தேவகி. ஓடி ஓடி உற்சாகமாய் வேலை செய்து கொண்டிருந்தாள். தன்னை மறந்த நிலையில் அவள் வேலை செய்து கொண்டிருந்ததைப் பார்த்த வேலைக்காரி தேவகியினிடம், "அம்மாவுக்குத்தான் பாவம் வேலை சரியா யிருக்கிறது. அதுவும் சின்ன அம்மா வடக்கே யிருந்து வந்ததிலேயிருந்து உங்களுக்கு உட்காரக் கூடப் பொழுது இல்லையே, அம்மா! அதுவும் இல்லாமே நீங்க இப்போ தலை முழுகாமே வேறே இருக்கீங்க! மசக்கைக்காரப் பொண்ணு இப்படி ஓடி ஓடி

வேலை செய்தால் உடம்பு என்னத்துக்கு ஆகும்! பெரியம்மாவுக்குத்தான் இது தெரிய வேண்டாமா! தன் பொண்ணு இப்படி வேலை செய்தா அவங்க சும்மா இருப்பாங்களா! என்ன இருந்தாலும் நீங்க மருமகள்தானே!'' என்று மெதுவாகத் தூபம் போட்டாள் அந்த வேலைக்காரி.

ஆனால் அப்பொழுதும் தேவகி கொஞ்சங் கூட விட்டுக் கொடுக்காமல், "போடி போ! உனக்கென்ன இந்த வம்பெல்லாம்! சின்ன அம்மா வருஷத்துக்கு ஒரு தடவை இப் பக்கம் வருகிறார்கள். இனிமே அவங்களைப் பற்றியோ, பெரியம்மாவைப் பற்றியோ என்னிடம் இந்தமாதிரி யெல்லாம் பேசாதே!'' என்று அதிகாரத் தொனியில் சொல்லி விட்டுத் தன் காரியத்தைப் பார்க்கப் போனாள். தேவகி வேலைக்காரியை அடக்கி விட்டுப் போய் விட்டாளே தவிர, அவளுடைய சொற்கள் மட்டும் தேவகியின் இதயத்தில் லேசாக ஒலித்துக் கொண்டேயிருந்தன. அன்று அவள் பிரத்தியேகமாக எல்லாம் செய்து விருந்து தயாரித்திருந்தால் சமையல் எல்லாம் ஆனபிறகு தன்னுடைய கணவன், மாமியார், நாத்தனார் மூவருக்கும் சேர்ந்து சாப்பிட இலை போட்டுப் பரிமாறினாள். மூவரும் சமையலை மிகவும் ரஸித்துப் புகழ்ந்து கொண்டே சாப்பிட்டார்கள். "அவல் பாயசம் வைத்த மன்னியின் கைக்குத் தோடாதான் செய்து போடவேண்டும்!'' என்று புகழ்ந்து கொண்டே கல்யாணி பாயசத்தைத் தாராளமாக விட்டுக் கொண்டாள். தன்னுடைய சமையலைப் புகழ்ந்தால், அதுவும் புக்ககத்து மனிதர்களே பெருமையாகச் சொன்னால், எந்தப் பெண்ணுக்குத்தான் சந்தோஷம் இராது! தேவகியும் அந்த ஆனந்தத்தில் எல்லாப் பாயசத்தையும் அவர்கள் மூவருக்குமே விழுந்து விழுந்து உபசாரம் செய்து பரிமாறிவிட்டாள். இதை யாரும் கவனிக்கவில்லை.

எல்லாம் சாப்பிட்டு முடிந்த பிறகு கல்யாணி தன் மன்னியினிடம், "நீ உட்காரு மன்னி! நான் உனக்குப் பரிமாறுகிறேன்!'' என்று அன்புடன் சொல்லி, தேவகிக்குச் சாதம்போட்டாள். உள்ளே அவல் பாயசம் கொஞ்சம் கூட இல்லை என்பதை அப்பொழுதுதான் தெரிந்து கொண்ட கல்யாணி பரபரப்புடன், "என்ன மன்னி! உனக்குக் கொஞ்சங்கூடப் பாயசம் வைத்துக் கொள்ளாமல் எங்களுக்கே எல்லாவற்றையும் போட்டு விட்டாயே! இப்படியெல்லாம் செய்யலாமா!'' என்று அங்கலாய்த்தாள்.

"அதனுலென்ன கல்யாணி! உங்களுக் கெல்லாம் பிடித்ததே யென்று போட்டேன். ஒரு நாள் எனக்கு இல்லாவிட்டால் என்ன! இன்னொரு நாள் இதே மாதிரி செய்தால் போச்சு!'' என்றாள் தேவகி. ஆனால் கல்யாணி அதோடு விடுவதாயில்லை. திருப்பித் திருப்பி மன்னி தனக்குக்கொஞ்சங் கூட வைத்துக் கொள்ளாமலிருந்தது பெரிய பிசகு என்றும், இருக்கிறதை எல்லாரும் நிரவிப் போட்டுக் கொள்வதுதான் அழகு என்றும் சொல்லி ஒரு குட்டிப் பிரசங்கமே பண்ணி விட்டாள். நாத்தனார் தன்னிடம் காட்டும் பிரியத்தை எண்ணிப் பூரித்தவாறு ஒன்றும் பேசாமல் மென்னச் சிரித்துக் கொண்டே சாப்பிட்டுக் கொண்டிருந்தாள் தேவகி.



தேவகியின் மாமியாருக்கு அதிகம் பேசுபவர்களைக் கண்டாலே பிடிக்காது. பெண்ணுக்கும் நாட்டுப் பெண்ணுக்கும் அவல் பாயசத்துக்காக அரை மணி நேரமாக நடக்கும் சச்சரவைக் கண்டு பொறுக்காமல், "இந்தா கல்யாணி! உனக்குப் பிடிக்கிறது என்று தனக்குக்கூட வைத்துக்கொள்ளாமல் தேவகி உனக்குப் போட்டிருக்கிறாள்! ஒரு நாள் அவளுக்கு இல்லா விட்டால் என்ன! அதற்கு இவ்வளவு பிரமாதப் படுத்துகிறாயே! பேச்சையே அதிகம் வளர்த்து வழக்கம் பண்ணிக் கொள்ளக் கூடாது! சரி, சரி யென்று விட்டு விட வேண்டும்'' என்று கல்யாணிக்குப் புத்திமதி கூறினாள். ஆனால் அது தேவகிக்கு விபரீதமாகப் பட்டது. மாமியார் தனக்குப் பாயசம் இல்லையே என்று அநுதாபப்படாமல், தனக்குப் பரிந்து பேசுகிற பெண்ணையும் அடக்குகிறாரே என்று அவள் மனசுக்குள் ஆத்திரப்பட்டாள்.

அற்ப அவல் பாயசம் தேவகியின் ஆனந்த வாழ்க்கையில் ஒரு மாசு உண்டாக்கி விட்டது. என்ன இருந்தாலும் பெண், பெண்தான். மாட்டுப் பெண் என்றால் அது ஒரு இளப்பம்தான் என்று தனக்குள் கூறிப் பெருமூச் செறிந்தாள்; மிகவும் வேதனைப் பட்டாள். தன் மாமியார் கல்யாணி வந்த பிறகு தன்னை முன்போல நடத்தி நேசிக்கவில்லை என்ற எண்ணம் அவளை யறியாமல் அவள் மனத்துக்குள் புகுந்து கொண்டது. கல்யாணிக்கு மிதமிஞ்சி உபசாரம் செய்து தன்னை அவமதிப்பதாகக்கூட அவள் மனம் மாமியார் மேல் குற்றம் சாட்டியது. அதன் பிறகு வீட்டில் நடக்கும் சிறு சம்பவத்தையும் தன் பொறாமைக் கண்களாலேயே காணத் தொடங்கினாள். அவள் அந்த வீட்டுக்கு மாட்டுப் பெண் என்ற அடிமை, அவர்களுக்குச் சமமானவள் அல்ல என்று கற்பனை செய்து கொண்டு மாமியார், கணவன், நாத்தனார் முதலியவர்களுடன் கலகலப்பாகப் பழகாமல் தன்னையே அவர்களினின்றும் ஒதுக்கிக் கொண்டு வருத்தப்பட ஆரம்பித்தாள்.

ஒரு நாள் எல்லோரும் சினிமாவுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தார்கள். கல்யாணி உடுத்தியிருந்த நீலநிறப் புடவை தேவகியின் மனசை வெகுவாகக் கவர்ந்தது. தேவகி அந்தப் புடவை நன்றாக இருக்கிறதென்று சுமார் பத்துத் தடவை சொல்லிவிட்டாள். திரும்ப, திரும்பச் சொல்வதையே சற்றும் விரும்பாத தேவகியின் மாமியார், "தேவகி! அந்தப் புடவை நன்றாக இருக்கிறதென்று எத்தனை தடவை சொல்வாய்! உனக்கு அந்த மாதிரிப் புடவை வேண்டுமானால் சமயம் வரும் பொழுது வாங்கினால் போகிறது. கல்யாணியின் புடவையைப் பற்றிச் சொன்னதனால் ஒன்றுமில்லை. வேறு யாரிடமாவது சொன்னால் அவர்கள் காணாது கண்டதுபோல் சொல்கிறாள் என்று உன்னைப் பரிகசிப்பார்கள்!'' என்று சற்றுக் கண்டிப்பான குரலில் தேவகிக்குப் புத்திமதி கூறினாள்.

ஆனால் இந்த வார்த்தை தேவகிக்கு ரொம்பவும் குற்றமாகப் பட்டது. நாத்தனார் எதிரில் தன்னைத் தன் மாமியார் வேண்டுமென்றே அவமானப்படுத்தி விட்

டான் என்று நினைத்து மனசுக்குள் வெகுண்டாள். "வேறு யாராவதாயிருந்தால் நான் நன்றாக இருக்கிறதென்று சொல்லவே மாட்டேன்" என்று தனக்குள் முணு முணுத்துக் கொண்டு பேசாமலிருந்து விட்டாள். முன்மாதிரி தேவகி கல்யாணியுடன்கூடச் சரளமாகப் பழகுவதில்லை. இயந்திரம் போல வேலை செய்துகொண்டு தான் உண்டு தன் வேலை உண்டு என்று இருக்க ஆரம்பித்தாள்.

கல்யாணி எப்போதும்போலவே கலகலவென்று 'மன்னி, மன்னி' என்று இழைந்து கொண்டிருந்தாள். கல்யாணி இன்னும் ஒரு வாரத்தில் புறப்படுவதாக இருந்தது. தூர தேசத்துக்குப் போகும் கல்யாணிக்கு ஒரு வருஷத்துக்குத் தேவையான வற்றல், வடாத்திலிருந்து அப்பளம், ஊறுகாய் வரையில் தயார் செய்யத் தொடங்கினாள் தேவகியின் மாமியார். தேவகிக்குத் தன் மாமியார் கல்யாணிக்காகத் தயார் செய்வதைப் பார்த்து மனத்துக்குள் குமுறினாலும் வெளியே காட்டிக் கொள்ளாமல் தானும் அவளுக்கு உதவி செய்துவந்தாள்

அன்று தேவகியின் மாமியார் கடைக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தாள். கல்யாணியும் புறப்படத் தன்னைத் தயார் செய்துகொண்டிருந்தாள்.

தேவகி மட்டும் தெய்வமே என்று ஓரிடத்தில் உட்கார்ந்திருந்ததைப் பார்த்த அவள் மாமியார் ஆச்சரியத்தோடு, "ஏன் தேவகி! நீ புறப்படவில்லையா! நேரமாகிறதே! கல்யாணியும் ஊருக்குப் போவதற்குள் வேண்டுமென்பதை வாங்கிக் கொள்ளக் கடைக்குப் போகவேண்டு மென்கிறாள். நீ ஏன் இன்னும் வேறு புடவை ஒன்றும் கட்டிக் கொள்ளாமல் உட்கார்ந்திருக்கிறாய்!" என்று கேட்டாள். மனத்தில் குமுறின ஆத்திரத்தைச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டு, "எனக்கு உடம்பு சரியாயில்லை. நான் வரவில்லை!" என்றாள்.

"உனக்கு என்ன செய்கிறது உடம்பு! அது தான் கொஞ்ச நாளாகவே நீ ஒரு மாதிரியாக இருக்கிறாய்! டாக்டரையாவது கூப்பிட்டுக் காண்பிக்க வேண்டும். இந்தப் பிள்ளைக்கும் சதா ஆபீஸைக் கட்டிக்கொண்டு அழத்தான் சரியாக இருக்கிறது. பெண்டாட்டியை எங்கே கவனிக்கிறான்!" என்று தன் பிள்ளையைப் பற்றியும் அலுத்துக் கொண்டு, "நாங்கள்கூட இன்று போகவில்லை. உனக்கு உடம்பு சரியா யில்லாமல் நாங்கள் கடைக்குப் போனாலும் மனசு இங்கேயே இருக்கும்!" என்று அன்பொழுகச் சொன்னாள்.

கல்யாணியும், "ஆமாம் அம்மா! இன்று போகவேண்டாம். மன்னி இல்லாமல் வெளியே போனாலே எனக்குப் பிடிக்கவில்லை!" என்றாள்.

தேவகிக்குத் தர்மசங்கடமாகி விட்டது. அவள் உடம்புக்கு ஒன்றுமில்லை. தன் மாமியார் பெண்ணுக்குக் கடைகளில் வாங்கிக் கொடுக்கப் போகும் நினுசுகளைக் காணப் பிடிக்காமல் தான் வரவில்லை என்று சொன்னாள். இப்போது அவர்களும் போகவில்லை என்கிறார்களே என்று எண்ணியவாறு, "எனக்கு உடம்பு ஒன்றுமில்லை அம்மா! நீங்கள் போய்விட்டு வாருங்கள். கல்யாணி ஊருக்குப் போகும் நாள் நெருங்கிவிட்டது. நான் சற்று நேரம் படுத்துக் கொள்ளவேண்டும் போல் இருக்கிறது. கொஞ்ச நேரம் இளைப்பாறினால் சரியாகிவிடும்" என்று என்னவெல்லாமோ சொல்லி அவர்களை அனுப்ப ஏற்பாடு செய்தாள்.

அரை மனசுடன் இருவரும் கிளம்பினார்கள். கடைக்குப் போவதற்கு முன் பெண்ணும் தாயாரும் ஏதோ குசு குசுவென்று பேசிக் கொண்டார்கள். தேவகியின் பொறாமைக் கண்கள் இதைக் கவனிக்கத் தவறவில்லை. கல்யாணி நீலப் புடவையை, தேவகி ஆசைப்பட்டதைக் கட்டிக் கொண்டு போனாள். அவர்களை அனுப்பிவிட்டுக் கதவைத் தாளிட்டுக் கொண்டு உள்ளே சென்ற தேவகி ஆரம்பத்தில் சொன்னபடி தனக்குள்ளேயே வெந்து கொண்டிருந்தாள்.



வக்கீல்:—அந்தப் பெண் உனக்குப் பதினைந்து அடி முன்னால் நடந்து சென்றதாகவும் சொல்லுகிறாய்! அவள் முகத்தை நீ பார்க்கவே இல்லை என்றும் சொல்லுகிறாய்! ஆனால் அவள் ரொம்ப அழகாயிருந்தாள் என்பது மட்டும் உனக்கு எப்படித் தெரிந்தது?

சாட்சி:—ஏன் தெரியாது? எதிரிலே அவளைப் பார்த்துக் கொண்டே வருகிறவர்கள் முகத்தையெல்லாம் நான் பார்த்துக் கொண்டேதானே வந்தேன்? அதிலிருந்து கண்டுகொள்ள முடியாதா?

சற்று நேரத்துக்கெல்லாம் வாசலில் கதவு தட்டும் சத்தம் கேட்டுப் பரபரப்புடன் கடைக்குப் போனவர்கள்தான் வந்து விட்டார்களென்று நினைத்துத் தேவகி அவசரமாக எழுந்து கதவைத் திறக்கப் போனாள். கதவைத் திறந்தவள் ஆச்சரியத்தால் அப்படியே ஸ்தம்பித்துப் போய் நின்று விட்டாள். சற்றும் அவள் எதிர்பாராமல் அவளுடைய தகப்பனார்தான் கையில் பெட்டியுடன் நின்று கொண்டிருந்தார். தகப்பனாரைக் கண்டவுடன், தன்னை மீறிய சந்தோஷத்துடன் தேவகி அவரை உள்ளே அழைத்துச் சென்று தன் பிறந்தகத்தைப் பற்றி யெல்லாம் ஆவலாகக் குசலம் விசாரிக்க ஆரம்பித்தாள். வீட்டில் ஒருவரும் இல்லாததைப் பார்த்த தேவகியின் தந்தை, "வீட்டில் ஒருத்தரும் இல்லையே! மாப்பிள்ளையும் ஆபீஸிலிருந்து வரவில்லைபோல் இருக்கிறது. உன் மாமியார் எங்கே காணோம்! நீ மட்டும் தனியாக இருக்கிறாயே!" என்று ஆச்சரியத்தோடு தேவகியினிடம் கேட்டார்.

"என் நாத்தனார் கல்யாணி கல்கத்தாவிலிருந்து வந்திருக்கிறாள். அவளும் என் மாமியாரும் ஏதோ சாமான்கள் வாங்க வேண்டுமென்று கடைக்குப் போயிருக்கிறார்கள். என்னையும் வரும்படி கூப்பிட்டார்கள். எனக்கு உடம்பு நன்றாகவே யில்லை என்று நான் போகவில்லை!" என்று சொன்னாள்.

"உன் முகம் ஏனம்மா வாட்டமடைந்து இருக்கிறது! நீ ஸ்நானம் செய்யாமலிருக்கிறாய் என்று கடிதம் வந்தவுடனேயே உன்னைப் பார்க்கப் புறப்பட்டு விட்டேன். அம்மா உனக்கு ஏதேதோ பட்சணங்கள் செய்து கொடுத்திருக்கிறாள். அத்துடன் உன்னைக் கையோடு அழைத்துக் கொண்டு வரச் சொன்னாள். நாகபுரியிலிருந்து கௌசல்யா வேறு வந்திருப்பதால் அம்மாவால் வீட்டை விட்டு வரமுடியவில்லை" என்று அத்யந்த வாஞ்சையோடு சொன்னார்.

"ஆமாம் அப்பா! கேட்க மறந்தே விட்டேனே! கௌஸல்யா அக்கா நாகபுரியிலிருந்து எப்போ

வந்தாள்! இன்னும் எத்தனை நாள் இருப்பாள்! அக்கா வந்தால் என்ன! விமலா மன்னிதான் அம்மாவைவிட இரண்டு பங்கு அதிகமாகக் கவனித்துக் கொள்வாளே! அம்மாவை அழைத்து வரக் கூடாதோ!" என்று கேட்டாள்.

தேவகியின் தந்தை அசுவாரசியத்தோடு சூள் கொட்டிவிட்டு, "உன் மன்னி விமலா முன்பு இருந்தது போலவா இருக்கிறாள்! கௌசல்யா நாகபுரியிலிருந்து வந்ததிலிருந்து முகத்தை உர்ரென்று வைத்தபடியேதான் இருக்கிறாள். குழந்தை தூர தேசத்திலிருந்து வந்திருக்கிறாளே என்று கௌசல்யாவை அதிகப்படியாக உபசரித்து அவளுக்குத் தேவையானவைகளை உன் அம்மா செய்து போடச் சொன்னால் விமலாவுக்குப் பொறாமையா யிருக்கிறது. கௌசல்யா எப்போதுமா இங்கு இருக்கப் போகிறாள்! அவள் இங்கு இருக்கும் ஒரு மாதத்தில் சிரித்த முகமாய் இருந்து விட்டால் விமலாவுக்கு எத்தனை நல்லபேர் கிடைக்கும்! ஆனால் மகராஜி வாயைத் திறந்து ஒரு வார்த்தை அதிருப்தியாகக் காட்டிக் கொள்வதில்லை. எல்லாவற்றையும் முகத்தாலும் விழியாலுமே கட்டுவிடுகிறாள். உன் அம்மாவுக்கு இதெல்லாம் மனசில் ரொம்பத் தாங்கல். உன் அண்ணாவோ பெண்டாட்டியைத் 'தள்ளி நில்லு' என்று சொல்வதில்லை. அதனால் அவள் இன்னும் மிஞ்சிப் போகிறாள். இத்தனை காரணங்களினால் தான் அம்மாவுக்கு வரமுடியவில்லை. உன்னைக் கண்டிப்பாக அழைத்து வரும்படி சொன்னாள்!" என்று மூச்சு விடாமல் சொல்லி முடித்தார்.

தேவகிக்குத் தன் தகப்பனார் மருமகள் மீது வசை புராணம் பாடத்தான் வந்திருக்கிறாரென்று உள்ளத் தெரிந்து விட்டது. உடனே சொல்லத் தெரியாத வகையில் அவள் மனம் குழம்பியது. விமலா மன்னியின் மேல் என்ன தப்பு! தன்னுடைய மனோ நிலையின் பிரதி பிம்பமாக அவள் மனோ நிலையும் இருக்கிறது. கல்யாணிக்குத் தன் மாமியார் பரிந்து செய்யும் போது எவ்வளவு கோபம் வருகிறது! எத்தனை பொறாமை யிருக்கிறது! அப்படியே கௌசல்யாவுக்கு அம்மா செய்யும் பொழுது மன்னிக்கும் அருவையாக யிருக்கிறது. மன்னி சிடுசிடுவென் றிருக்கிறாளென்று அம்மாவுக்கு மனசு ரொம்பத் தாங்கல் என்று அப்பா எவ்வளவு மன வருத்தத்துடன் சொல்கிறார்! அது மாதிரிதானே தன்னுடைய மாமியாரின் அபிப்பிராயமும் இருக்கும்! அப்படியாவது தன் மாமியாராவது நாத்தனார் கல்யாணியாவது பொல்லாதவர்களா! அதுவும் இல்லை. குழந்தை மனம் படைத்த கள்ளங் கபடில்லாத கல்யாணியோடு கலகலப்பாக இராமல் இருந்தது எவ்வளவு பிசகு! எப்பொழுதோ வருஷத்துக்கு ஒரு முறை பிறந்தகம் வரும் அருமை நாத்தனாரோடு சௌஜன்யமாக இருக்க வேண்டியது தன்னுடைய கடமை யல்லவா! நல்ல வேளையில் புத்தி புகட்ட வந்த தெய்வம் தன் தகப்பனார் என்று நினைத்துப் பெருமூச்சுவிட்டாள். இத்தனை நாளாகத் தவறு செய்ததற்கு அவள் மனச்சாட்சியே அவளைக் குத்திற்று. ஒன்றுமில்லாததை யெல்லாம் பெரியதாக நினைத்துக் கொண்டு நம்முடைய ஆனந்த வாழ்க்கையை நாமே அறிவீனத்தால் பாழ்படுத்திக் கொண்டோமே என்று மனம் புழுங்கினாள்.

தேவகி தன் மன வெழுச்சிகளை வெளியே காட்டிக் கொள்ளாமல் தகப்பனாரிடம், "மன்னியும் சிறுகதானே! அவள் அப்படியே ஏதாவது தவறு செய்தாலும் இதைப் பெரிதாகக் காட்டிக் கொள்ளக் கூடாது அப்பா! நானும் வயதில் சிறியவள் தான். தெரிந்தோ தெரியாமலோ எவ்வளவோ தப்புகள் செய்திருப்பேன். அதை யெல்லாம் பெரியதாக எடுத்துக் கொள்ளாமல் ரொம்பவும் பெருந்தன்மையாக என் மாமியார் விட்டு விடுவதால்தான் எங்கள் குடும்பம் சந்தோஷமாக இருக்க முடிகிறது. வராத என் நாத்தனார் இங்கு வந்திருப்பதால் நான் இப்போது அங்கு வரவில்லை அப்பா! என் மாமியார் போகச் சொன்னால்கூடக் கல்யாணியை விட்டு விட்டு நான் வரமுடியாது" என்று உணர்ச்சி வசப்பட்டுக் கூறினாள்.

தேவகி கடைசியில் கூறியதை யெல்லாம் கேட்டுக் கொண்டே வந்தனர், தேவகியின் மாமியாரும், கல்யாணியும். தேவகியின் மாமியார் சம்பந்தியைக் குசலம் விசாரித்து, "தேவகி என்ன சொல்லுகிறாள்!" என்று கேட்டாள்.

"உங்கள் நாட்டுப் பெண்ணைக் கொஞ்ச நாள் அழைத்துப் போகலாமென்று கூப்பிட்டேன். அவள் தன் நாத்தனாரை விட்டு விட்டு வரமாட்டாளாம்" என்றார் தேவகியின் தந்தை.

"ஆமாம்! கல்யாணியும் தேவகியும் இணைபிரியவே மாட்டார்கள். இப்பொழுது கொஞ்ச நாளாகத் தேவகி மசக்கைத் தொந்தரவினால் சுரத்தாக இல்லாமலிருக்கிறாள். தேவகியின் விருப்பப்படியே கல்யாணியோடு சேர்ந்து இருக்கட்டும். கல்யாணி ஊருக்குப் போன பிறகு நீங்கள் வந்து அவளை அழைத்துப் போங்கள்" என்று பெருமை பொங்கச் சொன்னாள் தேவகியின் மாமியார்.

கல்யாணி தான் வாங்கின புடவையைத் தேவகியிடம் கொடுத்துவிட்டு, "மன்னி! உனக்கு ஏதாவது வாங்கித் தரவேண்டுமென்றுதான் உன்னையும் கடைக்குக் கூப்பிட்டேன். உனக்கு உடம்பு சரியில்லை யென்று சொல்லிவிட்டாய்! உனக்குப் பிடித்த இதே மாதிரி நீலப் புடவை வாங்கியிருக்கிறேன். பிடிக்கிறதா பார்!" என்று சொன்னாள். தகதக வென்று சரிகை மின்னும் புடவையைப் பார்த்ததும் தேவகிக்குப் பதில் என்ன சொல்வதென்றே தெரியவில்லை. "இவ்வளவு ரூபாய் செலவழித்து இப்பொழுது எதற்குக் கல்யாணி வாங்கினாய்! உன்னுடைய பவித்திரமான அன்பு ஒன்றே எனக்குப் போதுமே!" என்றாள். உணர்ச்சி மிகுதியால் அவள் கண்களில் நீர் பளபளத்தது.

"இப்பொழுது எதற்காக வாங்கினேன் தெரியுமா மன்னி! கூடிய சீக்கிரம் எனக்கு ஒரு மருமானையோ அல்லது மருமாளையோ நீ கொடுக்கப் போவதாக இன்றுதான் நான் தெரிந்து கொண்டேன். அதற்காக என்னுடைய பரிசை வாங்கிக் கொடுத்தேன். இன்று கடைக்குப் போகும்போது நீ முன்போல இல்லை. ஏதோ மாதிரி வருத்தப் படுகிற மாதிரி இருக்கிறாய் என்று அம்மாவிடம் சொன்னேன். அதற்குள் அம்மாவுக்கு ரொம்பக் கோபம் வந்துவிட்டது. "தேவகி ஒரு நாளும் இப்படி இருக்கவே மாட்டாள். அவளுக்கு மசக்கைக் கோளாறினால் ஒரு மாதிரி சுணக்கமாய் இருக்கிறாள். அவள் மாதிரி கலகலவென்று பழகுபவர்கள் யாரும் இல்லை. அவளைப் பற்றிக் குற்றம் சொல்லாதே!" என்றெல்லாம் அம்மா என்னிடம் சண்டைக்கு வந்து விட்டாள். நீ வந்த பிறகு நான் கூட அம்மாவுக்கு லட்சியம் இல்லை மன்னி! நீ அவளுக்குப் பேரனை கொடுக்கப்போகிறாய் என்று அம்மாவுக்கு ஒரே சந்தோஷம்" என்று சிரித்துக் கொண்டே சந்தோஷமாகச் சொன்னாள் கல்யாணி.

"தங்கமான மாமியாரையும் நாத்தனாரையும் பொறாமைக் கண்களால் பார்த்து வீணாகத் தன் மனத்தையும் சந்தோஷத்தையும் கெடுத்துக் கொண்டோமே என்று வருத்தப்பட்டாள் தேவகி.

Edited Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116 - 119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras

எல்லா வீட்டிற்கும் உகந்த

# ஊறுகாய்



# டி.எஸ்.ஆர்

## ஊறுகாய்



கைதேர்ந்தவர்களால் சிறந்த
முறையில கைபடாமல்
தயாரிக்கப்பட்டு அழகிய
னிஸ் ளைந்த பாட்டில்களில்
விற்கப்படுகிறது




ஒவ்வொருவர் ருசிக்கும் தகுந்த
பல விதங்கள்:

பலகாய்கறி ஊறுகாய்
எலுமிச்சை ஊறுகாய்
மாங்காய் ஊறுகாய்

முதலியவை

இந்த மார்க்கைப்
பார்த்து வாங்கவும்



**டி.எஸ்.ஆர் & கோ., கும்பகோணம்**

சென்னை தேனாம்பேட்டை
காங்கிரஸ் மைதானத்தில் நடக்கும், அகில
இந்திய காதி, சுதேசி அன்டு கைத்தொழில்
பொருட்காட்சியில்
**எங்களது ஸ்டால் நெ. 13 & 14-க்கு**
விஜயம் செய்யத் தவறாதீர்கள்.

**REGD. No. M. 4392**

*Registered as a newspaper in Ceylon*



# "இது மெய்...

## ...நீங்களும் லக்ஸ் டாய்லட் சோப் உபயோகித்து அதிக அழகைப்பெறலாம்"

என்று கூறுகிறார் **சுசீலா**




நிச்சய பலனைத்தரும் ஒரு ஒழுங்கான அழகு பராமரிப்பு இதோ! சுசீலா கூறுவதாவது: "நான் லக்ஸ் டாய்லட் சோப்பின் நறுமணம் கொண்ட வெண்மையான நுரையை சருமத்தின் மேல் நன்றாகத் தேய்க்கிறேன். பிறகு கழுவி, மிருதுவான துண்டினால் துடைக்கிறேன் சருமம் புது அழகைப்பெறுகிறது."

# லக்ஸ் டாய்லட் சோப்

சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்

LTS. 347-X30 TM